கடவுள் துணை.

யூநாநி சூக்ஷம

# சிகிச்சா போதினி.

முதற்பாகம்.



இதனை,

யூநாநி வைத்திய

தாருட்யவிர்த்திபோதினி முதலிய

பல வைத்திய சாஸ்திர கிரந்தகர்த்தாவாகிய

ஹக்கீம்

பா-முஹம்மது அப்துல்லா சாஹிபு

இயற்றி அச்சிட்டனர்.

இது

சென்னை

முஸ்லிம் அபிமானி அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

FIRST EDITION.

1913 ௵



கைவிலை ரூ        வி-பி. ரூ

## விளம்பரம்.



இதனால் சகலமானவர்களுக்குந் தெரியப்படுத்துவது யாதெனில்:—"யூனானி சூக்ஷ்ம சிகிச்சாபோதினி முதற்பாகம்"என்ற இக்கிரந்தம் ௧௮௬௭வரு (௨௫-வது) ஆக்டின் (௨0-வது)பிரிவில்(௬-வது) விதியின்பிரகாரம் இங்கிலீஷ் இலாகாவாகிய மத்ராஸிலும்,

இன்னும் பிரான்சு இலாகாவாகிய புதுச்சேரியிலும், காரைக்காலிலும் காப்பிரைட் ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கின்றது.

ஆகையால், இக்கிரந்தத்தைபாவது, அல்லது, இதை வேறு பாஷையில் மொழிபெயர்த்தாவது, அல்லது, இதில் ஏதேனும் பாகத்தைதபாவது, என் உத்தரவின்றி ஒருவரும் அச்சிடலாகாது. அப்படி அச்சிட்டால், மேற்கண்ட ஆக்ட்டில் சொல்லியிருக்கிறபடி கோர்ட்டின் மூலமாய் அதனாலுண்டாகும் நஷ்டமனைத்தும் வசூல் செய்யப்படும்.

ஹக்கீம். பா - முகம்மது அப்துல்லா.

## விசேஷ விளம்பரம்.

எம்மால் அச்சிடப்பட்டிருக்கும் கிரந்தங்களின் டைட்டில்பேஜில் அடியிற் கண்டிருக்கின்ற என்னு டைய பெயர் எழுதப்பட்டிருக்கும். அவ்விதப் பெ யர் எழுதப்படாத கிரந்தங்கள் மாறுபாடானவையா யிருக்கும்; ஆனதுபற்றி, அப்படிப்பட்ட கிரந்தங்களை க் கொண்டுவந்து கொடுக்குமவர்களுக்கும், அல்லது, அப்படிப்பட்ட கிரந்தங்களை வைத்து விற்பனை செய்பு மவர்களைக் காண்பிக்கு மவர்களுக்கும் தக்க வெகுமதி கொடுக்கப்படும்.

☞ ஹக்கீம் பா - முகம்மது அப்துல்லா.

## புத்தக விளம்பரம்.

இதனடியிற் கண்ட புத்தகங்கள் வேண்டியவர் கள், சென்னை மாபூஸ்கான் தேவடி, அப்புமேஸ்திரி வீதி, 12-வது நெம்பர் கிரகத்தில் இருக்கும் ஹக்கீம்-பா - முகம்மது அப்துல்லா சாஹிபு அவர்களிடத்தில் கை விலைக்கும், வாலியூ பேபபல் போஸ்ட் மூலமாகவு ம் இதனடியிற்கண்ட விலை விகிதப்படி பெற்றுக் கொள்ளலாம்.

| | ரூ. அ. பை. |
|---|---|
| யூனானி வைத்திய தாருட்ய விருத்திபோதினி முதற்பாகம் | 1—5—0 |
| ஷை 2-ஆம் பாகம் | 2—0—0 |
| யூனானி தாருட்டிய விருத்திபோதினித் திறவுகோல் | 0—10—0 |
| பிரமேகநிவாரணபோதினி | 0-12—0 |

| | |
|---|---|
| சிராவக நிவாரண போதினி | 0-13—0 |
| ஆயுர்வேத சிரோமணி யென்னும் வைத்திய சிந்தாமணி முதற்பாகம் | 0-14—0 |
| சரபேந்திர மேக நிவாரணபோதினி | 1—0—0 |
| சரபேந்திர கபமருத்து மஞ்சரி | 0—8—0 |
| சிரோரோக நிவாரண போதினி யென்னும் யூநாநி சிகிச்சாசார சங்கிரகம் | 1--5--0 |
| யூநாநி சிகிச்சாசாரசங்கிரகமென்னும் நயனரோகநிவாரணபோதினி | 1—5—0 |
| பிளேக் சிகிச்சா போதினி | 0—8—0 |
| அநுபோகவைத்திய நவநீதம் முதற்பாகம் | 1—0—0 |
| ஷை இரண்டாம் பாகம் | 1—0—0 |
| ஷை மூன்றும் பாகம் | 1—0—0 |
| ஷை நான்காம்பாகம் | 1—0—0 |
| ஷை ஐந்தாம்பாகம் | 1—2—0 |
| ஷை ஆறும்பாகம் | 1—0—0 |
| ஷை ஏழாம்பாகம் | 1—0—0 |
| வீரமாமுனி வாகடத்திரட்டு முதற்பாகம் | 1—0--0 |
| ஷை இரண்டாம்பாகம் | 1—0—0 |
| மூலரோகச் சிகிச்சா போதினி | 1—0—0 |
| வைத்தியத் திருப்புகழ் | 0-12—0 |
| விஷபேதி நிவாரணி | 0—4—0 |
| கடுக்காய்ப் பிரபாவ போதினி | 0—2—0 |
| அகத்திய மகாமுனிவர் அருளிச்செய் மகாதிராவகம் எண்ணூறு | 1—0—0 |
| அகத்திய மகாமுனி வைத்தியப் பிள்ளைத்தமிழ் | 1—4—0 |
| அகத்தியர் மெய்ஞ்ஞானம் | 1—4--0 |
| அகஸ்தியர் பள்ளு | 1--2—0 |

| | |
|---|---|
| அகத்தியமாமுனி வைத்திய அந்தாதி | 1—0—0 |
| இராஜவைத்திய மகுடமென்னும் தேரையர் எதுகைபமகவெண்பா 1-ம்பாகம் | 1—5—0 |
| ஷை இரண்டாம்பாகம் | 1—5—0 |
| இராஜவைத்திய மகுடமென்னும்தேரையர் எதுகைபமகவெண்பா மூலம் | 0—6—0 |
| தேரையர் வைத்திய மகாகரிசல் | 0—10—0 |
| போகரேழாயிர சூஸ்திர மெழு நூறு | 0—12—0 |
| தன்வந்திரி சூக்ஷம வைத்தியம் | 0—5—0 |
| இலக்க சௌமிய சாகரம் 1-ஆம்பாகம் | 1—0—0 |
| ஷை 2 ஆம் பாகம் | 0—14—0 |
| ஷை 3 ஆம்பாகம் | 0—14—0 |
| ஷை 4 ஆம்பாகம் | 0—14—0 |
| ஷை 5 ஆம்பாகம் | 1—0—0 |
| இரசவாதசிந்தாமணிமுதற்பாகம் | 1—5—0 |
| ஷை 2 ஆம் பாகம் | 1—5—0 |
| கொங்கணர் வாதகாவியம் மூவாயிரம் | 1—8—0 |
| பூகிமுனிச்சுருக்கம் | 0—2—0 |
| இரசவாத மஞ்சரி | 1—2—0 |
| ஞாய அஷ்டாங்க தீபம் | 0—4—0 |
| அசன்பேசரித்திரம் | 0—8—0 |
| மனோவசிய தந்திரம் | 2—0—0 |
| மானிடவசியம் | 2—8—0 |
| சந்திரகாசனைச் சாமர்த்தியத்தால் விழுங்கிய தாசி | 0—2—6 |
| பண்டிதை மெஸ்மரிஸா | 1—0—0 |
| ஹிப்னடிஸ சக்கரம் | 0—5—0 |
| ஞான தரிசனக்கண்ணாடி | 1—0—0 |
| ஹிப்னடிஸத்தட்டு | 0—8—0 |



யூநானி சூக்ஷ்ம சிகிச்சாபோதினி முதற்பாகம்
முதலதிகாரம் அட்டவணை.

| விஷயம். | பக்கம். |
|---|---|



முதலதிகார அட்டவணை
முற்றிற்று.



யூனானி சூக்ஷ்ம சிகிச்சாபோதினி முதற்பாகம்
மூன்றும் அதிகார அட்டவணை.

விஷயம். பக்கம்.

அ.



ஆ.



2

மூன்ரும் அதிகார அட்டவணை
முற்றுப்பெற்றது.



# முகவுரை.

வைத்திய சகோதரர்களே!

இந்த அருமையான நூலை வெளிப்படுத்த நேரிட்டகாரணம் பின்வரும் விஷயங்களால் வெள்ளிடை யலையேபோலத் தெள்ளிதாய் விளங்கும். நம்மால் இது வரையில் வெளிப்படுத்தப்பட்ட பல கிரந்தங்களையும் வாசித்து அவற்றின்படி அவற்றிலுள்ள முறைகளைச் செய்து அவற்றாலுண்டாகும் அநேக நன்மைகளை அநுபவித்து நம்மைப் பலவிதத்தாலும் கனப்படுத்திவரும் நண்பர்கள், தற்காலத்தில் அமெரிக்க, ஆங்கிலேய, பண்டிதர்கள் முதலிய எல்லோராலும் யூநாநி வைத்தியமானது மிக மேன்மையானதெனவும், அது எந்த விதத்திலுங் கெடுதி நேரிட ஏதுவில்லாததெனவும், அங்கீகரிக்கப்பட்டு வருகிறதென்றும், அதனால் அவ் வைத்தியம் நம் தமிழ்நாட்டிலும் பரவவேண்டுமென் றும், யூநாநிவைத்தியகிரந்தங்கள் அறபிபாஷையிலும், பார்ஸிபாஷையிலும், ஹிந்துஸ்தானி பாஷையிலும், அநேகமிருந்தும், அவைகளெல்லாம் தக்க ஆசான்களைப் பலநாள் அடுத்துக்கற்றுக்கொள்ள வேண்டியவைகளா யிருப்பதோடு அந்தப்பாஷைகள் தெரிந்தவர்களுக்கே யன்றிமற்றவர்களுக்குப்பயன்படக்கூடாதவைகளாயிருப்பதால், தமிழ் வாசிக்கத்தெரிந்த இத்தென்னாட்டிலு

ள்ள தமிழ் வைத்தியர்கள், பிறர் உதவி அதிகமில்லாமல் தாம்தாமே யூநாநி வைத்தியத்தை முறைக்கிரமத்தோடு ஆரம்பமாகத் தெரிந்துகொள்ளும்படி ஒரு யூநாநிகிரந்தத்தை வெளிப்படுத்தவேண்டுமென்றும், அதில் வியாதியின் காரணம், லக்ஷணம், சிகிச்சை, முதலியவைகளெல்லாம் அதிக விரிவாயில்லாமல், சுருக்கமாகவும், விளக்கமாகவும், இருக்கவேண்டுமென்றும் பலவகைக் கடிதமுகத்தாலும் நேரிலும் விரும்பிக்கேட்டு வற்புறுத்தி வந்தார்கள்.

ஆனால், அதற்கு அதிக சாஸ்திரபயிற்சியும், அதை விளக்கமாய் வெளிப்படுத்த அதிகக்கல்வித் திறமையும் வேண்டும். அடியேன் அவ்வளவு சாஸ்திரப்பயிற்சியும் சக்தியும் இல்லாதவனாயினும் நமது நண்பர்களின் விருப்பத்தை அவலமாக்கக்கூடாதென்னுங் கருத்தால் பலவிதத்திலும் முயற்சிசெய்து கடவுளினது கிருபையாலும், பெரியோர்களின் ஆசீர்வாதத்தினாலும் நமது வைத்திய நண்பர்களின் சகாயத்தாலும் மேற்கண்டபடி ஒரு யூநாநி வைத்தியநூலை எழுதிமுடித்து 'யூநாநிவைத்திய பாலபோதினி' எனப்பெயரிட்டு அச்சிட்டுவந்தேன். அப்படி அச்சிட்டு வருகையில் அதில் சில விஷயங்களைச் சேர்க்கவேண்டிய நிமித்தத்தால் அது அச்சிடத் தவக்கமாய்விட்டது; அஃதப்படியிருக்க, வேறொருவகையில் மனிதருக்குச் சிரசுமுதல் பாதமீறாகவுள்ள வியாதிகளுக்காம் யூநாநி சூக்ஷமமான சிகிச்சைகள் அற்புதமுறைகள் ஆகியவைகளை வெகுநாளாகப் பல கிரந்தங்களிலிருந்தும் சேகரித்து அவற்றுள் சிலவற்றைத் தனிப்பகுதிகளாக அச்சிட்டும்,

சிலவற்றை எழுதியும் ஒரு புத்தகத்துக்கு ஆகும்படி ஒழுங்குசெய்து வந்தேன்; அப்படி ஒழுங்குசெய்து வந்தவைகளுள் தற்காலம் சில பகுதிகள் ஒரு பாகத்துக்குப் போதுமானவைகளாயிருந்தபடியால் இவற்றை மாத்திரமாவது இப்போது முன்னர் வெளிப்படுத்துவோமெனக்கருதி, அவற்றையெல்லாம் தொகுத்து யூநாநி சூக்ஷ்ம சிகிச்சாபோதினி முதற்பாகம் என்னும் இந்நூலாக வெளிப்படுத்தியிருக்கிறேன்.

இந்த நூலானது அதிக அருமையான முறைகளடங்கியது. மேற்கண்ட யூநாநிவைத்திய பாலபோதினியும், இந்த யூநாநி சூக்ஷ்ம சிகிச்சாபோதினியும் இரண்டு நேத்திரங்களுக்குச்சமானமானவை. ஆயினும், இந்த யூநாநிசூக்ஷ்மசிகிச்சாபோதினி, சித்தமாகக் கையிலிருந்தபடியால் இதனை முன்னர் வெளிப்படுத்தினேன்; யூநாநிவைத்தியபாலபோதினியும்அச்சிலிருக்கிறபடியால் கூடியசீக்கிரம் வெளிவரும்; அந்த யூநாநிவைத்திய பாலபோதினியில் சிரசுமுதல் பாதமீருகவுள்ள அவயவங்களைப்பற்றிய வியாதிகளின் இலக்ஷண சிகிச்சை முதலியவைகளெல்லாம்வகைவிபரமாகச்சொல்லப்பட்டிருக்கின்றன; இந்த யூநாநிசூக்ஷ்ம சிகிச்சாபோதினி பிலோஷி வியாதிகளின்சூக்ஷ்மசிகிச்சைகளெல்லாம்துலக்கமாகச் சொல்லப்பட்டுவருகின்றன. இதுபெரும்புத்தகமாக முடிவுபெறக்கூடியதாயிருப்பதால் இதனைப்பலபாகங்களாகவெளிப்படுத்தக்கருதி, இப்போது இப்பாகத்தை முதற்பாகமென வெளிப்படுத்தியிருக்கிறேன். இதன் அடுத்தபாகங்களும்விரைவில் வெளிவரும். இதன் இரண்டாம்பாகம் இப்போது அச்சாகிவருகிற

அ. நாம் இதற்குமுன் இச்சிகிச்சைகளைத் தனித்தனி அதிகாரமாக வெளிப்படுத்த உத்தேசித்து நாவின்ரோ கச்சிகிச்சையிலிருந்து இரைப்பை ரோகச்சிகிச்சை வரையில் ஒரு சிறுபுத்தகமாக அச்சிட்டிருந்தோம்; இப்போது மேற்கூறியபடி சிரசு நோய்ச்சிகிச்சையிலிருந்து வரிசையாக வெளிப்படுத்த உத்தேசித்தபடியால், அதனைத்தனியாக வெளிப்படுத்துவதை விட்டு இந்த முதற்பாகத்தோடு சேர்த்தே வெளிப்படுத்தத் தீர்மானித்து, அதற்கு முன்னுள்ளவற்றையெழுதிவந்ததில்,புத்தகத்திற்கு நாம் உத்தேசித்த பாரங்களுக்குமேல் அதிகப்படுவதாகத் தெரிந்தபடியால்; சிரசுரோகச்சிகிச்சையிலிருந்து பைத்தியரோகச்சிகிச்சைவரையில் எழுதி முதல் அதிகாரமாக்கி,அதற்குமேல் எழுதாமலிருந்த நேத்திரரோகச் சிகிச்சைமுதல்தந்தரோகச் சிகிச்சைவரை இரண்டாமதிகாரமாகவிட்டு விட்டு, முற்கூறியபடி நாவின்ரோகச் சிகிச்சைவரையில் அச்சிட்டிருந்த புத்தகத்தை மூன்றும் அதிகாரமாக்கி மேற்கண்ட முதல் அதிகாரத்துடன் சேர்த்துமுதலதிகாரத்தையும் மூன்றுமதிகாரத்தையும் ஒரு புத்தகமாக்கியிஷ் முதற்பாகமென வெளிப்படுத்தியிருக்கிறேன். இதில் இவ்விரண்டதிகாரங்களுக்கும் தனித்தனி பேஜ் நம்பர் கொடுக்கப்பட்டிருப்பதால், இரண்டிற்கும் தனித்தனியே அட்டவணை எழுதப்பட்டிருக்கிறது.முதலதிகாரம் 90-பக்கத்தில் முடிகிறது; அதன்மேல் மூன்றும் அதிகாரமெனத் தனிச்சீட்டு அச்சடித்துச் சேர்க்கப்பட்டிருக்கிறது; அதிலிருந்துபேஜ் நம்பர் மூன்றும்அதிகாரத்துக்கு ஒன்று முதலாகத்தொடர்ந்து 179ல் முடிவுபெறுகிறது. அட்டவணை பார்ப்போர் இவற்றையறிந்து பார்த்துக்கொள்

ளவேண்டியது. நேத்திரரோகச் சிகிச்சையிலிருந்து தந்தரோகச் சிகிச்சைவரையுள்ள இரண்டாம் அதிகாரம் இரண்டாம் பாகப்புத்தகத்தில் நான்காம் அதிகாரத்தோடு சேர்ந்துவரும். நண்பர்கள் எல்லோரும் எல்லாப்பாகங்களையும் வாங்கக்கூடியவர்களா யிருப்பதால் இவ்வதிகாரங்களை வரிசைக்கிரமப்படுத்திப் பார்த்துக் கொள்வார்களாக. அடுத்தபதிப்பில் வேண்டுமானால் எல்லாவற்றையும் வரிசைப்படுத்தி விடுவோம்.

யூநாநி வைத்திய முறைகளில், பெரும்பாலும் சாமானியருக்குக் கிடைக்கக்கூடாத அம்பர், கஸ்தூரி, ஜஉந்து, கஹ்ருபா, நன்முத்து, நற்பவளம், முதலிய விலையுயர்ந்த சரக்குகளும், யூநாநிப்பெயர்களுள்ள பல உயர்ந்த சரக்குகளும் சேர்வது வழக்கம். அதனால் ஏழைகளும், சாமானியரும் அம்முறைகளைச் செய்ய முடியாமல் மயங்குவதுண்டு. ஆதலால் அப்படியில்லாதபடி எத்தகையரும் முறைகளைச்செய்து உபயோகிக்கும்பொருட்டு இந்நூலில், அத்தகைய உயர்ந்த சரக்குகள் சம்பந்தமான முறைகளின்றி சாதாரண சரக்குகள் சம்பந்தமுள்ள முறைகளான தனிச்சரக்குப் பிரயோகம், மூலிகைப்பிரயோகம், உசிதப்பிரயோகம், இலகுப்பிரயோகம், இரகசியப்பிரயோகம், கைம்முறைப் பிரயோகம், உபதேசப்பிரயோகம், உன்னதப்பிரயோகம், அற்புதப்பிரயோகம், குருப்பிரயோகம், சன்னியாசிப்பிரயோகம், யோகிப்பிரயோகம், வீட்டுப்பிரயோ

கம், பரம்பரைப்பிரயோகம் முதலிய முறைகளே சிரசு முதல் பாதமீறாகவுள்ள வியாதிகளுக்கு வெளிப்படுத்தப்பட்டு வருகின்றன. அவற்றுள் இந்த முதற்பாகத்தில்,

வியாதிகளைத்தெரிந்துகொள்ளும் பொதுலக்ஷணங்களாகிய தனிச்சூடதிகரித்த லக்ஷணம், இரத்தமதிகரித்தலக்ஷணம், பித்தமதிகரித்தலக்ஷணம், தனிக்குளிர்ச்சி யதிகரித்த இலக்ஷணம், தனிக்கொழுமையதிகரித்த லக்ஷணம், கபமதிகரித்த இலக்ஷணம், தனிவறட்சி யதிகரித்த லக்ஷணம், வண்டல் அல்லது வாதமதிகரித்த லக்ஷணம், ஆகியவைகளும்; தலைநோய்ச் சிகிச்சைகளாகிய மல்லித்திரிபலாதி, இலகுபேதித்திரிபலாதி, கடுக்காய் ஷர்பத்து, பனப்ஷாஷர்பத்து, பனப்ஷா குல்கந்து, தொகையல்கள், கஷாயங்கள், பற்றுக்கள், நசியவகைகள், பற்றுமாத்திரைகள், இஞ்சித்தைலம், மேனித்தைலம், செம்பைத்தைலம், கௌரித்தைலம், நாணற்றைலம் முதலிய தைலவகைகள், சிரஸ்நானம், பாதஸ்நானம், ஆவிகள், ஆக்கிராணங்கள், ஆகியவைகளும்; மூர்ச்சைரோகச் சிகிச்சைகளாகிய சுரைக்காயெண்ணெய், தாமரைப்பூ வெண்ணெய், அகர்ஷர்பத், நசியங்கள், உசித வகைகள், மூர்ச்சை பாதஸ்நானம் ஆகியவைகளும்; காக்கைவலி சிகிச்சைகளாகிய கோகிலாதிமாத்திரை, லாலாஷர்பத்து, அக்காராகார மாஜூனம், நசிய வகைகள், ஆக்கிராணவகைகள், புகைகள், உசிதங்கள் ஆகியவைகளும்; ஸக்தாஎன்னும் மஹாமூர்ச்சை சிகிச்சை நசியங்களும்; மறதிரோகச் சிகிச்சைகளானமாஜூன்கள், சூரணங்கள், உசிதங்கள் ஆகியவைகளும்; தலை

இறுகிறுப்பு தலைசுழற்றல் சிகிச்சைகளாகிய ஊறற்கஷாயங்கள், சூரணங்கள் ஆகியவைகளும்; அதிநித்திராரோகச்சிகிச்சைகளும்; நித்திராபங்கரோகச் சிகிச்சைகளாகிய வித்நாநித்தைலம், காஹறீதைலம் முதலிய தைலங்கள், பச்சைபிலேத்திலா முதலிய திலாக்கள், தண்ப்பால்நசியம் முதலிய நசியங்கள், மல்லிச்சூரணம், நித்திராபங்கதாரஸ்நானம், ஆக்கிராணம், உசிதங்கள், ஆகியவைகளும்; பக்ஷவாதம் முகவாதம் ஆகியவற்றின் சிகிச்சைகளாகிய ஷர்பத்து, கஷாயம், அபாரிஜெ பைகிரா என்னும் தேவகெருபாமாத்திரைகள், நாபிமாத்திரை; கெந்திமாத்திரை, இந்துமாத்திரை, சுக்குமாத்திரை, புஷ்டிமாத்திரைகள் ஆகியமாத்திரைகள், வசம்புமாஜூன், பூண்டுமாஜூன், இன்கர்தியாமாஜூன் ஆகிய மாஜூன்கள், நவசாதி ஷர்பத், வசம்புச்சட்னி, வாயுசங்காரச்சூரணம், அலரித்தைலம், சிறுகோஷ்டத்தைலம், பச்சிலைத்தைலம், மகாகோஷ்டத்தைலம், சாமந்தித்தைலம், சதாப்தைலம், சீமைச்சாமந்திப்பூத்தைலம், சிறுசதாப்தைலம், மணித்தைலம், இலவணாதித்தைலம், யோகித்தைலம், வாலுளுவைத்தைலம், தளர்ச்சித்தைலம் ஆகியதைலங்கள், இருவங்கச்சூரணம், உசிதங்கள், நசியங்கள், ஆக்கிராணங்கள், ஆவிகள், ஆகியவைகளும்; உன்மத்தரோகச்சிகிச்சைகளாகிய அப்திமூன் சிகாமதுபானங்கள், நசியங்கள், உசிதங்கள் ஆகியவைகளும்; நாடிரோகசிகிச்சைகளும்; நாவின்ரோகச்சிகிச்சைகளும்; கன்னவீக்கசிகிச்சைகளும்; சூறற்கம்முதல் சிகிச்சைகளும்; கண்டமாலைச்சிகிச்சைகளும்; தொண்டையில் அட்டைகடித்துக் கொள்ளுதல் சிகிச்சைகளும்; சுவாசரோகச் சிகிச்சைகளாகிய மாத்திரைகள், சூரணங்கள்,

உசிதமுறைகள், எருக்குப்புவிபரம், நாயுருவியுப்பு, திருகுகள்ளியுப்பு, கசகசாஷர்பத், புகையிலை ஷர்பத் ஆகியவைகளும்; இரத்தங்கக்கல் ரோகச்சிகிச்சைகளாகிய மாத்திரைகள், இஸ்பகோல்விதைக்கோழை, கஹருபா பில்லைமாத்திரை, மாதுளைபில்லையாத்திரை, ஹப்புல் ஆஸ் ஷர்பத்து ஆகியவைகளும்; அள்ளுரோகச் சிகிச்சைகளாகிய கோடாசூழிமாத்திரை முதலிய மாத்திரைகள், பற்றுக்கள், உசிதங்கள் ஆகியவைகளும்; பக்கரோவு பக்கசூலைச் சிகிச்சைகளாகிய உசிதங்கள், பற்றுக்கள் ஆகியவைகளும்; மார்நோவுச்சிகிச்சைகளும்; இருமல் ரோகச்சிகிச்சைகளான உசித முறைகள், மாத்திரைகள், சூரணங்கள், பாயசம், ஷர்பத்துக்கள், கஷாயங்கள் ஆகியவைகளும்; இருதயத்துடிப்புரோகச் சிகிச்சைகளாகிய சந்தனபானம், காவுஸபான்ஷர்பத்து, பட்டுஷர்பத்து, இருதய உற்சாகஷர்பத்து, அன்னுசிப்பழஷர்பத், தம்பலஷர்பத், சீதகஸ்தூரிப்பிரயோகம், உஷ்ணகஸ்தூரிப்பிரயோகம், கிலாகுல்கந்து, உசிதங்கள் ஆகியவைகளும்; இரைப்பைரோகச் சிகிச்சைகளான திப்பிலிஜவாரிஷ், சுக்குஜவாரிஷ், இஞ்சிஜவாரிஷ், சாம்பிராணிஜவாரிஷ், அகர்ஜவாரிஷ், குந்திரிக்கஜவாரிஷ், ஆமலஜவாரிஷ், ஒமஜவாரிஷ், சன்னராஷ்ட ஜவாரிஷ், கருஞ்சீரகஜவாரிஷ், கமூனிஜவாரிஷ், பொதினுஜவாரிஷ், அனிஸூன் ஜவாரிஷ், அனிஸூன் பக்குவம், மண்டூரஜவாரிஷ், மகாதிரிபலாதி, அநூஷ்தாரு என்னும் ஜீரணசக்திலேகியம், இலவணமாத்திரை, ஆவாரைலேகியம், ஆவாரைமாத்திரை, வெண்காரமாத்திரை, ஜீரணமாத்திரை, காயமாத்திரை, ஜீரணத்திரிபலாதி லேகியம், பொதினுமாத்திரை, ஆமிலபேதம், கடுக்காய் மாத்திரை, இலவ

ணாதிமாத்திரை, இங்குவாதிமாத்திரை, இலவணாதிச் சூரணம், பசிதீபன உசிதமுறை, ஓமமாத்திரை, திரிகடு குச்சூரணம், சதுர்சாங்கச்சூரணம், பஞ்சகோலச் சூரணம், எரண்டத்தெண்ணெய், சதகுப்பையெண்ணெய் நிலஆவாரைச்சூரணம், கறியாதிச்சூரணம், கடுவாதிச் சூரணம், கிருஷ்ணலவணச்சூரணம், சிறுலவணாதிலேகியம், சாரமாதிச்சூரணம், மாதுளைச்சூரணம், ஜீரண விருத்திச்சூரணம், வெற்றிலைத்திராவகம், ஜீரணபில்லை மாத்திரை, மாஞ்சில்ஷர்பத்து, துளசிஷர்பத், தீபாக்கினி ஷர்பத், குல்கந்து, பற்றுக்கள், ஒற்றடங்கள் ஆகியவைகளும்; பேதிச்சிகிச்சைகளான சோம்புக்கஷாயம் கிச்சிலிக்கஷாயம், ஏலக்கஷாயம், பூசனிஉசிதம், நீலாம்பரஉசிதம், மிளகாய் உசிதம், அர்க்கன்மாத்திரை, வேளைமாத்திரை, சதாப்உசிதம் ஆகியவைகளும்; விக்கல்ரோகச்சிகிச்சைகளாகிய கருஞ்சீரக உசிதம், உழுந்துசிதம், கடலைபாதிப்புகை, தேங்காய்நார் உசிதம், மயிலிறகு உசிதம், வேல்முள்கஷாயம், கயிற்றுப்புகை, கோணியுசிதம், சீரகாதிக் கஷாயம், மாவிலைப்புகை, பொதினா உசிதம், காடிஷர்பத், தாமரைஉசிதம், காசிணிப்புகை, குந்திரிக்கபில்லைமாத்திரை, தேங்காயுசிதம், சிலேயுசிதம், பொன்னாங்கொட்டையுசிதம், ஆகியவைகளும்; தாகரோகச்சிகிச்சைகளாகிய பருப்புக்கீரையுசிதம், காடிஷர்பத்து, தாமரைஷர்பத்து, பழஷர்பத்து, இசுபகோல் உசிதம், அரசம்பட்டையுசிதம், தாமரையுசிதம், வேப்பிலையுசிதம், காட்டெருப்பிரயோகம், ஆமிலகாதிமாத்திரை ஆகியவைகளும்; இரைப்பையில் பால் அல்லது இரத்தம் சேர்ந்திருப்பதின் சிகிச்சைகளாகிய

திராக்ஷைப் பிரயோகம், பொதினாஉசிதம், கரிசுப்பிர யோகம், கொண்டைக்கடலையுசிதம்; ஆகியவைகளும்; அருவருத்தல் குமட்டல்வாந்தி ஆகியவைகளின் சிகிச்சைகளாகிய பூவந்திக்கொட்டையுசிதம், கிச்சிலிமாத்திரை, பூங்காவிப்பிரயோகம், மண்விளக்குப்பிரயோகம், இலந்தைபாதிமாத்திரை, கழுநீர்உசிதம், கிம்பைஉசிதம், கோணியுசிதம், திராக்ஷாதிமாத்திரை, அரசம்பட்டையுசிதம், ஆலம்வீழ்ப்பிரயோகம், ஏலரிசி ஜவாரிஷ், துருஞ்சிஜவாரிஷ், ஆபிலஷர்பத்து, மாதுளம்பழஷர்பத்து, ஜரிஷ்க் ஷர்பத்து, மாஞ்சில்கஷாயம், கோரைக்கிழங்குச்சூரணம், பொதினாஷர்பத், மாதுளைலேகியம் ஆகியவைகளும்; இன்னும் இவைபோன்ற பலமுறைகளும் வகைவிபரமாக எழுதப்பட்டிருக்கின்றன.

இம்முறைகளெல்லாம் அதிகச் செலவில்லாமல் சொற்பச்செலவில் ஒவ்வொரு குடும்பத்திலும் எத்தகையரும் செய்யக்கூடியவைகள்; ஒரு பைசா செலவினாலும் ஒருமருந்தை முடித்துக்கொள்ளலாம்; இவற்றுள் இன்னும் சிலமுறைகள் ஒருபைசாகூடச் செலவில்லாமல் அவரவர்கள் வீட்டுக்குப் பின்புறம், தோட்டம், வயல்முதலிய விடங்களில் அகப்படும் பச்சிலை முதலியவற்றால் செய்துகொள்ளக்கூடியவைகள். மேற்படி மூலிகைகள், சரக்குகள் ஆகியவைகளுக்காகத்தொலை தூரங்களுக்குப் போய்த்தேடவேண்டியதில்லை. இத்தகைய முறைகளெல்லாம் வெகு இரகசியமாக வைக்கப்பட்டு

வந்தவைகளாயினும் உலோகோபகாரத்தைக் கருதியே இப்போது யூநாநி கிரந்தங்களிலிருந்து வெளிப்படுத்தப்பட்டிருக்கின்றன. ஆதலால், இத்தகைய முறைகளடங்கிய இப்புத்தகமானது தமிழுலகத்துக்கு மிகவும் பயன்படக்கூடியதென்பது இதனைப்பார்க்கும் ஒவ்வொருவர்க்கும் நன்குவிளங்கும்; இதனைப் பலகிரந்தங்களிலிருந்து அநுபவப்படுத்தி யெழுதி அச்சிடும் விஷயத்தில் நாம் எடுத்துக்கொண்ட பிரயாசை அதிகம்; ஆயினும், அவற்றை யெதிர்பாராமல் நண்பர்களையுத்தேசித்து விலையை மிகவும் குறைத்திருக்கிறேன். ஆதலால், ஒவ்வொருவரும் இதனை வாங்கிவாசித்து நோயற்றவாழ்வையடைந்து எனக்கு மென்மேலும் இவ்வகைப் புத்தகங்களை வெளிப்படுத்தும் ஊக்கத்தை உண்டாக்குமாறுவிரும்புகிறேன். இதற்குமுன் நோட்டீஸில் இப்புத்தகத்திற்கு ஒரு ரூபா விலை போடப்பட்டிருந்தது. ஆயினும், அவ்விலைக்கு உத்தேசித்திருந்த பாரங்களுக்குமேல் சிலபாரங்கள் அதிகமாகிவிட்டபடியால் அதைமுன்னிட்டு இப்போது இதற்கு ஒருரூபா இரண்டணாவிலை யேற்படுத்தப்பட்டிருக்கிறது. ஆதலால் நண்பர்கள் இவ்விஷயத்தைப்பற்றி மன்னிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

அ. பா. மு. அ.





بسم الله الرحمن الرحيم

பிஸ்மில்லா ஹிர்றகுமா னிர்றஹீம்.

யூனானி சூக்ஷ்ம

# சிகிச்சாபோதினி.

முதற்பாகம்.

கடவுள் வணக்கம்.

அறபுவாக்கியம்.

الحمد لله رب العالمين

الصلوة والسلام على سيد

المرسلين واله واصحابه

اجمعين

அல்ஹம்து லில்லாஹி றப்பில் ஆலமீன், அஸ்ஸலாது வஸ்ஸலாமு அலா ஸய்யிதில் முர்ஸலீன்; வ ஆலிஹி, வ அஸ்காபிஹி அஜ்மஈன்.

பீடிகை.

இந்த 'யூனானி சூக்ஷ்ம சிகிச்சாபோதினி' யென்னும் கிரந்தமானது மிகவும் அருமையான நூல். இதில் சொல்லப்பட்டிருக்கும் முறைகள் மிகவும் சூக்ஷ்மமானவைகள். சிரசுமுதல் பாதம் ஈராகயுள்ள அவயவங்களின் வியாதிகளையும் அதன் சிகிச்சைகளையும் சொல்வது யூனானி சாஸ்திரகிரமமாம். மேற்படி வியாதிகளின் காரணம், லக்ஷணம், சாதாரணசிகிச்சை ஆகியவைகளெல்லாம், நமது யூனானி வைத்திய பாலபோதினி

யிற் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆயினும் இந்தநூலிலும் சிரசுமுதல் பாதம்வரையுள்ள வியாதிகளின் சிகிச்சைகள் அதிக சூக்ஷ்மமமாகவும் சுலபமாகவும் சொல்லப்பட்டிருக்கின்றன. பெரும் பான்மையும் யூநாநிமுறைகளில் அம்பர், கஸ்தூரி, ஜஉந்து, கஹ்ரூபா, நன்முத்து, நர்பவழம், முதலியவைகளும், இவைபோன்றவைகளுமான விலையுயர்ந்த சரக்குகள் அடங்கியவைகள். இன்னும் தமிழ்ப்பெயரில்லாமல், யூநாநிபெயர்களிலுள்ள பல உயர்ந்தசரக்குகளும் அடங்கியவைகள். ஆகையால், ஏழைகள், கிராமவாசிகள், முதலியஅநேகர் அப்பாகங்களை செய்யக்கூடாதவர்களாயிருக்கின்றனர். இவ்விஷயங்களைப்பற்றி நமக்கு கடிதமுகத்தாலும், பிறவாற்றாலும்: நமக்கு அநேகர் தெரிவித்து வருகின்றார்கள். ஆகையால், மேற்சொன்னபடி சிரசுமுதல் பாதம்வரையிலுள்ள வியாதிகளுக்குதனிச்சரக்குப் பிரயோகம் மூலிகைப்பிரயோகம், உசிதபிரயோகம், இலகுபிரயோகம், இரகசியப்பிரயோகம். கைம்முறைப்பிரயோகம், உபதேசப்பிரயோகம், உன்னதப்பிரயோகம், அற்புதப்பிரயோகம், குருப்பிரயோகம், சன்னியாசிப் பிரயோகம், யோகிப்பிரயோகம், வீட்டுப்பிரயோகம், பரம்பரை பிரயோகம் முதலிய பலவகைசூக்ஷ்ம முறைகளடங்கிய நூலை வெளிப்படுத்தவேண்டுமென்னும் ஆவல் வெகுவாயிருந்தது. அதற்காக, வெகுநாளாய், அவ்வகை முறைகளைசேர்க்க முயற்சிசெய்து, பலவித யூநாநிகிரந்தங்களை ஆராய்ச்சிசெய்து சேகரித்து அதன் குணாகுணத்தை நிச்சயித்து வந்தோம். இப்போது ஜீவகாருண்ய சிந்தையுடனும், பரோபகார சிந்தையுடனும், ஏழைகள் முதலானயாவருக்கும் பிரயோசனப்படும்படி இந்நூல் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. இதில் சொல்லப்பட்ட முறைகளெல்லாம் அதிகச்செலவில்லாமல், இலகுவாய் செய்யத்தக்கவைகள். இவைகளைச்செய்ய ரூபாயென்னும் கணக்கில்லாமல், தம்பிடி, பைசாயென்னும் செலவுசெல்லத்தக்கவைகள். அநேகமாய் அந்த தம்பிடியும் செலவில்லாமலே அவரவர்கள் வீட்டிலுள்ளவைகளும், தோட்டம், வயல், முதலியவிடங்களில் சாதாரணமாய்க் கிடைக்கக்கூடியவைகள். இதில் சொல்லப்

பட்டிருக்கும் சரக்குகள், மூலிகைகள், ஆகியவைகளுக்காக தூலதூரங்களுக்கும், காடுமலைகளுக்கும் போகவேண்டியதவசியமில்லை. ஒருவியாதிக்கு பலவகை சூட்சுமசிகிச்சைகள் சொல்லப்பட்டிருப்பதால் அவற்றுள் ஏதேனுமொன்று தம் வீட்டிலோ, தோட்டத்திலோ அல்லது தம்மூரிலோ கிடைக்கக்கூடியதாயிருக்கும்.

இந்த முறைகளெல்லாம், வெகு இரகசியமாக வைக்கப்பட்டு வந்தவைகள். மகா கஷ்டமான ரோகங்களுக்கெல்லாம் கைவல்லியமான அநேக சூட்சுமங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. இன்னின காரணங்களால், இந்த நூலானது மிகவும் அருமையானதும். பெருமைதங்கியதென்பது, இதனைக் கைக்கொண்டு இதன்படிசெய்து அநுபவிக்கும், புத்திசாலிகளுக்கு ஒருவரெடுத்து சொல்லிக்காட்டாமலே வெள்ளனத் தெள்ளிதாய் விளங்கும்.

## நூல்.

## வியாதிகளைத் தெரிந்துகொள்ளப் பொது லக்ஷணங்கள்.

ஓர் வியாதியின் காரணத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமானால் சுபாவமாகிய சூடு, குளிர்ச்சி, கொழுமை, வறட்சி, ஆகியவைகளுள் ஒன்று தனியே யதிகரித்துண்டானதா? அல்லது அவற்றுள் ஒன்றோடொன்றின் தொந்தத்தினால் உண்டானதா? வென்று அறிய வேண்டியது. இப்படியே, இரத்தம், சிலேற்பனம், பித்தம், வண்டல் ஆகிய சத்துக்களுள் ஒன்று அதிகரித்துண்டானதா? அல்லது அவற்றின் தொந்தத்தினாலுண்டானதா?வென்று அறியவேண்டியது. அதற்காக, முக்கியமாய், முகவருணம், தேகவருணம், தேகத்தின் தன்மை, நாடி, மலம், மூத்திரம் முதலியவைகளைப் பரீக்ஷிக்கவேண்டும்.

## தனிச்சூடதிகரித்த இலக்ஷணம்.

தேகம், முகம் இவைகளின் வருணம் சிவந்திருத்தல் அல்லது மஞ்சணித்திருத்தல்; தேகத்தைப் பரிசித்தால் சூடாயிருத்தல்; (இதில்காலம், தேசம், ஆகியவைகளின் தன்மையையும் நிதானிக்கவேண்டியது.) நாடி படபடத்திருத்தல்; மூத்திரம் மஞ்சணித்திருத்தல்; தாகமாயிருத்தல், சூடான பதார்த்தங்களினால் கெடுதியும், குளிர்ச்சியான பதார்த்தங்களினால் சுகுணமுமுண்டாதல்; சூடானகாலங்களில் சுகங்கெடுதல் முதலியவைகளாம்.

### குறிப்பு.

சூடானது இருவகைப்படும்; ஒன்று இரத்தமதிகரித்துண்டாவது; மற்றொன்று பித்தம் அதிகரித்துண்டாவது; ஆகையால் இரத்தச்சூடு அல்லது பித்தச்சூடு என்பதை இரத்தாதிக்கத்தின் லக்ஷணம், பித்தாதிக்கத்தின் லக்ஷணம் ஆகியவைகளினால்முறையே தெரிந்து கொள்ளல் வேண்டும்.

## இரத்தமதிகரித்த இலக்ஷணம்.

தேகம், முக்கியமாய் முகம், நா, கண்கள் சிவந்திருத்தல்; புத்திமந்தப்படுதல்; அசதி, சோம்பல்; நரம்புகள் உப்பியிருத்தல், சருமம் தடித்திருத்தல், நாடி நிறைந்து பெருத்து நடத்தல், மூத்திரம் சிவந்து கலங்கலாயிருத்தல்; சொற்பப்பசி; தேகங்கனத்திருத்தல், முக்கியமாய் புருவங்கள், தலை, பொறிகள் ஆகியவைகள் கொட்டாவிவருதல், அடிக்கடி திமிர்விடுதல், வாயினித்திருத்தல்; தேகத்தில் கட்டிகள், சிரங்குகள் அடிக்கடியுண்டாதல், மூக்குபல்வீறுகள், ஆசனம், முதலிய நு

ண்ணியஸ்தானங்களிலிருந்து இரத்தம் வடிதல், இறைச்சி முதலிய சூடுங் கொழுமையுமான ஆகாரங்களிலும் மதுரமாகிய பானங்களிலும் அதிகவிருப்பம், சிவந்த வஸ்துக்கள், இரத்த ஆறுகள், இரத்தத்தில் அமிழ்ந்து போதல்போல் தோன்றல் முதலியவைகளை கனவில் அதிகமாய்க்காணல் முதலியவைகளாம்.

## பித்தமதிகரித்த இலக்ஷணம்.

தேகம், முக்கியமாய் கண், நா, மூத்திரம் இவை மஞ்சணித்திருத்தல்; வாய்க்கசப்பு, நா சுரசுரப்பாயிருத்தல்; வாய், மூக்குத்துவாரங்கள் இவை வரண்டிருத்தல்; தாகம் அதிகமாயிருத்தல்; (உவர்க்கபத்தினுலும் தாகமுண்டாகும். ஆனுல் அதுகுறைந்த அளவாயிருப்பதுமன்றி குளிர்ந்தசலம் பானஞ்செய்தால் தணியாமல் வெந்நீரை சிறுகச்சிறுகச் சாப்பிடத்தணியும். பித்தாதிக்கத்தினுல் உண்டாகும் தாகமோ குளிர்ந்தசலஞ் சாப்பிடத் தணியும்.) குளிர்ச்சியான பதார்த்தங்களில் அதிக இச்சை; ஓக்காளம், மஞ்சள்வருணம் அல்லது பச்சைவருணமான வாந்தி, மனந்தடுமாறல், அடிவயிற்றில் எரிவந்தம்; எரிவந்தத்துடன் கூடியபேதி; ஊசியினுல் குத்துகிறதுபோன்ற குத்துக்கள்; நெருப்பு, மஞ்சள் வருணமான வஸ்துக்கள் ஆகியவைகளைக் கனவில் அதிகமாய்க்காணல்; தேகத்தை ஸ்பரிசித்துப் பார்த்தால் சூடாயிருத்தல் ஆகியவைகளாம்.

## தனிக்குளிர்ச்சியதிகரித்த இலக்ஷணம்.

தேகம், நீர் இவைகள் வெளுத்திருத்தல்; தேகம் பாரமாயிருத்தல், முக்கியமாப், சிரசு; மூக்கடைத்தல், கண்சுரந்திருத்தல் தேகம் ஜில்லிட்டிருத்தல்; நாடிமந்

தமாய்நடத்தல்; தாகமின்மை; பசிமந்தம்; சோம்பல்; கபத்தைச்சார்ந்த சுரம் அடிக்கடிகாணல்; குளிர்ச்சியான வஸ்துக்களினுல் கெடுதியும், சூடான வஸ்துக்களினுல் சுகுணமுமுண்டாதல்; மழைகாலத்திலும், குளிர்காலத்திலும் சுகங்கெடுதல் ஆகியவைகளாம்.

குளிர்ச்சியானது, வண்டல் அல்லது வாதசத்து அதிகரிப்பதனுலும், கபசத்து அதிகரிப்பதனுலும் உண்டாம். ஆகையால்அதுவும் இருவகைப்படும்.

### தனிக்கொழுமை யதிகரித்த இலட்சணம்.

தேகம், முக்கியமாய் கண், நா இவைவெளுத்திருத்தல்; கண்ணிமைகள் தளர்ந்து மிருதுவாயிருத்தல்; வாயில் நீர் அதிகமாய்ச்சுரத்தல், மூக்கில் நீர்வடிதல், வயிறு மிருதுவாயிருத்தல்; பசிமந்தப்படல்; அதிகித்திரை; நாடி மந்தமாய் நடத்தல்; கொழுமையான பதார்த்தங்களால் கெடுதியும்; வரட்சியாகியவைகளால் சுகுணமுமுண்டாதல் ஆகியவைகளாம்.

கொழுமையும் இருவகைப்படும்; (க) இரத்தப்பெருக்கினுல் உண்டாவது. (உ) கபப்பெருக்கினுல் உண்டாவது.

### கபமதிகரித்த இலட்சணம்.

தேகம் வெளுத்திருத்தல், முக்கியமாய் கண்கள், நா, மூத்திரம் ஆகியஇவைகள், தேகத்தை ஸ்பரிசித்தால் மிருதுவாயிருத்தல், முக்கியமாய்முகம். புளிப்பான வாந்தி; புளிப்பான ஏப்பம்;சோம்பல்; அறிவுகுன்றல்; நாடிநிறைந்து மெதுவாயிருப்பதுமின்றி மெதுவாய் நடத்தல்; தண்ணீர், ஆறுகள், குளங்கள், பனிக்கட்டி,

ஆலாங்கட்டி, மின்னல், மழை முதலியவைகளைக் கன வில் அதிகமாய்க் காணல் ஆகியவைகளாம்.

## தனிவரட்சி யதிகரித்த லட்சணம்.

மூக்குத் துவாரங்கள் வரண்டிருத்தல்; நித்திரை பிடியாமை; வரட்சியான பதார்த்தங்களைச் சாப்பிடுவத னால்கெடுதியுண்டாதல்; சூடானகாலங்களில் தன்சுகம் விகற்பப்படுதல்; கொழுமையான பதார்த்தங்களினால் சுகுணந்தோற்றுதல்; கொழுமையான எண்ணெய் இனங்களினால் சாந்தப்படுதல் முதலியவைகளாம்.

வரட்சியும் இருவகைப்படும். (க) வண்டல் அல் லது வாதசத்து அதிகரித்துண்டாவது (உ) பித்தசத்த திகரித் துண்டாவது.

## வண்டல் அல்லது வாதமதிகரித்த லட்சணம்.

தேகவருணம் கறுத்திருத்தல்; தேகம், மூக்குத் துவாரங்கள் ஆகியவை வரண்டிருத்தல், அசதி,சோ ம்பல், இரத்தங்கறுத்துத் தடித்திருத்தல், மனக்கவலை, வீண் எண்ணங்களிவை யுண்டாதல், அடிவயிற்றி லெரிதல், பொய்ப்பசி மூத்திரமும் கறுத்துத் தடித்திரு த்தல், முகத்தில் கறுப்புப்புள்ளிகள் தோன்றல்? சொ றி, சிரங்கு, தினவு, அதிகமாய்த் தேகத்தில் காணல், கெட்ட கொப்புளங்கள் உண்டாதல், மண்ணீரலைப் பற் றின வியாதிகளுண்டாதல், அதிக பயங்கரமான கன வுகள், நித்திரை பிடியாமை, கறுப்புவஸ்துக்களை அதி கமாய்க கனவில்காணல் முதலியவைகளாம்.

## குறிப்பு.

சூடு, குளிர்ச்சி, கொழுமை, வரட்சி, ஆகியவைகள் தனித்தனி அதிகரித்த லக்ஷணமும், இரத்தம், பித்தம், சிலேற்பனம், வாதம் முதலிய சத்துக்கள் அதிகரித்த லட்சணமும் சொல்லப்பட்டன. இவற்றுள் ஒன்றோடொன்று தொந்தப்படும்போது அவற்றின் குணங்களும் தொந்தப்பட்டிருக்குமாகையால் அவையின்னவையென விபரமாய்த் தெரிந்துகொள்ளலாம்.

மேற்கண்ட சத்துக்கள் மீறியிருக்கும் அளவிற்கேற்றபடியே அவற்றின் லக்ஷணங்களும் இருக்கும்.

இரண்டு சத்துக்கள் தொந்தப்பட்டிருக்கும்போது அவற்றுள் அளவிலதிகமாயிருப்பதின் லக்ஷணங்களே மிகுத்திருக்கும். மிகுதிபற்றி முன்னர் அதன் பெயரிடப்படும். வாதபித்ததொந்தத்தில் பித்தசத்ததிகரித்திருந்தால் பித்தவாதமெனவும், வாத சத்ததிகரித்திருந்தால் வாதபித்தமெனவுஞ் சொல்லப்படும்.

வியாதிகளின் காரணத்தை அறியவேண்டியபோது இதிற்கண்டிருக்கிற லக்ஷணங்களெல்லா மிருக்கக்காணுமென மலைக்காமல் பெரும்பான்மையான லக்ஷணங்களினால் நிதானிக்கவேண்டும். அறிவாளிகள் மிகவும் எளிதில் விகற்பத்தை யூகித்துக்கொள்வார்கள். மற்றவர்களும் சற்று கவனித்தால் அநுபவத்தினால்தெரிந்துகொள்ளக்கூடும்.

## தலைநோய் சிகிச்சை.

தலைநோயானது வாதம் பித்தம் கபம் ஆகிய முத்தோஷங்களில் ஒன்று அதிகரித்துண்டாயிருந்தால் அதற்குத்தகுந்த ஔடதங்களையுபயோகித்து அதிகரித்த

சத்தைநீக்கி அதன்மேல் பற்று முதலியவைகளை யுபயோகிக்கவேண்டும்.

அவ்விதம் உபயோகப்படும் லேகியங்கள், பற்றுகள், ஆக்கிராணங்கள், ஷர்பத்துகள், பாயஸங்கள் ஆகியவைகளை யிங்கெழுதுவாம்.

## மல்லித்திரிபலாதி.

மஞ்சட் கடுக்காய்த்தோல், சூரத்துக்கடுக்காய்த்தோல், பிஞ்சுக்கடுக்காய், மேல்தோல்போக்கின கொத்துமல்லிவிதை. இவை வகைக்கு விராகனெடை-ங.தேன் விராகனெடை-ஙசு.

செய்முறை:-முன்சரக்குகளையெல்லாம் இடித்து வஸ்திரகாயஞ்செய்து நெய்தெளித்து நெய்ப்பசையாக்கி தேனைக்காய்ச்சி நுரையைபோக்கி ஷை சூரணத்தைச்சிறுகச் சிறுகத்தூவி, கிண்டிக்கிளரி, பீங்கான்பாத்திரத்தில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:— விராகனெடை-ரு-முதல்-சு-வரையில். காலையிலும், இரவில் படுக்கைக்குப் போகும்போதும் உட்கொள்ளவேண்டியது.

உபயோகம்:—தலைநோய், கண்வியாதிகள், தலைச்சுழற்றல், தலைமயக்கம், ஆகியவைகள்தீரும். சிரசில் அதிகரித்திருக்கிறதுர்நீரைச்சிறுகச் சிறுகவெளிப்படுத்தி அதை சுத்திசெய்து மேற்கண்ட ரோகங்களைப்போக்கும்.

## இலகுபேதித்திரிபலாதி.

சூரத்துக்கடுக்காய்த்தோல், மஞ்சட் கடுக்காய்த்தோல், நெல்லிவற்றல், தான்றிக்காய்த்தோல், பிஞ்சுக்

கடுக்காய், இவைவகை-௧-க்கு விராகனெடை-௩. குச்சி, காம்பு முதலியவற்றைநீக்கி சுத்திசெய்த சூரத்துநிலாவாரை, ரோஜாப்பூ இதழ், உள்நரம்பு மேல்தோல் முதலியவைகளைநீக்கி சுத்திசெய்த சீமைச்சிவிதைவேர் இவைவகை-௧-க்கு விராகனெடை-௫. மேற்றோல்சீவினசுக்கு விராகனெடை-௨-தேன், தேவையான அளவு.

செய்முறை:—மேற்கண்டவைகளை யிடித்து வஸ்திரகாயஞ்செய்து வாதுமையெண்ணெயை அல்லது நெய்யைத்தெளித்து நெய்ப்பசையுண்டாக்கிஇதனைநிறுத்து இதன் எடைக்குமூன்றுபங்கு தேனைக்காய்ச்சி நுரைநீக்கி ஷை சூரணத்தில் தூவிகிண்டிக்கிளறி நன்றாய் மிஸ்ரமித்து கீழிறக்கி ஆறினபின்பு பீங்கான்பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-௨½-முதல் - ௫- வரையில். காலையிலும், படுக்கைக்குப் போகும்போதும் உட்கொள்ளவேண்டும்.

உபயோகம்:—மலத்தைப்போக்கும். மூளையிலும் இரைப்பையிலுமுள்ள நீர்களை மலத்தின்வழியாய் வெளிப்படுத்தும். தலைவலிகள், காதிலுள்ளஇரைச்சல்கள், பார்வை மந்தமாயிருத்தல் ஆகியவைகளைப்போக்கும்.

## கடுக்காய்ஷர்பத்து.

மஞ்சட்கடுக்காய்த்தோல் பலம்-௨. இதனை நையச்சிதைத்து அரைப்படி ஜலத்திற்போட்டு மூன்றுநாள் வெயிலில்வைத்து நாலாம்நாள் நன்றாய்ப்பிசைந்து வடிகட்டி திப்பியைநீக்கிவிட்டு அந்தஜலத்தில் ௨வ[illegible]- பலம் புதியமஞ்சட்கடுக்காய்த்தோலை நையச்சிதைத்து அதிற்போட்டு முன்போல மூன்றுநாள் வெயிலில் வைத்து

நான்காம்நாள் நன்றாய்ப்பிசைந்து வடிகட்டி திப்பிநீக்கின ஊறற்கஷாயத்தில் பதினைந்துபலம் சீனிசருக்கரையைக்கலந்துபாகுபதத்தில் இறக்கி ஆறவைத்து சீஷாவில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—க-கஉ.

உபயோகம்:—சிரசிலுள்ள பித்தநீரை மலத்தின்வழியாய்ப்போக்கும். பித்தசம்பந்தமான தலைநோய்களை குணப்படுத்தும்.

## பனப்ஷாஷர்பத்து.

பனப்ஷா, உலர்ந்த தாமரைப்பூ இதழ், ரோஜாப்பூ இதழ், இவைவகை-க-க்கு விராகனெடை-கவ, உஸ்துகுத்தூஸ் விராகனெடை-உஉ, ஆலுபகாரா அல்லது கோதுகொட்டை நீக்கின புளிபலம்-உஉ, சீனிசர்க்கரை பலம்-கo.

செய்முறை:—மேற்கண்டவைகளில் சிதைக்கவேண்டியவைகளைச்சிதைத்தும்; நறுக்கவேண்டியவைகளை நறுக்கியும்; முக்காற்படி ஜலத்திற்போட்டு, மூன்றிலொருபாகமாக சுண்டவைத்திறக்கி இளஞ்சூட்டில் வடிகட்டி திப்பிநீக்கின கஷாயத்தில் ஃடி சருக்கரையைச்சேர்த்துக்கலந்து காய்ச்சி பாகுபதத்தில் இறக்கி ஆறினபின்பு சீசாவில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:— விராகனெடை-ரு-முதல்-எ-வரையில்.

உபயோகம்:—எல்லாவகைத்தலைநோய்களும் தீரும்.

## பனப்ஷாகுல்கந்து.

பனப்ஷாப்பூ, பங்கு-க. கற்கண்டு-உ-பங்கு (இதனை இடித்துத் தூள்செய்து கொள்ளவேண்டும்.)

செய்முறை:— கற்கண்டைப் பாவுசெய்து ஷை பூவைப்போட்டு நன்றாய் மிசிரமித்து ஒருஜாடியிற்போட்டு வாய்ப்பந்தனஞ்செய்து 40-நாள் வெயிலில்வைத்து பின்பெடுத்து உபயோகிக்கவேண்டும்.

பிரமாணம்:— விராகனெடை-ந.முதல்.ரு-வரையில்.

உபயோகம்:— தலைநோய்கள், இருமல், மார்புவியாதிகள், ஆகியவைகள் தீரும்.

துவயல்.

மருதோன்றிவிதை பலம்-க. இதனை இளவறுப்பாய்வறுத்துச்சூரணித்து இரண்டுபலம் தேனிற்கலந்து பீங்கான் பாத்திரத்தில்வைத்துக்கொள்ளவும். இதில் சுமார்கால்பலம் எடுத்து ஆகாரம் சாப்பிடும்போது உபகரியாய் உபயோகித்துவரவும். இவ்விதம்செய்துவருவதால் மூளையின் துர்ப்பலம்நீங்கி அதுபலப்படும். மூளை துர்ப்பலத்தாலுண்டான தலைநோய், மறதி, மயக்கம் ஆகியவைகள்தீரும்:

கஷாயங்கள்.

மூங்கில்வேர் விராகனெடை . ரு, சீனிசர்க்கரை விராகனெடை - உ, ஷை வேரை நன்றாய் ச்சிதைத்து இரண்டு ஆழாக்கு ஜலத்திற்போட்டுக் காய்ச்சி அரையாழாக்காகச் சுண்டவைத்திறக்கி வடிகட்டின கஷாயத்தில் ஷைசர்க்கரையைக்கலந்து பானஞ்செய்யவேண்டும். இவ்விதம்காலைமாலை யிரண்டுவேளையும்செய்துவர சீதளசம்பந்தமான தலைநோய், உஷ்ணசம்பந்தமான தலைநோய் ஆகியவை தீரும்.

குறிப்பு:—இஷ்டமானால் சர்க்கரையை அதிகப்படுத்தியும் உபயோகிக்கலாம்.

ஷை வேறு.

சோம்பு விராகனெடை-உ, சோம்புவேர் விராக னெடை-ச, உஸ்துக்குத்தூஸ் விராகனெடை-ந, தேன் விராகனெடை-உ.

செய்முறை:—ஷை சரக்குகளை நன்ருய்ச்சிதைத்து அரைப்படிஜலத்தில் போட்டுக்காய்ச்சி மூன்றிலொரு பாகமாக சுண்டவைத்திறக்கி வடிகட்டி முன்தேனைச் சேர்த்துச் சாப்பிடவேண்டும். இவ்விதம் காலைமாலை யிரண்டுவேளையும் செய்துவரவும்.

உபயோகம்:—கபசம்பந்தமான தலைநோய், குளிர்ச்சியினுலுண்டான தலைநோய் ஆகியவைகள் தீரும்.

குறிப்பு:—மேற்கண்ட தேனிற்குப்பதிலாக பனப்ஷா ஷர்பத்தைசேர்த்து உபயோகித்தால் இன்னும் விசேஷகுணத்தைத்தரும்.

ஷை வேறு.

மஞ்சட்கடுக்காய்த்தோல், மேற்ருேல்சீவியசுக்கு, கொத்துமல்லிவிதை, நெல்லிவற்றல், தான்றிக்காய்த்தோல், வாயுவிளங்கம் இவைவகைக்குவிராகனெடை-ரு.

செய்முறை:—இவற்றைச்சிதைத்து அரைப்படிஜலத்திற்போட்டுக்காய்ச்சி நான்கிலொரு பாகமாகச் சுண்டவைத்து இறக்கிவடிகட்டி திப்பிநீக்கிப்பானஞ்செய்யவேண்டும். இவ்விதம் காலைமாலை இரண்டுவேளையும்பானஞ்செய்துவர பலவிதத்தலைநோய்கள் தீரும்.

பற்றுக்கள்:—

மேற்ருேல் சீவியசுக்கு, வெண்சந்தனம், ஆமணக்குவேர்த்தோல் இவை வகை-க-க்கு விராகனெடை-க. சிகப்பு அரிசிக்கழுநீர் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி சரக்குகளை அம்மியில்வைத்து மேற்படி கழிநீரைச் சிறுகச்சிறுகவார்த்து வெண்ணெய்போலரைத்து ஒருகாதிலிருந்து மறுகாதுவரையில் நெற்றியில் பற்றிடவேண்டும். இவ்விதம் சில தடவைகள் செய்யின் பலவகைத்தலைநோய்கள், ஒருபக்கத் தலைநோய், ஆகியவைகள் தீரும்.

ஷை வேறு.

இஸ்பகோல் விதையை ஊறவைத்து எடுத்தகோழை செல்லத்தக்க அளவு. நாமக்கட்டி அல்லது வெண்பூங்காவி விராகனெடை-௧.

இதனை மேற்படி கோழையிற்குழைத்து முன் போல் நெற்றியிற் பற்றிட்டுவர உஷ்ண சம்மந்தத்தலைநோய், பித்த சம்மந்தத்தலைநோய், இரத்த ஓட்டம் அதிகரித்துண்டாகும் தலைநோய் ஆகியவைகள் தீரும்,

ஷை வேறு.

சுக்காங்கீரைச்சாறு, சீமைச்சுண்ணம்பு, இரண்டையும் மிஸ்ரமித்து முன்போல் தலையிற்பற்றிட உஷ்ணசம்மந்த தலைநோய் தீரும்.

மேற்படி வேறு.

கூத்தியிலை அல்லது விதை, கொத்துமல்லிவிதை, பூங்காவி இவைகளைச் சமனெடைபாக எடுத்துக்குளிர்ந்த ஜலத்தைவார்த்து மைபோலரைத்து மேற்கண்டபடி பற்றிட்டுவர உஷ்ணசம்மந்தமான தலைநோய், பித்தசம்மந்தமான தலைநோய் தீரும்.

ஷை வேறு,

மருதோன்றிப்பூ தேவையான அளவு. இதனைத் தண்ணீர்வார்த்து வெண்ணெய்போல் அரைத்துப் பற்றிட்டுவர உஷ்ணசம்மந்தமான தலைநோய்தீரும்.

௸ வேறு.

காஹூவிதையை ஜலம்விட்டு மைபோல் அரைத்து மேற்கண்டபடி பற்றிட்டுவர உஷ்ண சம்மந்த தலைநோய்த்தீரும்.

௸ வேறு.

எள்ளின் இலையை தண்ணீரையல்லது காடியை வார்த்து வெண்ணெய்போல் அரைத்து மேற்கண்டபடி பற்றிட்டுவர, உஷ்ணசம்மந்த தலைநோய் தீரும்.

௸ வேறு.

பருப்புக்கீரையின் இலையை தண்ணீரை அல்லது காடியைவார்த்து வெண்ணெய்போல் அரைத்து மேற்கண்டபடி பற்றிட்டுவர உஷ்ண சம்மந்த தலைநோய் தீரும்.

௸ வேறு.

வெண்சந்தனத்தை தண்ணீரில் இழைத்துமேற்கண்டபடி பற்றிட உஷ்ணசம்மந்த தலைநோய் தீரும்.

கொத்துமல்லி விதையை நுண்மையாகப்பொடித்துக் கோழிமுட்டை வெள்ளை அம்பிலியிற்குழைத்து மேற்கண்டபடி பற்றிட்டுவர பித்த சம்மந்தமான தலைநோய் உஷ்ணசம்பந்தமான தலைநோய் ஆகியவைகள் தீரும்.

௸ வேறு.

யவைக்கோதுமை மாவை தண்ணீரிற்குழைத்து மேற்கண்டபடி பற்றிட்டுவர உஷ்ணசம்மந்த தலைநோய்தீரும்.

௸ வேறு.

நரிவிலிப்பழக்கோழையை எடுத்து மேற்கண்டபடி பற்றிட, உஷ்ணசம்மந்தமான தலைநோய்தீரும்.

ஷை வேறு.

துத்திவேர்ப்பட்டையை தண்ணீர்வார்த்து வெண்ணெய்போல் அரைத்து பற்றிட, உஷ்ணசம்மந்தமான தலைநோய் தீரும்.

மேற்படி வேறு.

ரோஜாப்பூ எண்ணெயில் கொஞ்சம் அபினியை யிழைத்து நெற்றில் மேற்கண்டபடி பற்றிட, நரம்பைப் பற்றிய தலைநோய் தீரும்.

மேற்ப்படி வேறு.

காசினிவிதையில் தண்ணீரை யல்லது பந்நீரைவார்த்து வெண்ணெய்போல் அரைத்து மேற்கண்டபடி பற்றிட, உஷ்ணசம்மந்தமான தலைநோய் தீரும்.

மேர்படி வேறு.

மருதோன்றியிலையில் கொஞ்சம் ஜலம்விட்டு வெண்ணெய்போலரைத்து மேற்கண்டபடி பற்றிட்டுவர பலவகைத் தலைநோய்கள், ஒருபக்கத்தலைநோய்கள் ஆகியவைகள் தீரும்.

ஷை வேறு.

வால்மிளகில் கொஞ்சம் ஜலத்தை அல்லது ஸ்தனப்பாலைவார்த்து வெண்ணெய்போலரைத்து மேற்கண்டபடி பற்றிட்டுவரசீதளசம்பந்த தலைநோய்கள்தீரும்.

ஷை வேறு.

மலைவேம்பின் இலையில்கொஞ்சம் தண்ணீரைவார்த்து வெண்ணெய்போலரைத்து மேற்கண்டபடி பற்றிட்டுவர உஷ்ணசம்பந்ததலைநோய்தீரும்.

ஷை வேறு.

வால்மிளகில் அல்லது வெள்ளைமிளகில் தண்ணீரைவார்த்து வெண்ணெய்போல் அரைத்து மேற்கண்டபடி தலையிற்பற்றிட்டுவர, சீதளசம்பந்த தலைநோய்கள்தீரும்.

ஷை வேறு

மாதுளன்வேரை தண்ணீரில் இழைத்து மேற்கண்டபடி பற்றிட்டுவரபித்தசம்பந்த தலைநோய், உஷ்ண சம்மந்ததலைநோய், ஆகியவைகள் தீரும்.

ஷை வேறு.

தோற்சீவின சுக்குச்சூரணத்தை ஆமணக்கெண்ணெயில் குழைத்து மேற்கண்டபடி பற்றிட குளிர்ச்சி சம்மந்தத்தலைநோய், கபசம்பந்தத்தலைநோய் ஆகியவைகள் தீரும்.

ஷை வேறு.

வெண்முருக்குயிலையில் தண்ணீர்வார்த்துவெண்ணெபோலரைத்துத் தண்ணீரில்குழைத்துக் கொதிக்க வைத்து மேற்கண்டபடி பற்றிட்டுவர, குளிர்ச்சி சம்மந்த தலைநோய், கபசம்பந்த தலைநோய், வெளிக்காரணத்தாலுண்டான தலைநோய், ஆகியவைகள்தீரும்.

மேற்படி வேறு.

அரசமரவேர்த்தோலை தண்ணீரில்இழைத்து, மேற்கண்டபடி பற்றிட குளிர்ச்சி சம்மந்தமான தலைநோய், கபசம்பந்தமான தலைநோய் ஆகியவைகள் திரும்.

மேற்படி வேறு.

கறுஞ்சீரகத்தில் தண்ணீரைவார்த்து வெண்ணெய்போல் அரைத்து முன்போற் பற்றிட்டுவர குளிர்ச்சி சம்மந்ததலைநோய்திரும்.

மேற்படி வேறு.

பருத்திக்கொட்டைப்பருப்பை வெண்ணெய்போல் அரைத்து முன்போல்பற்றிட்டுவர,பலவிததலைநோய்கள் தீரும்.

மேற்படி வேறு

சந்தனத்தூள், துரிஞ்சி நாரத்தந்தோல் இவ்விரண்டையும், சமனாய்ச்சேர்த்து ஜலம்விட்டு வெண்ணெய்போல் அரைத்து முன்கண்டபடி பற்றிட்டுவர குளிர்ச்சி சம்மந்தமான தலைநோய் ஆகியவைகள் தீரும்.

மேற்படி வேறு.

முலாம்பழ விதைப்பருப்பில், ஜலம்விட்டு வெண்ணெய்போல் அரைத்துப்பற்றிட உஷ்ணசம்மந்த தலைநோய், குளிர்ச்சி சம்மந்த தலைநோய் ஆகியவைகள் தீரும்.

மேற்படி வேறு.

இலுப்பைப்பூ ,முலாம்பழவிதைப்பருப்பு இவ்விரண்டையும் சமனாய்ச்சேர்த்து தண்ணீர்வார்த்து வெண்ணெய்போல் அரைத்து மேற்கண்டபடி பற்றிட்டுவர உஷ்ணசம்மந்தத் தலைநோய்த்தீரும்.

மேற்படி வேறு.

வெள்ளாட்டு வெண்ணெயை மேற்கண்டபடி பற்றிட, வறட்சியினாலுண்டான தலைநோய், உஷ்ணத்தினாலுண்டான தலைநோய்ஆகியவைகள் தீரும்.

மேற்படி வேறு.

லவங்கம் இரண்டரை, அபின் ௪-குன்றிமணியெடை இவ்விரண்டையும் கல்வத்திலிட்டுத் தண்ணீரை வார்த்து வெண்ணெய்போல் அரைத்து கொதிக்கவை

த்து மேற்கண்டபடி பற்றிட பீனிசசம்மந்த தலைநோய் தீரும்.

மேற்படி வேறு.

மஞ்சட் கடுக்காய் விதையை வெந்நீரில் இழைத்துப்பற்றிடஒரு பக்கதலைநோய் தீரும்.

மேற்படி வேறு.

காட்டுப்புரு எச்சம்,கடுகு இவ்விரண்டையும் சமபாகமாகச்சேர்த்து ஜலம்விட்டு வெண்ணெய்போல் அரைத்து மேற்கண்டபடி பற்றிட நாட்பட்ட ஒரு பக்கத்தலைநோய்த் தீரும்.

மேற்படி வேறு.

நேர்வாளப்பருப்பை முலைப்பாலில் இழைத்து ஒரு தம்பிடியகலம் தலைநோயுள்ள எதிர்ப்பக்கத்தின்பொறியில் தடவிவைத்து எரிவந்தங்கண்டவுடன் ஜலத்தால் கழுவிவிடவேண்டும். இவ்விதம் செய்தால் நாட்பட்ட ஒருபக்கதலை நோய்தீரும்.

மேற்படி வேறு.

வாதுமைப்பருப்பை வெண்ணெய்போல் அரைத்து, கடுகெண்ணெயிற்குழைத்துத் தலைமுழுமையும் தடவ பலவகைதலை நோய்கள் தீரும்.

தலைநோய்க்காம்.

நசியவகைகள்.

சூடன், வெண்சந்தனத்தூள், இவ்விரண்டையும் சமபாகமாகஎடுத்து பன்னீர் விட்டரைத்து மெல்லிய வஸ்திரத்தில்வைத்து இரண்டு அல்லது மூன்று துளிகள் நாசித்துவாரத்திற்சொட்டவேண்டும். மறு நாசித்

துவாரத்திலும் இவ்விதமே சொட்டவேண்டும். இவ்விதம் சொட்டிவர, உஷ்ணசம்மந்தமான தலைநோய், உஷ்ணசம்மந்தமான மூர்ச்சைநோய் ஆகியவைகள் தீரும்.

மேற்படி வேறு.

சுரையிலை, காசினியிலை, காஹூ இலை, கொத்துமல்லிஇலை, மணித்தக்காளியிலை ஆகியவைகளில் ஒன்றை அல்லது இரண்டை அல்லது மூன்றை அரைத்து மெல்லிய வஸ்திரத்தில் வைத்து இரண்டு நாசித்துவாரங்களிலும் இரண்டு அல்லது மூன்று துளிகள் சொட்டவேண்டும். இப்படிச்செய்து வருவதனால் உஷ்ணசம்மந்தமான தலைநோய், உஷ்ணசம்பந்தமான மூர்ச்சை ஆகியவைகள் தீரும்.

மேற்படி வேறு.

மிளகு, அரிசித்திப்பிலி, லவுங்கம், ஆகியவைகளில் சமயோசிதம்போல் ஒன்றை அல்லது இரண்டை அல்லது மூன்றையும் சோம்புத்திராவகத்தால் மைபோல் அரைத்து மெல்லிய வஸ்திரத்தில் வைத்து மேற்கண்டபடி நாசித்துவாரங்களில் சொட்டிவர சீதளசம்பந்தமான பலவகை சிரநோய் ஆகியவைகள் தீரும்.

மேற்படி வேறு.

ஜூபா இலைச்சாற்றை வடிகட்டி, மேற்கண்டபடி மூக்குத்துவாரத்தில் நசியஞ்செய்துவர, குளிர்ச்சி சம்பந்தத்தலைநோய், கபசம்மந்தத்தலைநோய் ஆகியவைகள் தீரும்.

குறிப்பு.

ஜூபாவின் பச்சை இலையகப்படாவிடில் உலர்ந்த இலையைக்கஷாயஞ்செய்து மேற்கண்டவாறு உபயோத்துக் கொள்ளலாம்.

மேற்படி வேறு.

வாயுவிளங்கச்சூரணம், மேற்ரோல் சீவினசுக்குச் சூரணம், பனைவெல்லம் இவை மூன்றையும் சமபாகமாகஎடுத்து, வெந்நீரைவார்த்து வெண்ணெய்போல்அரைத்து மெல்லியவஸ்திரத்தில்வைத்து நாசித்துவாரங்களில் சொட்டிவர, குளிர்ச்சிசம்பந்தமான தலைநோய், குளிர்ச்சி சம்பந்தமான சிரநோய் ஆகியவைதீரும்.

மேற்படி வேறு.

சம்பங்கிப்பூ, ௩. இவற்றைக்கல்வத்திலிட்டு கொஞ்சம் ரோஜாப்பூ எண்ணெயை அதிற்கொஞ்சம்விட்டு வெண்ணெய்போல்அரைத்து மெல்லிய வஸ்திரத்தில் வைத்து மேற்கண்டவாறு நாசித்துவாரங்களில் சொட்டிவர மூளையிலுள்ள அசுத்தமாசுகளை நீக்கி அதைச் சுத்திசெய்யும். தலைசுழற்றல், தலை கிறுகிறுப்பு, ஆகியவைகள் தீரும்.

மேற்படி வேறு.

மத்தியான மல்லிகைப்பூவை கசக்கி நாசித்துவாரத்திற்சொட்டிவர ஒருபக்கத்தலைநோய்தீரும்.

மேற்படி வேறு.

துளசியிலைச்சாற்றை, வலதுபக்கத்தில் நோவிருந்தால் இடது நாசித்துவாரத்திலும், இடதுபக்கம் நோவிருந்தால்வலதுபக்கநாசித்துவாரத்திலும் மேற்கண்டபடி சொட்டிவரவேண்டும். இவ்விதம்செய்து வருவதனால் ஒருபக்கத்தலைநோய் தீரும்.

மேற்படி வேறு.

பூவந்திக்கொட்டையென்னும் பொன்னுங்கொட்டையின் சதையை வெந்நீரிற்கசக்கி துணியில்வைத்து

இரண்டு நாசித்துவாரங்களிலும் இரண்டிரண்டு சொட்டுகள் சொட்டிவர ஒருபக்கதலைநோய் தீரும். இன்னும் இதனை முலைப்பாலில் கசக்கி மேற்கண்டவாறு சொட்டிவர தலைநோய், ஒரு பக்கத்தலைநோய், காக்கைவலி, மூர்ச்சைரோகம் ஆகியவை தீரும்.

## மேற்படி வேறு.

காட்டுவாகை விதைப்பருப்பை தண்ணீர்வார்த்து வெண்ணெய்போலரைத்து மெல்லிய வஸ்திரத்தில்வைத்து இரண்டு நாசித்துவாரங்களிலும் இரண்டிரண்டு சொட்டுகள் சொட்டிவர, ஒருபக்க தலைநோய்தீரும்.

## மேற்படி வேறு.

நவச்சாரம், காக்கட்டான்விதை இவைவகைக்குக்குன்றிமணியெடை இரண்டு. இவற்றை நுண்மையாகப்பொடித்து மூன்றுவிராகனெடை பசுவின் நெய்யிற் கலந்து சீசாவில் பத்திரப்படுத்தவும். அவசியமானபோது மெல்லியவஸ்திரத்தில்கொஞ்சம்வைத்து இரண்டு நாசித்துவாரங்களிலும் மும்மூன்றுதுளிகள் சொட்டிவர ஒருபக்க தலைநோய்தீரும்.

## மேற்படி வேறு.

வெங்காயச்சாறு விராகனெடை-௩,மிளகு குன்றுமணியெடை-௨, இம்மூன்றையும் ஒன்ருய்ச்சேர்த்து வெண்ணெய்போல அரைத்து மெல்லியவஸ்திரத்தில் வைத்து, வலதுபக்கத்திலிருந்தால் இடது நாசித்துவாரத்திலும், இடதுபக்கம் நோவிருந்தால் வலதுநாசித்துவாரத்திலும் மேற்கண்டவாறு சொட்டிவர, ஒருபக்க தலைநோய்தீரும்.

## மேற்படி வேறு.

சௌரிப்பழச்சதை விராகனெடை-வ; இதனை கொஞ்சம் ஜலம்விட்டு வெண்ணெய்போலரைத்து மெல்லிய வஸ்திரத்தில்வைத்து நாசித்துவாரங்களில் இரண்டிரண்டுதுளிகள் சொட்டிவரவேண்டும். தாங்கக்கூடாதகாரமாயிருந்தால் தண்ணீருக்குப்பதிலாக ஸ்தனப்பாலைச் சேர்த்துக்கொள்ளவும்.

## மேற்படி வேறு.

கடற்றேங்காய் விராகனெடை-வ. இதனை ஜலம் விட்டு வெண்ணெய்போலரைத்து மெல்லிய வஸ்திரத்தில்வைத்து இரண்டு நாசித் துவாரங்களிலும், இரண்டிரண்டு துளிகள் சொட்டிவர ஒருபக்க தலைநோய் தீரும்.

## மேற்மடி வேறு.

விலாரிஇலையை, தண்ணீரில் கொஞ்சநேரம் ஊற வைத்துக்கசக்கி அந்தஜலத்தை இரண்டுநாசித் துவாரங்களிலும் மும்மூன்றுதுளிகள் சொட்டிவர, ஒருபக்கதலைநோய்க்குக் காரணமாகிய துர்நீரை நீக்கி ஒருபக்கதலைநோயைப் போக்கும்.

இன்னும் முறைக்கிரமமாகவரும், ஒருபக்கத்தலைநோயையும் போக்கும்.

## பற்று மாத்திரை.

கொத்துமல்லிவிதைச்சூரணம், நெல்லிமுள்ளிச்சூரணம், காஹுவிதைச்சூரணம், மேற்றேல்சீவின சுக்குச்சூரணம், வகைக்குபலம்-,உ. அபின், குராசாணி ஓமச்சூரணம், வகைக்கு விராகனெடை-வ, இவையெல்லாவற்றையும் கல்வத்திலிட்டுத் தண்ணீரைச் சிறுகச்

சிறுகவார்த்து ஒருஜாமநேரமரைத்து பில்லைமாத்திரை களாகச்செய்து கொண்டு நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவேண்டும். அவசியமானபோது இதனைத் தண்ணீரில் இழைத்து நெற்றியில் பற்றிடவேண்டும். இவ்விதம் செய்துவருவதால் தலைநோய்கள், ஒரு பக்கதலைநோய்கள் தீரும்.

## மேற்படி வேறு.

வேப்பிலைச்சாறு ஒருபங்கு, நல்லெண்ணெய் ஒரு பங்கு, இவ்விரண்டையும் மிஸ்ரமித்து இரண்டுநாசித் துவாரங்களிலும் இரண்டிரண்டு துளிகள் சொட்டிவர தலைநோய்கள், ஒருபக்க தலைநோய் ஆகியவைகள் தீரும்.

## மூளை பலகாரி.

பனப்ஷாசூரணம் விராகனெடை-௩. உஸ்துகுத்தூஸ் சூரணம் விராகனெடை-௧௨. கொத்துமல்லிவிதைச் சூரணம் விராகனெடை-௩, ஜடாமாஞ்சிச்சூரணம் விராகனெடை-௧௨. கொட்டைக்கரந்தைப் பூச்சூரணம் விராகனெடை-௧௨. ரோஜாப்பூச்சூரணம் விராகனெடை-௩. மேற்றோல் நீக்கிசுத்திசெய்த வாதுமை பருப்பு விராகனெடை-௩. சீனாக்கற்கண்டுத்தூள் விராகனெடை-௧௮. இவையெல்லாவற்றையும் ஒன்றாய்க்கலந்து வெண்ணெய்போல் அரைத்து சீஷாவில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை- ௨௨ முதல்-௩௨-வரையில்.

உபயோகம்:— துர்ப்பலப்பட்ட மூளையை பலப்படுத்தும், ஞாபகசக்தியை விருத்தியாக்கும்.

## தலைநோய் மேற்பூச்சுத் தைலம்.

மருதோன்றியிலை விராகனெடை-௧௦. எள்ளெண்ணெய் பலம்-௨. இந்தஎண்ணெயில் மேற்படி இலையைப்போட்டுக்காய்ச்சி, இலைநன்றாய்க்கறுகியபின் எல்லாவற்றையும் கல்வத்திலிட்டு வெண்ணெய்போலரைத்து பீங்கான்பாத்திரத்தில் பத்திரப்படுத்தவும். அவசியமானபோது ஒருகாதினடியிலிருந்து மறுகாதினடிவரையில் நெற்றியிற்பூசி, சற்று தூரமாக நெருப்பாவியைக் காண்பித்து சற்றுதாமதித்து, இந்த எண்ணெயைத்துடைத்து விடவேண்டும். இவ்விதம் தினம் ௨-அல்லது-௩-தடவை சமயோசிதம்போல் செய்துவரின், பலவகைத்தலைநோய்கள் சிற்சில சிரநோய்கள் ஆகியவைகள் தீரும்.

## மேற்படி வேறு.

சதாவரிஎண்ணெய், தண்ணீர்விட்டான் கிழங்கின் மேற்றோலையும் உள்நரம்பையும் நீக்கிஇடித்துப்பிழிந்து வடிகட்டினசாறு பங்கு-௩. நல்லெண்ணெய் பங்கு-௧. இவ்விரண்டையும் கலந்துக்காய்ச்சி, நீர்சுண்டினபதத்தில் இறக்கிவடிகட்டி ஆறினபின்பு சீஷாவில் பத்திரப்படுத்தவேண்டும். அவசியமானபோது மேற்கண்டபடி நெற்றியில் பூசிவரவேண்டியது. நெருப்பிற்காய்ச்சவேண்டிய அவசியமில்லை. இவ்விதம் தினம் ௨-அல்லது ௩-தடவைகள் பூசிவரின் ஒருபக்கதலைநோய் தீரும்.

## இஞ்சித் தைலம்.

இஞ்சிச்சாறு பலம்-௧௦. நல்லெண்ணெய்பலம்-௧௦. இவ்விரண்டையும் கலந்து சிறுதீயாய் எரித்துக்காய்ச்சி, மெழுகுபதத்தில் இறக்கிவடிகட்டி ஆறினபின்பு சீ

சாவில் பத்திரப்படுத்தவும். அவசியமானபோது சுமார்-க-கஉ-பலம் எடுத்துத்தலையிற்றேய்த்து மிகுந்திருப்பதை தேகத்திலும் தேப்த்து சிகைக்காய்யிட்டு வெந்நீரில் ஸ்நானஞ்செய்யவேண்டியது. இவ்விதம் இரண்டு நாள் அல்லது மூன்றுநாளைக்கோர்தடவை ஸ்நானஞ்செய்யவேண்டியது. இதனால் சீதளசம்பந்தமான தலைநோய், பீனிச சம்பந்தமான தலைநோய், ஒருபக்கத்து தலைநோய், ஆகியவைகள் தீரும். ஒருஸ்நாநத்திலேயே இதன்குணம் தெரிந்துகொள்ளலாம்.

குறிப்பு:—உஷ்ணதேகிகளானால் க௦-பலம் பசுவின்பாலையும் சேர்த்து சித்தப்படுத்திக் கொள்ளவேண்டியது.

## மேனித் தைலம்.

குப்பமேனிச்சாறு பலம் க௦. நல்லெண்ணெய் பலம்-க௦. இவ்விரண்டையும்கலந்து மேற்கண்டபடி சித்தப்படுத்திக்கொள்ளவும். மேற்கண்டபடி செய்துவரின் மேற்கண்டகுணங்களுண்டாம்.

குறிப்பு.—மேற்படி தைலத்தைக்காய்ச்சி யிறக்கும்சமயத்தில் காம்புகிள்ளின இரண்டுமிளகாய்களையும், ச-குன்றிமணியெடை அபினியையும்அதிற்போட்டு மிளகாய்கறுத்தவுடன் இறக்கிக்கொள்ளவும். இவ்விதமும் பலர் செய்வதுண்டு.

## செம்பைத் தைலம்.

சறுஞ்செம்பையின் இலைபூ ஆகியவைகளின்சாறு பலம் க௦.நல்லெண்ணெய் பலம்-க௦.மேற்கண்டபடிசெய்து மேற்கண்டபடி ஸ்நானஞ்செய்துவர மேற்கண்ட ரோகங்கள் தீரும்.

## சௌரித் தைலம்.

சௌரிப்பழச்சதை பலம்-௧௦. நல்லெண்ணெய் பலம்-௧௦. சௌரிப்பழத்தை நன்றாய்ச்சிதைத்து மேற்படி எண்ணெயிற்போட்டு மேற்படி பழம் கறுகின பதத்திலிறக்கி வடிகட்டி சீசாவில்பத்திரப்படுத்தவும். மேற்கண்டவாறு ஸ்நானஞ் செய்துவரின் மேற்கண்டரோகங்கள் தீரும்.

## நாணற் றைலம்.

நாணல்வேர் பலம்-௫. இதனைப்பஞ்சுபோல் சிதைத்து ஒருபடி ஜலத்திற்போட்டு நான்கிலொருபாகமாகச்சுண்டவைத்து வடிகட்டி திப்பிநீக்கின கஷாயத்துடன், பத்துபலம் நல்லெண்ணெயைச் சேர்த்துக்கொள்ளவும். மிளகு பலம்-௧. இதனைப் பசுவின்பாலில் வெண்ணெய்போலஅரைத்து முன்சித்தப்படுத்திருப்பதிற்கரைத்துக்காய்ச்சி மெழுகுபதத்திலிறக்கி வடிகட்டித்திப்பிநீக்கி சீசாவிற்பத்திரப்படுத்தவும். அவசியமானபோது மேற்கண்டவாறு ஸ்நானஞ்செய்துவரின் மேற்கண்டரோகங்கள் தீரும்.

## கீழநாச நசியம்.

கண்டங்கத்திரியிலைச்சாறு, விராகனெடை-௨. மூசாம்பரம் குன்றுமணியெடை-௨. இவ்விரண்டையும் சேர்த்துவெண்ணெய்போல் அரைத்து மெல்லியவஸ்திரத்தில்வைத்து இரண்டுநாசித் துவாரங்களிலும் இரண்டிரண்டு துளிகள்சொட்டவேண்டியது. இப்படிச் செய்துவருவதனால் சிரசிலுள்ளபுழுக்கள் வெளிப்பட்டு அதனாலுண்டாகும் தொந்தரவுகள் நீங்கிப்போகும்.

### சிரஸ்நானம்.

சீமைசாமந்திப்பூ, சதகுப்பை, சோம்பு இவைவ கைக்குபலம்-க. இவற்றைச்சிதைத்து முக்காற்படி ஜல த்திற்போட்டுக்காய்ச்சி அரைப்படியாகச் சுண்டவைத் துவடிகட்டி திப்பிநீக்கின கஷாயத்தை மூக்குள்ள ஒரு பாத்திரத்திற்போட்டுக்கொண்டு தலையில் நோயுள்ளவி டத்தில் பெருந்தாரையாக விடவேண்டும். கஷாயமெ ல்லாம் ஊற்றியானவுடன் தலையை நன்ருய்த் துடை த்துவிடவேண்டும். அவசியமானல் ஆரம்பத்திலேயே தண்ணீரை அதிகமாய்ச்சேர்த்துக் காய்ச்சிக்கொள்ள லாம். தலைஸ்நானம் செய்விக்கும்போது கொஞ்சம்ஜல ம்விட்டு ஸ்நானம் செய்விக்கலாகாது. அரைப்படிமுத ல் ஒன்றரைப்படிவரையில் உபயோகிக்கலாம். இவ்வி தம் தினம் க-அல்லது உ-தடவை செய்யலாம். இப் படிச்செய்துவருவதால் சீதளசம்பந்தமான தலைநோய் கள் தீரும்.

மேற்றேல் சீவின சுரைக்காய்ச்சதை, காஹூவி தை, இஸ்பகோல்விதை, பனப்ஷா, அத்திவிதை, உல ர்த்தின தாமரைப்பூ இவைவ வகை-க-க்குப் பலம்-ஐ. இவற்றை ஒன்றரைப்படி ஜலத்தில்போட்டுக்காய்ச்சி ஒருபடியாகச் சுண்டவைத்திறக்கி வடிகட்டி முன்போ ல் தலை ஸ்நானஞ்செய்விக்கவும். இதனுல் உஷ்ணசம் பந்தத்தலைநோய்த்தீரும்.

### பாதஸ்நானம்.

கரியுப்பு விராகனெடை-சு. கோதுமையுமி பிடி உ. இலந்தையிலை, அத்தியிலை, மணித்தக்காளியிலை இவை வகைக்குப்பலம்-ந. இவை யெல்லாவற்றையும்

நான்குபடி ஜலத்திற்போட்டுக் காய்ச்சி உ-படியாகச் சுண்டினபின் அகன்று குறுகின ஒருபாத்திரத்திற் போட்டு, ரோயாளியை உயர்ந்த ஸ்தானத்தின் மேலுட் காரவைத்து நோயாளியின் இரண்டு பாதங்களையும் இந்த ஜலத்திற்குள் வைக்கும்படி செய்யவேண்டியது. ஜலமானது மிதமான சூடாகயிருக்கவேண்டும். இன்னும் அது, கணுக்கால்களின்மேல் நாலாறங்குல மிருக்கவேண்டியது. இரண்டு கால்களையும் மெதுவாய்ப் பிடித்து அழுத்திவிடவேண்டியது. இன்னும் உள்ளங் கால்களை மெதுவாய்த்தேய்த்து விடுவதாலும் சுகுண முண்டாகும். இதனால் சீதளத்தலைநோய், உஷ்ணத் தலைநோய் ஆகியவைகள் தீரும்.

குறிப்பு:—மேற்கண்ட சரக்குகள் எல்லாம்கிடைத்தால் உத்தமம். கிடைக்காத சமயங்களில் கோதுமையுமி, கரியுப்பு ஆகிய இரண்டையும் போட்டுக்காய்ச்சி மேற்கண்டபடி பாதஸ்நானஞ் செய்விப்பதனாலும் மேற்கண்ட குணமுண்டாகும்.

கீழ்கண்ட பாதஸ்நான முறைப்படியும் செய்யலாம்.

குறிப்பு:—தலைநோயுள்ளவர்களின் கைகளிலும் கால்களிலும் வெந்நீரை தாரையாக விட்டுக்கொண்டிருப்பதனாலும்ஆரோக்கிய முண்டானதாகபூஅலீஸீனா என்னும் மஹாபண்டிதர் தம் அனுபவத்தினால் நிச்சயித்து எழுதியிருக்கின்றனர்.

இன்னும் தலைநோயுள்ளவர்களின் உள்ளங்கால்களைத் தேய்த்துக்கொண்டிருப்பதனாலும் ஆரோக்கிய முண்டாகும்.

## பாதஸ்நான விதி.

அவசியமான வஸ்துக்களை ஜலத்திலிட்டுக்காய்ச்சி ஆற்றித்தேகம் சகிக்கத்தக்க சூடாயிருக்கும்போது, ரோகியை மேடான ஸ்தானத்தில் உட்காரவைத்து: கால்களைக் கீழே தொங்கவைத்திருக்கும்படி செய்து, கால்களை பெரிய வாயகண்ட பாத்திரத்தில் வைத்து ரோகியின் தோளிலிருந்து முழங்கால்வரையில் ஒரு துப்பட்டியால் போர்த்தி, தலையைத்திறந்து வைத்து, முதுகில் ஒரு தலைக்காணிவைத்து பின்பக்கம் சார்ந்து கொள்ளும்படியாகச்செய்து, முகத்தில் கஷாயத்தின் ஆவிபடாமல் இடையில் திரையொன்று கட்டி, இரண்டு ஆட்கள் ஆளுக்கொவ்வொன்ருய் இரண்டு கலையங்களிஞல் முன் கஷாயத்தை ரோகியின் முழங்காலின் மீது தாரையாய் விடவேண்டும். வேறு இரண்டு ஆட்கள் முழங்காலிலிருந்து பாதம்வரையில் இருவரும் ஒற்றவிதமாய் மேல்பக்கமிருந்து கீழ்ப்பக்கமெதுவாய் அழுத்திப்பிடிக்கவேண்டும். பின்பும் அந்த ஜலத்தையே முன்மாதிரியே ஊற்றி யூற்றி மேலிருந்து கீழ்ப்பக்கம் பிடிக்கவேண்டும். கீழ்ப்பக்கமிருந்து மேல்பக்கம் பிடிக்கலாகாது. இவ்விதம் யுக்தமானகாலம்வரையிற்செய்து ரோகியின் கால்களை, வஸ்திரத்திஞல் ஈரமில்லாமல் நன்ருய்த்துடைத்துடனே, உரத்தத்துணியின் பாளத்திஞல் முழங்கால்வரையில் சுற்றிக்கட்டிவைக்கவேண்டும், இப்படிச்செய்வதஞல் கீழிறங்கின ஆவியானது மேலுக்கேற ஏதுவிராது. பின் ரோகியைப்படுக்கவைத்துத் தலையும், உள்ளங்கால்களும் வெளியிலிருக்கும்படி செய்து தேகத்தின் மற்றபாகங்களை உறத்த துப்பட்டியால் நன்ருகபோர்த்தி வைக்கவேண்டும். இப்படிச்செ

ய்வதனுல் வெயர்வையுண்டாம். வெயர்வை வெளிப்பட்டால் மேல்துப்பட்டியை யெடுக்காமல் உள்ளுக்குள்ளேயே துடைத்துவிடவேண்டும். வெயர்வை நின்றுவிட்டால் கொஞ்சங் கொஞ்சமாய்ப் போர்வையை நீக்கவேண்டும். போர்வையையுடனே தேகத்திலிருந்து நீக்கிவிட்டால் குளிர்ந்த காற்றுபட ஏதுவாகும். சூடுங் குளிர்ச்சியும் ஏககாலத்தில் உண்டாவதனுல், தேகமுற்றிலும் வலியுண்டாகி தொந்திரவிற்கிடமாம். பின்புபாதத்திலிருந்து கட்டையவிழ்த்து விடவேண்டும்.

## தலைநோய் ஆக்ராணம்.

வெள்ளை அலரி இலையை நிழலிலுலர்த்தி இடித்துச்சூரணித்து வஸ்திரகாயஞ்செய்து சீசாவில் பத்திரப்படுத்தவும். அவசியமானபோது வயதிற்குத்தக்கபடி க-அல்லது உ குன்றிடைணியெடைச் சூரணத்தை இரண்டு நாசித்துவாரங்களிலும் ஆக்ராணஞ்செய்யவேண்டியது. அதாவது நாசித்துவாரத்தில் சமீபத்தில் வைத்து உறிஞ்சிக்கொள்ளலாம். அல்லது இதற்காகச் செய்யப்பட்டிருக்கும் ரப்பர் குழாயிற்குள் போட்டுக்கொண்டு, நாசித்துவாரத்தில் ஊதியும் விடலாம். அல்லது, இதற்காகச் செய்யப்பட்டிருக்கும் றப்பர் யந்திரத்தில் வைத்து உபயோகித்துக்கொள்ளலாம்.

## தலைநோய்க்காவி.

நோயாளியை பிரம்புக்கட்டிலின் மீதுப்படுக்கவைத்து நோயாளியின்மீது துப்பட்டியை அல்லது கம்பளியைப்போட்டு கட்டின் கீழும் துப்பட்டி முதலியன தொங்கும்படியாக விட்டு கட்டிலின்கீழ் தண்ணீரால் முக்கால்வாசி நிறைந்துள்ள இரண்டு பாத்திரங்களை

வைத்து செங்கற்றுண்டுகளை நெருப்பைப்போற் சிவக்கக்காய்ச்சி ஒவ்வொரு பாத்திரங்களிலும் ஒன்று அல்லது இரண்டு துண்டுகளைப்போட ஆவியெழும்பும். அந்த ஆவியானது வெளியிற்போகாமல் ஜாக்கிரதை செய்யவேண்டியது. இந்த ஆவியால் தேகத்தில் நன்ருய் வியர்வையுண்டாகும். அவசியமானல் இரண்டாந்தடவையும் செங்கற்றுண்டைக்காய்ச்சி ஜலத்திற்போடலாம். ஆனல் இதற்காக முன்னமே சித்தப்படுத்தி வைத்திருந்து முதல்தடவை போட்டதில் ஆவி குறைந்தவுடன் போடவேண்டியது. நன்ருய் வியர்வை புரப்பட்டவுடன் குளிர்ந்த காற்று மேலேபடாமல் சீக்கிரமாக தேகத்தைத்துடைத்து சுத்திசெய்யவேண்டியது. இவ்விதம் செய்வதால் தலைநோய் உடனே சாந்தப்படும்.

குறிப்பு:—தற்காலத்தில் நேசர்கியூர் (Nature cure) என்னும் ஆவிசிகிச்சையை தாங்கள் புதிதாய்க் கண்டுபிடித்ததாக வெகுவாய் எழுதிவருகின்ருர்கள். இந்த சிகிச்சையானது நமது முன்னேர்களால் பூர்வீகத்திலேயே கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

தலைநோய் உசிதம்.

இரண்டிரண்டு ஊமத்தன் விதையை தினந்தோறும் விழுங்கிவருவதனல் நாட்பட்ட தலைநோய் தீரும்.

மேற்படி வேறு.

மஞ்சிட்டியை தலையிற்கட்டி வைப்பதினுலும் தலைநோய்தீரும். இப்படிச் செய்வதைப்பார்க்கிலும் மஞ்சிட்டியைத் தூள்செய்து முலைப்பால்விட்டுவெண்ணெய் போலரைத்து நெற்றியிற்பற்றிடுவது உத்தமம்.

## மேற்படி வேறு.

வெள்ளரிக்காய்த்துண்டுகளை அல்லது சுரைக்காய்ச்சதை தலையில் வைத்துக்கட்டுவதனால் உஷ்ணசம்மந்ததலைநோய், இரத்த ஓட்டம் அதிகரித்துண்டாம் தலைநோய் ஆகியவைகள் தீரும்.

குறிப்பு:—தற்காலத்தில் (Ice bag) ஐஸ்பாக்என்னும் பனிக்கட்டிப்பையைத் தலையில் ஒற்றிடம் கொடுத்து வரப்படுகிறது. நமது முன்னோர்கட்கும் இவ்வித சிகிச்சை தெரிந்தேயிருந்தன. ஆனல் அக்காலங்களில் பனிக்கட்டி யில்லாமையாலும், நினைத்த விடங்களில் கிடைப்பதரிபாமையாலும் இலகுவாய் கிடக்கக்கூடிய மேற்கண்ட வஸ்துக்களை நமதுமுன்னோர்கள் உபயோகித்து வந்தன.

## மூர்ச்சைரோகச் சிகிச்சை.

இந்த வியாதியின்காரணம் முதலியவைகளெல்லாம் நமது யூனனிவைத்திய பாலபோதினியில் எழுதியிருக்கின்றோம். ஆகையால் கனவான்கள் தயவுடன் அதனைப்பார்த்துக்கொள்ளுங்கள்.

## சுரைக்காய் எண்ணெய்.

சுரைக்காயை யிடித்துப்பிழிந்து வடிகட்டினசாறு ஒருபங்கு, நல்லெண்ணெய் ஒருபங்கு இவ்விரண்டையும் சேர்த்துக்காய்ச்சி நீர்சுண்டின பதத்திலிறக்கி வடிகட்டி ஆறினபின் சீசாவில் பத்திரப்படுத்தவும். இந்த எண்ணெயை சிரசின்மீது பூசிவரவேண்டியது. இப்படிச்செய்வதனல் உஷ்ணசம்பந்தமான மூர்ச்சைரோகம் தீரும்.

## தாமரைப்பூ எண்ணெய்.

உலர்ந்த தாமரைப்பூ வீஸ-ந. இதனை மூன்று பாகமாக்கி ஒருபாகத்தில் நான்குபடிஜலத்தைவிட்டுக் காய்ச்சி ஒருபடிஜலம் சுண்டினபின்பு கீழிறக்கி இளஞ்சூடாயிருக்கும்போது நன்றாய்ப்பிசைந்துப் பிழிந்து திப்பியை நீக்கிவிடவேண்டியது. அந்தக்கஷாயத்தில் மற்றொருபாகத்தைப்போட்டு அடுப்பேற்றிக்காய்ச்சி மறுபடி ஒருபடிஜலம் சுண்டினபின்பு இறக்கி முன்போல் இளஞ்சூட்டிற் பிசைந்துப்பிழிந்து திப்பியைநீக்கிவிடவேண்டியது. இந்தக்கஷாயத்தில் மற்றொருபாகத்தையும்போட்டு ஒருபடிஜலம்காய்ச்சி ஒருபடிஜலம் சுண்டினபின்பு இறக்கி இளஞ்சூட்டிற்ப்பிசைந்து பிழிந்துதிப்பி நீக்கிவடிகட்டின கஷாயம் பங்கு இரண்டு நல்லெண்ணெய் பங்கு ஒன்று. இரண்டையும்சேர்த்துக் காய்ச்சி மெழுகுபதத்தில் இறக்கி இளஞ்சூட்டில் வடிகட்டி புட்டியில் பத்திரப்படுத்தவேண்டியது. இதனைத் தலையிற் பூசிவருவதனால் உஷ்ணசம்மந்தத்தலைநோய், உஷ்ணசம்மந்தமூர்ச்சைரோகம் ஆகியவை தீரும்.

## அகரு ஷர்பத்து.

திறமான கிருஷ்ண அகர் விராகனெடை-ரு. இலவங்கம், ஜடாமாஞ்சி, இலவங்கப்பட்டை வகைக்கு விராகனெளட-கஉ. சீனிசருக்கரை பலம் கூ.

செய்முறை:—மேற்கண்டசரக்குகளைத் தனித்தனியாய்ச்சிதைத்து ஒரு மெல்லிய வஸ்ரத்தில் தளரமுடிந்து அதில் அரைப்படி பன்னீரை அல்லது குளிர்ந்தஜலத்தைவார்த்து அடுப்பின்மீதேற்றி சிறுதீயாகயெரித்

து, அரைபாகம் சுண்டினபின்பு இறக்கிமுடிச்சை மெ துவாய்ப்பிசைந்து பிழிந்து, அதில் மேற்படி சர்க்க ரையைச் சேர்த்துக்காய்ச்சி பாகுபதத்தில் இறக்கிசீசா வில் பத்திரப்படுத்தவும்.

சக்தியுள்ளவர்கள் கஸ்தூரி, அம்பர், வகைக்குகு ன்றிமணியெடை-உ. இவற்றைப்பொடித்து மேற்படி ஷர்பத்தில் கலந்து வைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-க௱-உ.

உபயோகம்:—மூளையை பலப்படுத்தி மூர்ச்சை ரோகங்களை குணப்படுத்தும்.

மூர்ச்சை நசியம்.

இழைத்த வெண்சந்தனம், பச்சைக்கர்ப்பூரம் இ வைவகைக்கு குன்றிமணியெடை-உ. காஹூ கீரைச்சா று விராகனெடை-க. இவையெல்லாவற்றையும் கல்வத் திலிட்டு ஷை சாற்றைவிட்டு ஒருமணிநேரம் அரைத்து மெல்லிய வஸ்திரத்தில்வைத்து இரண்டு நாசித்துவார ங்களிலும் மும்மூன்று துளிகள் சொட்டிவரவேண்டும். இதனால் மூர்ச்சை ரோகங்கள் தீரும்.

மேற்படி வேறு.

ஸ்தனப்பாலை இரண்டு நாசிந்துவாரங்களிலும் ந ன்னான்கு துளிகள் சொட்டி வருவதனாலும் மூர்ச்சை ரோகம்தீரும்.

ஷை வேறு.

மேற்படி ரோகியின்தலையில் ஸ்திரீ தன் பாலைப் பிச்சும்படி செய்வதாலும் மேற்படிரோகம் குணப்படும்.

மேற்படி வேறு.

ஸ்தனப்பாலை துணியில்நனைத்து சிரசின்மீதுபோட்டு வைப்பதனாலும், அல்லது அந்தப்பாலை தலையில்தளரப்பூசி வைப்பதனாலும் மேற்படி ரோகம் குணப்படும்.

மேற்படி வேறு.

ஸ்தனப்பால் அகப்படாவிடில், வெள்ளாட்டின்பாலைமேற்கண்டபடி பலவகையாக உபயோகிக்க மூர்ச்சை ரோகம் குணப்படும்.

மூர்ச்சை உசிதம்.

காஹூகீரைச்சாறு, பச்சைக் கொத்துமல்லிக்கீரைச்சாறு, வெள்ளரிக்காய்ச்சாறு, காடி. இவைகளை சமபாகமாகச் சேர்த்து ஒரு சீசாவில்விட்டு காரக்கிட்டு வைத்துக்கொள்ளவேண்டும். அவசியமானபோது காரக்கைத்திறந்து சீசாவை நாசித்துவாரத்தில் மாற்றி மாற்றிவைத்து முகரவேண்டும். இவ்விதம் ஒருநாளையில் நாலைந்து தடவைகள் செய்துவரின் உஷ்ணசம்பந்தமான மூர்ச்சை ரோகம் தீரும்.

மேற்படி வேறு.

இழைத்தசந்தனம் விராகனெடை-க. சூடன் விராகனெடை-வ. காகினிக்கீரைச்சாறு விராகனெடை உ௨. முலாம்பழச்சாறு விராகனெடை-உ௨.

இவையெல்லாவற்றையும் கல்வத்திலிட்டு, ஒருமணிநேரமரைத்து மேற்கண்டபடி சீசாவில்வைத்து முகர்ந்துவர மேற்கண்டரோகந் தீரும்.

## மூர்ச்சை பாத ஸ்நானம்.

சீமைதுத்திப்பூ, தாமரைப்பூ, சுரைக்காய்ச்சதை வகைக்குப்பலம்-ரு. கோதுமையுமி மூன்றுபிடி.

இவைகளை நான்குபடி ஜலத்திற்போட்டு, இரண்டுபடியாகக் காய்ச்சிச் சுண்டவைத்து, முன்சொல்லிய படி பாதஸ்நாநம் செய்விக்க, மூர்ச்சை ரோகந்தீரும்.

## காக்கைவலிப் பொதுசிகிச்சை.

காக்கைவலி கண்டிருக்கும்போது நோயாளியின் கைகால்கள், கை, கால்விரற்கள், கண், மூக்கு, வாய் ஆகியவைகளின் சுபாவஸ்திதியை கவனிக்கவேண்டியது ஆவசியகம்.

மேற்றோல் சீவியசுக்கு, மிளகு, அரிசித்திப்பிலி, நவச்சாரம், ஆற்றுத் தும்மட்டிக்காய்ச்சதை, கறுஞ்சீரகம் ஆகியவைகளுள் எல்லாவற்றையும், அல்லது ஒன்றிரண்டை, அல்லது கிடைத்தவைகளைச் சூரணித்து வஸ்திரகாயஞ்செய்து, நோயாளியின் நாசித்துவாரங்களில் ஒருகுன்றிமணியெடை. மேற்படி சூரணத்தைஒரு குழாயில்வைத்து ஊதவேண்டும். மற்ற நாசித்துவாரத்திலும் இவ்விதமே செய்யவேண்டும். இதனுல் மூர்ச்சைத்தெளிந்து ஸ்மரணைவந்துவிடும். ஸ்மரணை வந்தபின்பு, துர்நீர்களைப் பக்குவப்படுத்தும் கஷாயங்களையுபயோகித்து, அதுபக்குவப்பட்டபின்பு ஹப்பெ அயாரிஜ் என்னும்தேவகிருபா மாத்திரைகளையுபயோகித்து துர்நீர்களை வெளிப்படுத்தி சுத்திசெய்யவேண்டும்.

ஆடுமுதலிய மிருகங்களின் மாமிசங்கள்; குளிர்ச்சி, கொழுமையான பழவர்க்கங்கள்; பால், வெங்காயம், மசூரிப்பருப்பு முதலியவைகளையும், இரைப்பையினின்று ஆவியை யெழும்பச்செய்யும் பதார்த்தங்களையும் நீக்கவேண்டியது. துர்வாசனைகளை முகர்தல், இரவில் அதிகநேரம் விழித்திருத்தல், குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானஞ்செய்தல், வயிறு நிறைந்திருக்கும்போது தூங்குதல், வெயில், மழை, ஆகியவைகளில் திரிதல், பயங்கரமான சப்தங்கள் காதில்விழல், குளிர்ச்சியானகாற்றில் திரிதல் முதலாகிய கிரியைகளினின்றும்காக்கைவலி யுள்ளவர்கள் அதிக ஜாக்கிரதையுடன் பத்தியம் காக்கவேண்டியது.

குழந்தைகளுக்குக் காணும் காக்கைவலிமுதலிய வலிப்பு ரோகங்களில், அதிகசூடான அல்லது அதிக குளிர்ச்சியான பிரயோகங்களை உபயோகிக்கலாகாது. உஷ்ணசீதளம் சமமான பிரயோகங்களைப் உபயோகிக்கவேண்டியது.

இந்த ரோயாளிகட்கு மலபந்தமிருந்தால் ஆசனத்திரிகளை உபயோகித்து மலபந்தத்தை நிவர்த்திசெய்யவேண்டியது.

இத்துஷ்டவியாதிக்கு உபயோகமாம் சில சூக்ஷ்மசிகிச்சைகளை அடியில் எழுதுவாம்.

காக்கைவலி மாத்திரை.

நாக்குப்பூச்சி இரத்தம், இது சேகரிக்க முடியாவிடில், மண் முதலியவைநீக்கி சுத்திசெய்த நாக்குப்பூச்சி,

பவைக்கோதுமைமாவு, அல்லது அரிசிமாவு இவைவ கைக்கு விராகனெடை-க. தேன் விராகனெடை-உ.

இவற்றைக் கல்வத்திலிட்டு ஒருமணிநேரமரைத்து மிளகுப்பிரமாண மாத்திரைகள்செய்து சீசாவில்பத்தி ரப்படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-க-முதல்-உ-வரையில்.

வியாதி யில்லாதிருக்கும்போது காலை மாலை இர ண்டுவேளையும் உபயோகித்து மேற்கண்டபடி பத்தியம் காத்துவந்தால் இரண்டொருமாதங்களுக்குள் இந்தரோ கம் நின்றுவிடுகிறது.

## காக்கைவலி கோகிலாதி மாத்திரை.

சுத்திசெய்த மைசாக்ஷி விராகனெடை-உஉ. கோஷ்டச்சூரணம், மேற்சொல்சீவின சுக்குச்சூரணம், வால்மிளகுச்சூரணம், தேவதாருச்சூரணம். இவைவ கைக்கு விராகனெடை-ரு. உலர்த்தின கறுப்புக்கையா ந்தகரைச்சூரணம், மிளகுச்சூரணம், அக்காராகாரச்சூ ரணம், யானைத்திப்பிலிச்சூரணம், சணல்விதைச்சூரண ம். இவைவகைக்கு விராகனெடை-உவ.

செய்முறை:— இலைகளைக் கல்லுரலிற்போட்டு இருப்புலக்கையால் நன்றாபிடித்து நன்றுப் மசிந்தபின் பு, கொஞ்சம் தேனைவிட்டு மறுபடியும் வெண்ணெய் போல்இடித்து அரை விராகனெடையுள்ள மாத்திரை களாகச்செய்து சீசாவில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:— மாத்திரை-உ-முதல்-ச-வரையில்.

உபயோகம்:—காக்கைவலியுள்ளவர்கள், இதனைத் தொடர்ச்சியாய் உபயோகித்துவருவதனுல் அந்த வியாதி

க்குக்காரணமாகும் துர்நீர்களை நீக்கித் தேகத்தைச்சுத்திசெய்யும். இந்த வியாதியை வாராமற்றடுக்கும்.

### லாலா ஷர்பத்து.

லாலாப்பூ பலம்-உ௦. சீனிசருக்கரை பலம்-ரு. கால்படி ஜலத்தில் ஷை பூவைப்போட்டுக்காய்ச்சி ஒரு ஆழாக்காகச் சுண்டினவுடன் இறக்கி வடிகட்டி திப்பிநீக்கின கஷாயத்தில் ஷை சருக்கரையைப் போட்டுக்காய்ச்சிப் பாகுபதத்தில் இறக்கி ஆறினபின் புட்டியிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:— விராகனெடை-க௦-முதல்-உ௦-வரையில் குழந்தைகளுக்கானால் விராகனெடை-ரு-முதல்-க-வரையில்.

உபயோகம்:—வலிப்பில்லாத காலங்களில் இதனை உபயோகிக்கவேண்டும். இதனைத்துடர்ச்சியாக உபயோகித்துவந்தால் ஷை வியாதி தலையெடுக்காது வேரறுந்துபோவதுமுண்டு. அப்படிமுழுவதும் குணமாகாவிட்டாலும் வியாதிமூர்க்கப்படாமல் சாந்தமாகிவிடும்,

### அக்கராகார மாஜூனம்.

அக்கிராகாரச்சூரணம் பலம்-ரு. சீமைதிராக்ஷைக்காடி பலம்-ரு. தேன் பலம்-கஎ௦.

செய்முறை:—அக்கிராகாரப்பொடியைக் கல்வத்திற்போட்டு, ஷை காடியைச் சிறுகச்சிறுக வார்த்து, அரைக்கவேண்டியது. காடியெல்லாம் சென்றபின்பு நிழலில்வைத்து உலர்த்தி மறுபடியும் பொடித்துவைத்துக்கொள்ளவும். தேனைக்காய்ச்சி நுரையை நீக்கிவிட்டு அதில் முன்சித்தப்படுத்தி வைத்திருக்கிற சூரணத்தை

சிறுகச் சிறுகத்தூவி நன்றாய்க்கிளறி கீழிறக்கிவைத்து ஆறினபின்பு பீங்கான்பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-௩௬, முதல் ௨வரையில். வெந்நீருடன் உட்கொள்ளவேண்டியது. நோயாளிக்கு பேதிக்குக்கொடுத்து தேகத்தை சுத்திசெய்து வலிப்பில்லாதகாலங்களில் இதனை யுபயோகிக்கவேண்டியது. இது ஜாலிகியூஸ் மகாபண்டிதர் அவர்களின் அநுபவமுறை.

காக்கைவலி நசியம்.

வெள்ளருக்கன் வேர்ப்பட்டை. இது அகப்படாவிடில் எருக்கின்வேர்ப்பட்டை விராகனெடை-௧. இதனைக்கல்வத்திலிட்டு அரைப்பலம் வெள்ளாட்டின் பாலை அதில்விட்டு ஒருமணிநேரம் நன்றாய் அரைத்து வெண்ணெய்போலானபின்பு மெல்லிய வஸ்திரத்தில் வைத்துப்பிழிந்து சீசாவில் பத்திரப்படுத்தவும்.

உபயோகம்:—ஒவ்வொரு நாசித்துவாரங்களிலும் இரண்டு அல்லது மூன்றுதுளிகள் விடவேண்டியது. வலிப்பு வந்திருக்கும்போதும், வலிப்பில்லாக் காலங்களிலும் இந்த நசியத்தையுபயோகிப்பதால் அதிக குணமுண்டாகும். காக்கைவலி முதலியவலிப்பு ரோகங்கள் தீரும்.

மேற்படி வேறு.

முள் முருக்கன்வேர்ப்பட்டை விராகனெடை-௧.

இதனைக்கல்வத்திலிட்டு, ஜலம்கொட்டி வெண்ணெய்போல் அரைத்து வலிகண்டிருக்கும்போது இந்,

ண்டு நாசித்துவாரங்களிலும் மும்மூன்று துளிகள் சொட்டவேண்டியது.

மேற்படி வேறு.

ஓணைய்பீத்து ஜலத்தை, ஒருபீங்கானில் விட்டு அளவிற்குத் தகுந்தபடி எ-கூ-கக. மிளகுகளைப்போட்டு நிழலில்வைத்து எல்லாம் சுண்டி நன்ருய் உலர்ந்தபின் புப்பொடித்து சிஷாவில் பத்திரப்படுத்தவும்.

காக்கைவலி கண்டிருக்கும்போது இந்தச் சூரணத்திற்கொஞ்சம் எடுத்து கொஞ்சம் தண்ணீரிற்கரைத்து துணியில்வைத்து இரண்டு நாசித்துவாரங்களிலும் மும்மூன்று துளிகள் சொட்டவேண்டியது. இவ்விதம் சிலதடவைகள் செய்யின் அந்தநோய் வேரற்றுப்போய் விடும்.

ஷை வேறு.

இலுப்பைக்கொட்டைப்பருப்பு ஒன்றிற்பாதி, மிளகு ரு. எண். இவற்றைக்கல்வத்திற்பொடித்து, கொஞ்சம் ஜலம்வார்த்து வெண்ணெய்போல் அரைத்துமெல்லிய வஸ்திரத்தில் வைத்து இரண்டு நாசித்துவாரங்களிலும் மும்மூன்று துளிகள் நசியம் செய்யவேண்டியது.

வலிப்பு கண்டிருக்கும்போது இதனை யுபயோகிக்கவேண்டியது. இதனைச்சிலதடவைகள் உபயோகிக்கின் காக்கைவலி தீரும்.

ஷை வேறு.

பேய்ப்பீர்க்குவிதைப்பருப்பை, கல்வத்திலிட்டுகொஞ்சம் ஜலம்வார்த்துவெண்ணைபோலரைத்து துணியில்

வைத்து, இரண்டுநாசித்துவாரங்களிலும்நன்னான்கு துளிகள்சொட்டினல் வலிப்பு ஸ்மரணையிலிருந்துசீக்கிரம் தெளிவுண்டாகும். இவ்விதமே பேய்ப்பீர்க்குச்சதையை எடுத்து நசியம்செய்வதால் மேற்கண்ட குணமுண்டாம்.

ஷை வேறு.

கண்டங்கத்திரி இலையை கல்வத்தில் வெண்ணெய்போல் அரைத்துத்துணியில் வைத்துப்பிழிந்து இரண்டு நாசித்துவாரங்களிலும் இரண்டுதுளிகள் சொட்டவேண்டியது, வலிப்பு கண்டிருக்கும்போது இதனையுபயோகிக்கவேண்டும். இவ்விதம் சில தடவைகள்செய்துவரின் இக்தரோகம் தீரும்.

ஷை வேறு.

யானை மதம் கொண்டிருக்கும்போது அதின்காதடியில் வடியும் மதஜலத்தைப்பஞ்சில் நனைத்து ஒருசீசாவிற்பிழிந்து பத்திரப்படுத்தவேண்டும். இவ்விதம் கூடியவரையிலும் கிடைத்தவரையிலும் சேகரித்துச் சித்தப்படுத்தி வைத்துக்கொள்ளவேண்டியது. வலிப்புகாணும்போது ஒவ்வொரு நாசித்துவாரங்களிலும் இரண்டிரண்டுதுளிகள் சொட்டிவரவேண்டும். வலிப்பு இல்லாதகாலங்களிலும் இதனைச்சொட்டிவரலாம். இவ்விதம் செய்துவருவதால் காக்கைவலிப்பானது அடியோடு நீங்கிவிடும்.

மேற்படி வேறு.

நவச்சாரம் பங்கு-உ. சுக்கு ட்ரைன்போளம் பங்கு-உ. நல்லெண்ணெய் பங்கு-ச. எல்லாவற்றையும் கல்வத்திலிட்டு ஒருமணிநேரம் அரைத்து வெண்ணெய்

போல் ஆனபின்பு எடுத்துத் துணியில் வைத்துப்பிழிந்து இரண்டு நாசித்துவாரங்களிலும் இரண்டிரண்டு துளிகள் சொட்டிவரவேண்டும். இவ்விதம் சிலநாட்செய்யின் ஷை காக்கைவலிப்பு ரோகம் தீரும்.

மேற்படி வேறு.

கண்டங்கத்திரி வேர்ப்பட்டை கஞ்சாவிதை வகைக்குச் சமபாகம். இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு அரைத்து மசிந்தபின்பு சிறுபிள்ளையின் மூத்திரத்தைக் கொஞ்சம்விட்டு அரைமணி நேரமரைத்து மெல்லிய வஸ்திரத்தில் வைத்து இரண்டு நாசித்துவாரங்களிலும் மும்மூன்று துளிகள் நசியம் செய்யவேண்டியது.

இவ்விதம் சிலநாட்கள் செய்யின் காக்கைவலிதீர்ந்துபோம்.

காக்கைவலி ஆக்ராணம்.

உலர்த்தினகண்டங்கத்திரிப்பழம், மருதம்பட்டைதும்மற்பூண்டு இவற்றின்சூரணம் வகைக்கு விராகனெடை-கஅ. புகையிலைத்தூள் விராகனெடை-கஉ. எல்லாவற்றையும் கலந்துவைத்துக்கொண்டு, மூக்குத்தூளைப்போல் தினம் ச-டு-தடவைகள் உபயோகித்துவரவேண்டியது. இவ்விதம் செய்துவருவதால்காக்கைவலிரோகம்தீரும்.

மேற்படி வேறு.

பெருச்சாளிப்பித்துப்பையில் கொஞ்சம் மிளகைப்போட்டுவைத்து, நீரெல்லாஞ்சுண்டினபின்பு உலர்த்திபுட்டியில் பத்திரப்படுத்தவேண்டும். வலிப்பு கண்டிருக்கும்போது ஷை இரண்டுமிளகைப்பொடித்து இரண்டு

நாசித்துவாரங்களிலும் வைத்து ஊதவேண்டியது. இவ்விதம் சிலதடவைகள் செய்துவரின் காக்கைவலிப்பு ரோகம் தீரும்.

மேற்படி வேறு.

பூவந்திக்கொட்டையென்னும் பொன்னுங்கொட்டையை தோல், ஓடு, பருப்பு ஆகிய எல்லாவற்றையும் ஒன்ருய்ச்சேர்த்துப்பொடித்து வஸ்திரகாயஞ்செய்து வைத்துக்கொண்டு வலிப்பு கண்டிருக்கும்போதும் வலிப்பு இல்லாக்காலங்களிலும் ஷைசூரணத்தை மூக்குத்தூளைப்போல உபயோகித்து வரவேண்டும், இவ்விதம் சிலநாட்செய்துவரின் காக்கைவலிமுதலிய வலிப்பு ரோகம் தீரும்.

மேற்படி வேறு.

எருக்கன் செடிகளின்மீது உலாவித்திரியும் பலவர்ண்கிளிகளுண்டு. அக்கிளிகளைப்பிடித்து உலர்த்தி, இடித்துத்தூள்செய்து வஸ்திரகாயஞ்செய்த சூரணத்தின்சமனெடை மிளகுச்சூரணத்தைச்சேர்த்து, இரண்டையும் கல்வத்திலிட்டு ஒருஜாமநேரமரைத்து புட்டியில்வைத்துக்கொண்டு மூக்குத்தூளைப்போல் உபயோகித்து வரவேண்டியது இவ்விதம் சிலநாட்கள் தொடர்ச்சியாகச் செய்துவந்தால் காக்கைவலிமுதலிய பலவலிப்பு ரோகங்கள்தீரும்.

காக்கை வலிப்புகை.

சீத்தாப்பழவிதைப்பருப்புப் பொடித்து, ஒருதுணியில்வைத்துத் திரியாகச்செய்து வைத்துக்கொள்ளவேண்டியது. வலிப்பு கண்டிருக்கும்போது இத்திரியைக்கொளுத்தி நாசியில் புகைப்பிடிக்கவேண்டியது,

இவ்விதம் சிலதடவைகள் செய்துவரின் ஷிரோகம் தீரும்.

காக்கைவலி யுசிதங்கள்.

ஜத்வாரியென்னும் விஷநிவாரணி குன்றுமணியெடை-க. ஆண்பிள்ளையுள்ளதாயின் ஸ்தனப்பால் விராகனெடை-ச. மேற்படி மருந்தை நன்ருயிழைத்து அல்லது பொடித்து மேற்படி பாலில்கரைத்து குளிர்ப்பாட்டவேண்டும். காலை மாலை இரண்டுவேளையும் செய்துவரின் காக்கைவலிதீரும்.

குறிப்பு:—ஜத்வாரிக்குப் பதிலாக செம்மரக்கட்டைத்துண்டுகளை, அல்லது வேறுவகைக் கட்டைகளை எண்ணெயில் ஊறவைத்து ஜத்வார் எனவிற்பதுமுண்டு. அப்படிக்கில்லாமல் சுபமானதாய்ப்பார்த்து வாங்கியுபயோகிக்கவேண்டியது.

மேற்படி வேறு

எண்ணெய்ப்பசையுள்ள ஜாதிக்காயின் மத்தியில் துளைசெய்து சிகப்பு பட்டுக்கயிற்றை அதிற்கோர்த்து காக்கைவலியுள்ளவன் கழுத்தில் கட்டித்தொங்கவைத்திருப்பதனல் அந்தரோய் அடிக்கடி வராமல்கிரமேணுவாய் நின்றுபோம். இராப்பகல் எந்நேரமும் ரோ... ளியின் கழுத்திலேயே தொங்கிக்கொண்டிருக்கவேண்டும்.

மேற்படி வேறு.

உயர்ந்த பெருங்காயத்தை மணிமோற்சீவிகடுவில் துளைத்து பட்டு நூற்கயிற்றிற்கோர்த்து மேற்சொல்லியபடி கட்டிவைப்பதனுலும் மேற்கண்டரோகம் தீரும்.

மேற்படி வேறு.

பன்றியின் குளம்பைக்கடைசற்பிடித்து மோதிரம்போற்செய்து செவ்வாய்க்கிழமையதினம் நோயாளியின் கையிற்போடவேண்டும். அந்தமோதிரம் எப்போதும் கையிலிருக்கவேண்டியது. இரண்டு கைவிரல்களிலும் இரண்டு கால்விரல்களிலும்போட்டுவைத்திருக்கலாம். வலதுகைவிரலில்மாத்திரம்போட்டுவைத்திருந்தாலும் போதுமானது. இவ்விதம் துடர்ச்சியாய்ச் செய்துவரின் காக்கைவலிரோகம் கிரமேணுவாய்க்குறைந்து பூரணசௌக்கிய முண்டாகும்.

மேற்படி வேறு.

பன்றிமூத்திரம் விட்டமண்ணை மெல்லியவஸ்திரத்தில் முடிந்து இடுப்பில் அல்லது கையில் கடிக்கொண்டிருப்பதனாலும் காக்கைவலி தீர்ந்துபோகும்.

மேற்படி வேறு.

ஓனாயின் பற்களை சிறுபிள்ளைகளின்கழுத்தில்அல்லது இடுப்பில் கட்டிவைப்பதனால் அவர்களுக்குக்காணும் பலவகை வலிப்புரோகங்கள் தீரும்.

மேற்படி வேறு.

ஓனாயின் எலுப்புகளை மணிகளைப்போல் கடைந்து பட்டு நூலிற்கோர்த்து கழுத்தில் அல்லது இடுப்பில் கட்டிக்கொண்டிருந்தால் காக்கைவலிரோகம் கிரமேணுவாய்த் தீர்ந்துபோகும்.

மேற்படி வேறு.

ஓனாயின்மலத்தை வஸ்திரத்தில் முடிந்து கையில் அல்லது இடுப்பிற் கட்டிக்கொண்டிருப்பதனாலும் மேற்கண்டரோகம் குணப்பட்டுப்போம்.

### மேற்படி வேறு.

பசுவின் இடது பச்சுத்துக் கொம்பைக்கடைந்து மோதிரமாகச்செய்து நோயாளி வலதுகைவிரலில்போட்டுக்கொண்டிருக்கவேண்டியது. இவ்விதம் தொடர்ச்சியாய்ச் செய்துவரின் காக்கைவலி ரோகம்தீரும்.

### மேற்படி வேறு.

ஓனுயின் (உதட்டை) வாயிதழையுலர்த்திபொன் தகட்டில்வைத்து சிறுவர்களின் கழுத்தில் கட்டிவைப்தனல் சிறுவர்கட்குண்டாகும் பலவகை வலிப்பு ரோகங்கள்தீரும்.

## ஸக்தாயென்னும் மஹாமூர்ச்சை சிகிச்சை.

### ஷை நசியம்.

குந்திஷ், அப்ளாகாரத்தூள், கரியபோளத்தூள்' வகைக்குக் குன்றிமணியெடை-க. ஸகந்தர்வேர்ப்பட்டைச்சாறு துலா-க. இவை யெல்லாவற்றையும்சேர்த்து ஒருமணிநேரமரைத்து மெல்லிய சல்லாத்துணியில் வைத்து நோயாளியின் ஒவ்வொரு நாசித்துவாரத்திலும் மும்மூன்றுதுளிகள் சொட்டவேண்டும். இவ்விதம் நோயாளிக்கு ஸ்மரணையுண்டாகிற வரையில் தினம்மும்மூன்று தடவைசெய்துவர ஷைரோகம் தீர்ந்துஸ்மரணை யுண்டாகும்.

### மேற்படி வேறு.

உயர்ந்த பெருங்காயம். குன்றுமணியெடை-உ. ஒருபலம் சோம்புதிராவகத்தில் இதனை அரைத்து நோயாளியின் தொண்டையிற் றுளித்துளியாய்ச் சொட்ட வேண்டும். இவ்விதம் தினம் இரண்டு மூன்றுதடவை

கள் செய்துவரின் ஷிரோகம் தீர்ந்து ஸ்மரணையுண்டாகும்.

## மறதிரோகச் சிகிச்சைகள்.

### மறதி மாஜூன்.

சேராங்கொட்டைக் குழித்தைலம் விராகனெடை-உ. மஞ்சட் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், நெல்விமுள்ளி, ஜடாமாஞ்சி, பெருலவங்கப்பட்டை, லவங்கபத்திரி, கோரைக்கிழங்கு, உஸ்துகுத்தூஸ், இவற்றின் தனித்தனிச்சூரணம்விராகனெடை-ங. மிளகு, கிச்சிலிக்கிழங்கு இவற்றின் சூரணம் வகைக்கு விராகனெடை-ஹ. தேன் பலம்-க-வ.

செய்முறை:—சூரணங்கள் எல்லாவற்றையும் ஒன்ருகக்கலந்து, சேராங்கொட்டைத்தைலத்தை யதில்விட்டு, கையால் நன்ருக மிசிரமித்து கல்வத்திலும் ஒரு மணிநேரமரைத்து வைத்துக்கொள்ளவும். தேனைக்காய்ச்சி நுரைநீக்கி முன் சித்தப்படுத்தின சூரணத்தைச் சிறுகச் சிறுகத்தூவி நன்ருய்க்கிளறிமிஸ்ரமித்துக்கீழிறக்கி ஆறினபின் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:— விராகனெடை - க-முதல்-கஉ-வரையில். காலைமாலை இரண்டுவேளையும் உபயோகிக்கவேண்டும்.

உபயோகம்:—மறதி ரோகங்கள், சீதளசம்பந்தமானமூளை வியாதிகள், ஆகியவைகள் தீரும்.

### மேற்படி வேறு.

பெருலவங்கப்பட்டை, கோரைக்கிழங்கு இவற்றின்தனித்தனி இடித்த சூரணம் வகைக்கு விராகனெடை-கo. மேற்றோல்சீவினசுக்கு, மிளகு இவற்றின் சூரணம் வகைக்கு விராகனெடை-ரு. தேன் பலம்.சு.

செய்முறை:—மேற்கண்டவிதமாய்ச்செய்து கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-க-க௨. மேற்கண்ட விதமாக உபயோகிக்கவும்.

உபயோகம்:—மேற்கண்ட ரோகங்கள்தீரும்.

### மேற்படி வேறு.

வசம்பைச் சுட்டெரித்த சாம்பல் விராகனெடை-௩. சீனிசருக்கரை பலம்-சு. சர்க்கரையைப் பாகுசெய்து பாகுபதத்தில் ஷைசூரணத்தைத்தூவி கிண்டிக்கிளறிக் கீழிறக்கி ஆறினபின் பீங்கான்பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-௨௨-முதல்-௩௨-வரையில்.

உபயோகம்:—மறதிரோகத்தைத் தீர்க்கும். வெண்நரம்புகளிற் சூடுண்டாக்கும்.

### மறதிச் சூரணம்.

குந்திரிக்கத்தூள், மேற்றோல்சீவின சுக்குச்சூரணம், கோரைக்கிழங்குச்சூரணம் இவைவகைக்கு பலம்-க. இம்மூன்றையும் மிஸ்ரமித்துக்கல்வத்தில் ஒருமணிநேரமரைத்து புட்டியில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:— விராகனெடை-கஉ-முதல்-உ௨-வரையில்.

அனுபானம்:—திராக்ஷப்பழரசம்,உலர்ந்த திராக்ஷப்பழத்தின் கஷாயம், திராக்ஷப்பழத்தை யரைத்தவிழுது, திராக்ஷாமதுபானம் (போர்ட்டுஓயின்)முதலியவைகளாம்.

உபயோகம்:—மறதிரோகம் தீரும்.

மேற்படி வேறு.

மிளகு, அரிசித்திப்பிலி, மஞ்சள், தித்திப்புக்கோஷ்டம், மேற்புறணி சீவின அதிமதுரம், கருஞ்சீரகம், கல்லுப்பு, அஜ்மூதா ஓமம் இவற்றின் தனித்தனி சூரணம் வகைக்கு விராகனெடை-க. இவை யெல்லாவற்றையுங்கலந்து கல்வத்திலிட்டு ஒருசாமநேரமரைத்து புட்டியில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-கஉ-முதல்-உ-வரையில்.

அனுபானம்:—தேன் விராகனெடை-க. நெய் விராகனெடை.க. இவ்விரண்டையும் கலந்து மேற்படிச் சூரணத்தை பிரமாணப்படி அநுபானித்துட்கொள்ள வேண்டும். இவ்விதம் காலைமாலை இரண்டுவேளையும்உபயோகிக்கவேண்டும்.

உபயோகம்:—மறதி ரோகங்கள் தீரும்.

ஷை வேறு.

பிரமதண்டி சமூலத்தை வெயிலிலுலர்த்தி ஜாக்கிரதையுடன் இடித்துச் சூரணித்து வஸ்திரகாயஞ்செய்து சீசாவில் பத்திரப்படுத்தவும்,

பிரமாணம்:—விராகனெடை-க௱கஉ.

அனுபானம்:— பசுவின்பால் ஆழாக்குவ- ல் ஜீரணசக்திக்குத் தக்கபடியுபயோகிக்கவும். காலை மாலை இரண்டுவேளையும் கரு-நாள் உபயோகிக்கவேண்டும்.

உபயோகம்:—மறதிரோகம் தீரும். இரத்தசுத்தியுண்டாகும்.

பத்தியம்:—இரவில் கண்விழித்திருத்தல், குளிர்ந்த ஜலஸ்நானம், மேற்படி ஜலத்தை அதிகமாய்ப்பானஞ்செய்தல் ஆகியவைகளை நீக்கவேண்டியது.

மறதி உசிதம்.

வாலுளுவை தைலம் குன்றிமணியெடை-ச. சுத்திசெய்த ரசம் குன்றிமணியெடை ச.மேற்படி தைலத்தை ஒரு வெற்றிலையில் வைத்து மேற்படி ரசத்தை அதில்விட்டுச் சற்றுநேரம்விரலால் மர்த்தித்துக்கொண்டிருக்க ரசம் திரண்டுபோகும். அந்தச்சமயத்தில் ஓலையினால் ரசத்தை வழித்து நீக்கிவிட்டு அந்த வெற்றிலையைத்தாம்பூலத்துடன் சேர்த்து மென்றுதின்னவேண்டும். இவ்விதம் தினம் இரண்டு தடவைகள் செய்துவரின் மறதிரோகந்தீரும்.

மேற்படி வேறு.

சேராங்கொட்டைத் துண்டு குன்றிமணியெடை-உ. இதனைத்தாம்பூலத்துடன் சேர்த்து மென்று தின்னவேண்டும். இவ்விதம் தினம் இரண்டுமூன்று தடவைகள் தின்னவேண்டும். மறுநாள் அரைக்குன்றிமணியெடை அதிகப்படுத்தித் தின்னவேண்டும். இவ்விதம் கிர

மேனுவாய் அதிகப்படுத்தி ஐந்துவிராகனெடைவரை யில் தாம்பூலத்துடன் மென்றுதின்னப்பழகிக்கொள்ள வேண்டும். பிறகு இந்த ஐந்து விராகனெடைதினம் ஒவ்வொருவேளை தாம்பூலத்துடன் மென்றுதின்ன வேண்டும். இவ்விதம் சில நாட்கள்செய்துவரின் மறதி ரோகம் தீர்ந்துபோகும். துர்ப்பலப்பட்டமூளை பலப்ப ட்டுப்போம். தேகத்திலுள்ள மேகரோகம் தீர்ந்து இர த்தசுத்தியுண்டாகி தேகம்பலப்பட்டு நல்ல பலமுண்டா கும்.

## குறிப்பு.

இது ஒருகற்பம். இதுபார்ப்பதற்கு மலைப்பைத்த ரும். விருப்பமிருந்தால், வெகுசீக்கிரம் பழகிக்கொள் ளலாம். இதனால் பலவகை நன்மையுண்டாகும். சே ராங்கொட்டையை மூக்குவெட்டிபாலில் வேகவைத்து சுத்திசெய்துகொள்வது உத்தமம்.

## தலைகிறுகிறுப்பு தலைசுழற்றல் ஆகியவைகளின் சிகிச்சை.

### ஊறற்கஷாயம்.

கொத்துமல்லி விதை, மஞ்சட்கடுக்காய்த்தோல், இவை வகை-க.க்கு விராகனெடை-உவ. இவ்விரண் டையும் நையச்சிதைத்து 'ஒருஆழாக்கு ஜலத்திற்போ ட்டு, ஆறுமணிநேரம் ஊரவைத்து, நன்றாய்ப்பிசை ந்து வடிகட்டித்திப்பிநீக்கி பானஞ்செய்யவேண்டும். இ வ்விதம் தினம் இரண்டுதடவையாக ஒருவாரம் செய் யின் தலை கிறுகிறுப்பு, தலைசுழற்றல், மயக்கம் ஆகிய வைகள் தீரும்.

மேற்படி வேறு.

கசகசா விராகனெடை-உ. கொத்துமல்லி விதை விராகனெடை-உ. இவ்விரண்டையும் தண்ணீர்வார்த்து வெண்ணெய்போலரைத்து, முக்கால் ஆழாக்குஜலத்திற்கரைத்து வடிகட்டித் திப்பிநீக்கி, பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் காலை, மாலை இரண்டுவேளையுமாக ஒருவாரம், அல்லது பத்துநாட்கள் செய்யின் தலை கிறுகிறுப்பு, மயக்கம் ஆகியவைகள் தீரும்.

ஷை சூரணம்.

கசகசா, கொத்துமல்லி விதை, பருத்திக்கொட்டை விதைப்பருப்பு, இவை வகை-க-க்குப்பலம்.க. சீனிசர்க்கரை பலம்-சு. முன் மூன்றையும் இடித்துச் சூரணித்து, வஸ்திரகாயஞ்செய்து சர்க்கரையும் கலந்து வைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை ரு-முதல் எ-வரையில். இதனைத் தண்ணீருடன் அல்லது பன்னீருடன் உட்கொள்ளவேண்டும்.

உபயோகம்:—தலை கிறுகிறுப்பு, தலைசுழற்றல், மயக்கம், ஆகியவைகள் தீரும்.

அதிநித்திரா ரோகச்சிகிச்சை.

கபத்தைப் பக்குவப்படுத்தி கபபேதியையுபயோகித்து, அதிகரித்திருக்கும், கபநீரை வெளிப்படுத்திச் சுத்திசெய்யவேண்டும்.

இதன் பிறகு, மிளகை, குதிரையின் வாய்க்கோழையில், இழைத்து கண்ணில் தீட்டிவரவேண்டும்.

இவ்விதம் தினம் காலை, மாலையிரண்டுவேளையும் கண்ணில் உபபோகித்து வந்தால், அதி நித்திராரோகந் தீரும்.

சிமைக்காடியை ஒரு சிறிய சீஷாவில் விட்டுக் கொண்டு, அடிக்கடி முகர்ந்துகொண்டிருக்கவேண்டும். இவ்விதம் சிலநாட்கள் தொடர்ச்சியாய்ச் செய்துவரின், அதி நித்திராரோகந்தீர்ந்துபோம்.

முன் தலைநோப் சிகிச்சையில் சொல்லப்பட்டிருக்கும், திரிபலாதி லேகியங்களை யுபயோகிப்பதனாலும், அதி நித்திராரோகந்தீரும்.

குறிப்பு.

இந்தரோகத்தில் பிரதானமாக, சீதளபதார்த்தங்களினின்றும், பத்தியமாயிருக்கவேண்டும். எந்த விதத்திலும், இவ்வகைப்பதார்த்தங்களை யுபயோகித்தல் கூடாது.

## நித்திராபங்க ரோக சிச்கிசை.

### வித்தாதித்தைலம்.

காஹூவிதை, சுரைவிதைப்பருப்பு, முலாம்பழ விதைப்பருப்பு, கசகசா, எள்ளு, இவை வவக-க-க்குச் சமனெடை.

இவற்றைகலந்து வாதுமை எண்ணெயெடுப்பதுபோல், இவற்றிலும், எண்ணெய் எடுத்துக்கொள்ள வேண்டும். இதில் கொஞ்சமெடுத்து, காலை, மாலை,இரண்டுவேளையும், சிரசில்தேய்த்து வரவேண்டும். இவ்விதம் சில நாட்கள் செய்துவரின், நித்திராபங்கரோகம், நித்திராபங்கம், வறட்சி சம்பந்தமான தலைநோய், வறட்சி சம்பந்தமான மூர்ச்சைரோகம் ஆகியவைதீரும்.

## காஹூ தைலம்.

காஹூ கீரைச்சாறு பலம்-௧௦. எள்ளெண்ணெய் பலம்-௫. இவ்விரண்டையும் கலந்து, அடுப்பேற்றிச் சிறு தீபாயெரித்து, நீர் சுண்டினபின், தைலத்தை வடிகட்டி, புட்டியில் பத்திரப்படுத்தவும்.

இதிற்கொஞ்சமெடுத்து, சிரசில் தடவிவரவேண்டும். தினம் இரண்டு, மூன்றுதடவைகள் உபயோகிக்கலாம். சித்திராபங்கரோகம், மூளைவறட்சி, ஆகியவை தீரும்.

## பச்சையிலேத்திலா.

பச்சைக் கஞ்சா, விராகனெடை-௨. வெள்ளாட்டுப்பால் தேவையான அளவு.

மேற்படி இலையை மேற்படிபால் விட்டு, வெண்ணெய்போலரைத்து, இரண்டு உள்ளங்காலிலும் பற்றிடவேண்டும். இவ்விதம் இராக்காலங்களில் செய்துவர, சித்திராபங்கரோகந்தீரும்.

## மேற்படி வேறு.

பச்சைக் கஞ்சாவிலே, அல்லது உலர்ந்த கஞ்சாவிலே, பலம் இரண்டரை, வெள்ளாட்டுப்பால் படி-௨.

மேற்படி இலையை அம்மியில் வைத்து, மேற்படி பாலேச் சிறுகச் சிறுகவார்த்து, வெண்ணெய்போலரைத்து, காலணு அகலமுள்ள சிறு பில்லைகளாகச் செய்து பத்துப்பலம் பசுவின் நெய்யிற்போட்டு, நன்றாய்க்கனிந்துபோகிறவரையில்அடுப்பில் வைத்துக் காய்ச்சிக் கீழிறக்கி இளஞ்சூட்டுடன் வடிகட்டி புட்டியி

ல் பத்திரப்படுத்தவும். அவசியமானபோது உள்ளங் கால்களில் தேய்த்துவரவேண்டியது. இவ்விதம் இராக் காலங்களில் செய்துவந்தால் நித்திராபங்கரோகந்தீரு ம். இதற்குக்கஞ்சா நெய்யென்று பெயர்.

தனப்பால் நசியம்.

ஸ்தனப்பாலை, இரண்டு நாசித்துவாரங்களிலும் ஐந்தைந்து துளிகள் சொட்டவேண்டும். இவ்விதம் ப கலிலும், இரவிலும் செய்துவந்தால், நித்திராபங்கரோ கந்தீரும். மூளைவறட்சி நீங்கி, மூளை சாந்தப்படும்.

மேற்படி வேறு.

காஹூ கீரைச்சாறு பங்கு-க, ஸ்தனப்பால் பங் கு-க. இரண்டையும் மிஸ்ரமித்து மெல்லிய துணியி வடிகட்டி இரண்டு நாசித்துவாரங்களிலும், நன்னான் கு துளிகள் சொட்டிவரவேண்டும். இவ்விதம் இராப் பகல் செய்துவர, நித்திராபங்க ரோகந்தீரும். மூளை வறட்சிதீரும். அசாதாரண உறக்கந்தீர்ந்து, நல்ல நித் திரையுண்டாகும்.

மல்லிச் சூரணம்.

வறுத்தகொத்துமல்லி விதை, காஹூ விதைப்ப ருப்பு, வறுத்த கசகசா, வகை-க-க்கு விராகனெடை- ரு, சீனிசர்க்கரை பலம் இரண்டரை, மேற்கண்டவை களையெல்லாம் இடித்துச்சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து, மேற்படி சர்க்கரையுடன் சேர்த்து நன்றாய் மிஸ்ரமித்து புட்டியில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-உ-ரு.

உபயோகம்:— நித்திராபங்கரோகத்தை நிவர்த்தி செய்து, நல்ல நித்திரையையுண்டாக்கும். மூளையைப் பலப்படுத்தும்; பீனிசரோகத்தைப்போக்கும்,

## நித்திராபங்க தாராஸ்நானம்.

பணப்ஷா, போஸ்தக்காய்த்தோல், காஹூவிதை கசகசா, இவை வகை-க-க்குப்பலம் இரண்டரை.

எல்லாவற்றையும் நன்றாய்ச்சிதைத்து, அஞ்சுபடி ஜலத்திற்போட்டு மூன்றுபடியாகச்சுண்டவைத்து, வடிகட்டி, ரோயாளியின் தலையில், தாரைதாரையாக விடவேண்டும். இவ்விதம் தினம் ஒன்று அல்லது இரண்டு தடவைகள் செய்துவரின் நித்திராபங்கரோகந்தீர்ந்து, நல்ல நித்திரையுண்டாகும்.

## ஆக்கிராணம்.

கசகசா, காஹூவிதை, கொத்துமல்லிவிதை, சதகுப்பை இவை வகை-க-க்கு விராகனெடை-க.

இவையெல்லாவற்றையுஞ் சிதைத்து, மெல்லிய வஸ்திரத்தில், தளர்ச்சியாக முடிந்து கையில் வைத்துக்கொண்டு, அடிக்கடி இதன் வாசனையை ஆக்கிராணித்துக்கொண்டிருக்கவும். இவ்விதம் சிலநாட்கள் செய்துவரின் நித்திராபங்கரோகந்தீர்ந்து நல்ல நித்திரையுண்டாகும்.

## மேற்படி வியாதிக்காக உசிதங்கள்.

வெள்ளாட்டுப்பாலை, இரண்டு உள்ளங்கைகளிலும், இரண்டு உள்ளங்கால்களிலும், தேய்த்துவருவதினால், நித்திராபங்கரோகந்தீர்ந்து, நல்ல நித்திரையுண்டாகும்.

## மேற்படி வேறு.

கசகசா, எண்ணெயை, மேற்கண்டபடி உள்ளங்கைகளிலும், உள்ளங்கால்களிலும், தேய்த்துவருவதினால், மேற்கண்ட குணங்களுண்டாம்,

ஷை வேறு.

அபினியை முகருவதினாலும், இதனைத்தண்ணீரிலி ழைத்து, விலாக்களின்மீது பூசிவருவதனாலும், மேற்க ண்டகுணங்களுண்டாகும்.

ஷை வேறு.

சீமைச் சாமந்திப்பூவை முகருவதினால், மேற்கண் டகுணங்களுண்டாகும்.

ஷை வேறு.

சதகுப்பைக்கீரையை, தலையணையின் கீழ்வைத்து அதன்மீது படுத்துக்கொள்வதினால், மேற்படி குணங்க ளுண்டாகும்.

மேற்படி வேறு.

நோயாளியின் கைகளையும், கால்களையும், நன்றா யிறுக்கி, வருத்த முண்டாகும்படி கட்டிவிடவேண் டியது. விளக்குமுதலிய வெளிச்சங்களோடு பலர்கூ டி, வேடிக்கையாய்ப்பேசிக் கொண்டிருக்கவேண்டிய து. இப்படிச் சிறுகாலம் செய்துகொண்டிருந்து நோ யாளிகளைத்துபோகும் சமயத்தில், வெளிச்சங்களை யெ டுத்துவிட்டு சப்தம் முதலியவைகளில்லாமல் நிசப்த மாயிருக்கும்படி செய்வதால், நல்ல நித்திரையுண்டாக எதுவாகும்.

இன்னும், திரிகை அரைப்பநின்சப்தம், தண்ணீர் விழுகும் சப்தம், மரங்களின் இலை அசைவதாலுண்டா கும் சப்தம் ஆகியவை, நித்திரையை யுண்டாக்க மூல மாம்.

## பக்ஷவாதம், முகவாதம் ஆகியவைகளின் சிகிச்சை.

### பொதுச் சிகிச்சை.

பக்ஷவாதம், அல்லது முகவாதம் கண்டவுடனே மருந்தை யுபயோகிக்கலாகாது. ஆனால், ஆரம்பத்தில் இரண்டுமூன்றுநாள் இலங்கணம்வைத்து, பிறகு தண்ணீருக்குப்பதிலாக, பின்காணும் தேன் ஷர்பத்தை பானஞ்செய்விக்கவேண்டும். வியாதிபலமாயிருந்தால், ஏழுநாள்வரையில் இலங்கணம் வைப்பது உத்தமம். புரூசுப்பு. கடலையை யூறவைத்த தண்ணீர், பக்ஷிகளின்சூப்பு, ஆகியவைகளை யுபயோகித்து வரவேண்டும். அதிகரித்திருக்கிற துர்நீரைப் பக்குவப்படுத்தாலாம்நாள் அவ்விதமுறைகளை யுபயோகித்து ஒன்பதாம்நாள் அல்லது பதினைரும்நாள் அயாரிஜெபீக்ரா யென்னும் தேவகிருபா மாத்திரையை யுபயோகிக்கவேண்டும்.

### தேன் ஷர்பத்து.

நல்லதேன் பங்கு-க. தண்ணீர்பங்கு-உ. இரண்டையும்கலந்து காய்ச்சி பாகுபதத்தில் இறக்கி ஆறின பின்பு, சீஷாவில்பத்திரப்படுத்தவும். இதனை தண்ணீருக்குப்பதிலாக மேற்படி வியாதியின் ஆரம்பத்தில் உபயோகிக்கவேண்டும்.

### பாகப்படுத்தும் கஷாயம்.

சோம்பு விராகனெடை-க௦. சோம்புவேர் விராகனெடை-ரு. சதகுப்பை, அஜ்மூதா ஓமம் இவைவகை-க-க்கு விராகனெடை-ரு. ஜடாமாஞ்சில் விராகனெடை-க. காசினிவேர் விராகனெடை ரு. குல்கந்து துலா-உ.

மேற்படி சரக்குகளைச்சிதைத்து, இரண்டு ஆழாக்கு ஜலத்தில்போட்டு, மூன்றிலொருபாகமாகச் சுண்டவை த்திறக்கி, மேற்படி குல்கந்தைக் கரைந்து, வடிகட்டி பானஞ்செய்யவும்.

இவ்விதம் காலையிலொருவேளை, அல்லது காலை, மாலை, இரண்டுவேளையும் உபயோகித்து வரவேண்டியது. இதனுல், அதிகரித்திருக்கிற துர்நீர்கள், பக்குவப்பட்டுப்போகும். பக்ஷவாதம், முகவாதம் ஆகியவை கண்டிருப்பவர்களுக்கு மாதத்தில் ஒருவாரம் அல்லது பத்துநாள் இதனையுபயோகித்துவந்தால், மேற்கண்ட ரோகம் நாளுக்குநாள் சாந்தப்பட்டுவரும். இதனையுபயோகித்து, பிறகு கீழ்க்காணும் மாத்திரை முதலாகியவைகளையும் கொடுக்கலாம்.

## அயாரிஜெஜைபகிராயென்னும் தேவ கிருபா மாத்திரை.

சுகட்ரைன் போளம் அல்லது கரியபோளம் விராகனெடை-சு. மஞ்சட்கடுக்காய்த்தோல் விராகனெடை -ரு. சுத்திசெய்த சிவதைவேர் விராகனெடை-ச. காக்கரட்டான்விதை விராகனெடை-உ. உலர்த்தின ஆற்றுத் தும்மட்டிக்காய்ச் சதை விராகனெடை-க. இந்துப்பு விராகனெடை-ரு.

செய்முறை:—மேற்படி சரக்குகளுள், பொடிக்க வேண்டியவைகளைத் தனித்தனிபொடித்து, மேற்கண்ட எடைப்படி நிறுத்தெடுத்துக் கொள்ளவேண்டும். பிறகு எல்லாவற்றையும் கல்வத்திலிட்டு ஒருமணிநேரமரைத்து, குளிர்ந்த ஜலத்தை அல்லதுகற்ருழைச்சாற்றைச்சி

றுகச்சிறுகவார்த்து, இரண்டு ஜாமநேரமரைத்து, இரண்டு குன்றிமணியெடை மாத்திரைகளாகச்செய்து நிழலிலுலர்த்தி, சீஷாவில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:— மாத்திரை-க-உ-இளவெந்நீருடன் சாப்பிடவேண்டும்.

உபயோகம்:—பக்ஷவாதம், முகவாதம், வாதரோகங்கள் ஆகியவைதீரும். மூளையிலுள்ள துர்நீர்களை நீக்குவதற்கு, இது அதிகம் உபயோகப்படும்.

குறிப்பு.

இதனை இரவில் படுக்கைக்குப்போகும்போது உட்கொண்டால், மிகவும் நன்மைபயக்கும்.

மேற்படி வேறு.

சுகட்ரைன்போளம், அல்லது கரிபபோளச்சூரணம் விராகனெடை-கசு, நிலக்கடம்பு, சடாமாஞ்சில், பெருலவங்கப்பட்டை, றூமிமஸ்தகி, இலவங்கப்பட்டை உஸ்துக்குத்தூஸ், சோம்பு, ரோஜாப்பூ, இவற்றின் தனித்தனிபிடித்து வஸ்திரகாயஞ்செய்த சூரணம் வகை -க-க்கு விராகனெடை-க.

இவை யெல்லாவற்றையும் ஒன்றாகக்கலந்து, கல்வத்திலிட்டுத் தண்ணீரைச் சிறுகச் சிறுகவார்த்து, இரண்டு ஜாமநேரமரைத்து, இரண்டு குன்றிமணியெடையுள்ள மாத்திரைகளாகச்செய்து, நிழலிலுலர்த்தி, சீசாவில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-க-உ-ங-வெந்நீருடன் உட்கொள்ளவும்.

உபயோகம்:— பேதிக்குக்கொடுத்து துர்நீர்களை நீக்கியபிறகு இந்தமாத்திரையை யுபயோகித்துவரவும். பக்ஷவாதம், முகவாதம், இன்னும் பலவகை வாதரோகங்கள் தீரும்.

நாபி மாத்திரை.

அக்கிராகாரம், மிளகு, அரிசித்திப்பிலி, இவற்றைத் தனித்தனியிடித்த சூரணம்வகை-க-க்குவிராகனெடை-க,௦. மேல்தோல்சீவின சுக்குச்சூரணம், சுத்திசெய்த கருநாபிச்சூரணம், இவை வகை-க-க்கு விராகனெடை-ரு. பனைவெல்லம் விராகனெடை-கஉ. பசுவின் நெய் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி சரக்குகளையெல்லாம் ஒன்றாகக்கலந்து, கல்வத்திலிட்டு, அரைமணிநேரமரைத்துப்பிறகு வெல்லத்தைச்சேர்த்து, ஒருஜாமநேரமரைத்துப் பிறகு நெய்யைக்கொஞ்சம் சேர்த்து, ஒருமணிநேரமரைத்து, ஒரு குன்றிமணியெடையுள்ள மாத்திரைகளாகச்செய்து, சீஷாவில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-க-உ-ரு. நெய்யில் அநுபானித்துட்கொள்ளவேண்டும்.

உபயோகம்:—ஆரம்பத்தில் பேதிக்குக்கொடுத்து, துர்நீர்களை நீக்கி; சுத்திசெய்து, மேற்படி மாத்திரைகளை யுபயோகித்துவந்தால், பக்ஷவாதம், முகவாதம், நரம்புத்தளர்ச்சி, ஆகியவைதீரும்.

கெந்தி மாத்திரை

சுத்திசெய்த நெல்லிக்காய்க் கெந்தகம், அல்லது பருப்புக்கெந்தகம், சுத்திசெய்த இரசம், சுத்திசெய்த

தாளகம், சுத்திசெய்த கருநாபி, இவற்றின் தனித்தனி சூரணம், வகை-க-க்கு விராகனெடை-௨௰, எலுமிச்சம்பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—முன்னர் கெந்தகத்தையும், இரசத்தையும்சேர்த்து நன்றாய்க்கருத்தபின்புமற்றச்சூரணங்களையும்சேர்த்து ஒருமணிநேரமரைத்து, எல்லாம் செம்மையாகக்கலந்தபின்புஎலுமிச்சம்பழச்சாற்றைச் சிறுகச்சிறுகவார்த்து, இரண்டுஜாமநேரமரைத்து ஒருகுன்றிமணிபெடையுள்ள மாத்திரைகளாகச்செய்து, நிழலிலுலர்த்தி, புட்டியில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-க.௨.௩. நெய்யுடன் உட்கொள்ளவும்.

உபயோகம்:—நடுக்கல், கபசம்பந்தமான எல்லா வியாதிகள், இடுப்புவலி, புட்டத்துவலி, பக்ஷவாதம், முகவாதம் ஆகியவைகள் தீரும்.

## இந்துமாத்திரை.

வாலுளுவை அரிசி, உலர்த்தின ஓரிலைத்தாமரை, அரிசித்திப்பிலி, இவற்றின் தனித்தனிசூரணம் வகை க-க்கு விராகனெடை-௰. நிலப்பனைக்கிழங்குச்சூரணம் விராகனெடை-கடு. மேல்தோல் சீவின சுக்குச்சூரணம் விராகனெடை-கரு. சுத்திசெய்த நேர்வாளப்பருப்பு விராகனெடை-ச.

செய்முறை:— நேர்வாளத்தைக் கல்வத்திலிட்டுப் பொடித்து, தண்ணீரைச் சிறுகச் சிறுகவார்த்து, வெண்ணெய்போலரைத்துப் பின்புமற்ற சூரணங்களையும், ஒன்றாகக்கலந்து, அதில்தூவி, தண்ணீரைச் சிறு॰ இ

சிறுகவார்த்து, இரண்டு ஜாமநேரமரைத்து, அரைக்கு ன்றிமணியெடைப் பிராமாணமுள்ள மாத்திரைகளாகச் செய்து, நிழலிலுலர்த்தி, புட்டியில்பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-க-உ-௩. நெய்யுடன்உட் கொள்ளவேண்டும்.

உபயோகம்:—முகவாதம், முதலியவாதரோகங் கள்தீரும்.

சுக்குமாத்திரை.

மேல்தோல் சீவின சுக்குச்சூரணம், வசம்புச்சூ ரணம், இவை வகை-க·க்குப்பலம்-க, தேன் செல்லத் தக்க அளவு.

மேற்படி இரண்டு சூரணங்களையும் ஒன்றாகக் கல ந்து கால்மணிநேரம் அரைத்துப்பிறகு தேனைச்சிறுகச் சிறுகவார்த்து, மெழுகுபதமாகஅரைத்து, ஒரு விராக னெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து கொள்ள வும்.

பிரமாணம்:—வேளையொன்றுக்கு மாத்திரை-க. காலைமாலை இரண்டுவேளையும் உபயோகிக்கவும்.

இதனையுபயோகித்து வரும்போது, முன்சொல்ல ப்பட்டிருக்கும் தேன் ஷர்பத்தை யுபயோகித்து வர வேண்டியது.

குறிப்பு.

மேற்சொல்லப் பட்டிருக்கும் வசம்பிற்குப்பதிலா க, வசம்பைசுட்டெரித்துச் சாம்பலாக்கிச் சேர்த்துக் கொள்வது உத்தமம்.

## புஷ்டி மாத்திரை.

பதினைந்து எட்டிக்கொட்டைகளைத் தண்ணீரில் ஊறவைக்கவேண்டும். மூன்று நாளைக்கொருதடவை அந்தத் தண்ணீரை யிறுத்துவிட்டு, மறுபடியும் புதிய தண்ணீரைவார்த்து ஊறவைக்கவேண்டும். இவ்விதம் மும்மூன்று நாளைக்கொருதடவை தண்ணீரைமாற்றிப் புதியதண்ணீர்விடவேண்டும். இவ்விதம் ஐந்து தடவைகள் செய்து மேல்தோலை நீக்கிவிட்டு, வெய்யிலிலுலர்த்திச் சட்டியில்வைத்து வறுத்து வருகையில் புகையடங்கின தருணத்தில் எடுத்துப் பொடித்துவஸ்திரகாயஞ்செய்து, இதற்குச்சமனெடை மிளகுச்சூரணத்தைச்சேர்த்துத்தண்ணீர்வார்த்துஇரண்டுஜாமநேரமரைத்து, மிளகுப்பிரமாணம் மாத்திரைகள்செய்து, நிழலிலுலர்த்திச் சீஷாவில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-க. காலையில் மாத்திரம் ஒருவேளை யுட்கொள்ளவேண்டும்.

உபயோகம்:—பக்ஷவாதம், முகவாதம், மூளைசம்பந்தமான வியாதிகள், இடுப்புவலி, ஆகியவைகள்தீரும். குளிர்ச்சி சம்பந்தமான வியாதிகளும் தீர்ந்துபோம்.

### மேற்படி வேறு.

(a) மேற்கண்டபடி சுத்திசெய்த எட்டிக்கொட்டைச் சூரணம், கஞ்சா விதைச்சூரணம், உலர்த்தின தும்மட்பூண்டுச்சூரணம் இவை வகை-க-க்கு விராகனெடை-அ. பசுவின்பால் பலம்-சு. தண்ணீர்பலம்-ரு.

(b) சுட்டெரித்த வசம்புச்சாம்பல், அரிசித்திப்பிலிச்சூரணம், மேல்தோல்சீவின சுக்குச்சூரணம், சோம்புச்சூரணம், வகை-க-க்கு விராகனெடை-கஉ.

(c) பிரமதண்டிச்சாறு, அல்லது அதன்கஷாயம் செல்லத்தக்கஅளவு.

செய்முறை:—பாலையும், தண்ணீரையும் கலந்து, (a) யிலுள்ள சூரணங்களை அதிற்போட்டுக் காய்ச்சி, பால் சுண்டினபதத்தில் எடுத்துக்கல்வத்திலிட்டு, அரைமணிநேரமரைத்து (b) பிலுள்ள சூரணங்களையும் ஒன்ருகக்கலந்து அதிற்சேர்த்து (c) பிலுள்ள சாற்றை அல்லது கஷாயத்தைச் சிறுகச்சிறுகவார்த்து இரண்டு ஜாமநேரமரைத்து மிளகுப்பிரமாணம்மாத்திரைகள்செய்து நிழலிலுலர்த்திச் சீஷாவில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-க-உ, காலைமாலை இரண்டுவேளையும் உபயோகிக்கவும்.

உபயோகம்:—பக்ஷவாதம், முகவாதம், கபசம்பந்தமான ரோகங்கள், நரம்புத்தளர்ச்சி, ஆகியவைதீரும்.

வசம்பு மாஜூன்.

வசம்புச்சூரணம் பலம்-உ, மேற்ருேல்சீவின சுக்குச்சூரணம், கருஞ்சீரகச்சூரணம், இவைவகைக்கு விராகனெடை-எ, தேன் பலம்-ககவ.

செய்முறை:—மேற்படி சூரணங்களை யெல்லாம் ஒன்ருகக்கலந்து கொள்ளவேண்டும். தேனைக்காய்ச்சி நுரையைநீக்கி மேற்படி சூரணங்களைச் சிறுகத்தூவி நன்ருகக்கிளறிக் கீழிறக்கி ஆறவைத்துப் பீங்கான்பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-கவ-உ ௦.

அனுபானம்:—இதனை உபயோகித்துவரும்போது முன்சொல்லப்பட்டிருக்கும் தேன் ஷர்பத்தை உபயோகித்துவரவேண்டும்.

உபயோகம்:—பக்ஷவாதம், முகவாதம், நரம்புத் தளர்ச்சி ஆகியவைகள் தீரும்.

குறிப்பு.

வசம்பைச் சுட்டெரித்துச் சாம்பலாக்கி மேற்கண்டகிறையை எடுத்துக்கொள்வது உத்தமம். சுட்டெரிக்காமல் சேர்த்துக்கொண்டால் சிலதேகிகளுக்கு வாந்தியாகும்.

மேற்படி (வேறு.)

வசம்புச்சூரணம் விராகனெடை-௧0, மிளகுச்சூரணம், பொதினாச்சூரணம், கருஞ்சீரகச்சூரணம்காட்டுக் கருஞ்சீரகச்சூரணம் இவை வகை-௧-க்கு விராகனெடை-௩. தேன் பலம்-௬.

செய்முறை:—எல்லாச் சூரணங்களையும் ஒன்றாகக்கலந்து கொள்ளவேண்டும். பின்பு தேனைக்காய்ச்சி நுரைநீக்கி, அதில் மேற்படி சூரணக்கலவையைச் சிறுகச்சிறுகத் தூவி,நன்றாகக் கிண்டிக்கீழிறக்கி ஆறவிட்டுப்பீங்கான்பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-௧௨-முதல் ௨௭.

அநுபானம்:—இதனை உபயோகிக்கும்போது முன்சொல்லியிருக்கிற தேன் ஷர்பத்தை உபயோகித்து வரவேண்டியது.

உபயோகம்:—முகவாதம், பக்ஷவாதம், கபசம்பந்தமான எல்லாரோகங்கள் ஆகியவைதீரும்.

பூண்டு மாஜூன்.

ஓரிதழ்ப்பூண்டு பலம்-௩, (இதனைத்தோலுரித்து நிறுத்துக் கொள்ளவேண்டும்.) பசுவின்பால் பலம்-௬

சீமைச்சாமர்திப்பூச்சூரணம், மேற்றேல்ரவின சுக்குச்சூரணம், மிளகுச்சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம், சூரத்துக்கடுக்காய்த்தோற் சூரணம், அக்கிராகாரச்சூரணம், வால்மிளகுச் சூரணம், பெருலவங்கப்பட்டைச் சூரணம், சன்னராஷ்டச் சூரணம், இவைவகை-க-க்கு விராகனெடை-டு. தேன் பலம்-உடு.

செய்முறை:—பூண்டைப்பாலில் சேர்த்து வேகவைத்து நன்ருகக் குழைந்தபதத்தில் இறக்கி மெல்லிய வஸ்திரத்தில் வடிகட்டி, தேனையுங்காய்ச்சி நுரைநீக்கி அதனுடன்சேர்த்துப் பாகுசெய்து பாகுபதத்தில் சூரணங்களை ஒன்ருகக்கலந்து சிறுகச்சிறுகத் தூவிக கிண்டி இறக்கி ஆறவிட்டுப் பீங்கான்பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-டு-முதல்-௧0-வரையில்.

உபயோகம்:—பக்ஷவாதம், முகவாதம், நரம்புத்தளர்ச்சி ஆகியவைதீரும்.

குறிப்பு.

பூண்டைப்பாலில் வேகவைத்துக் குழைந்தபதத்தில் மத்தினுல்கடைந்து வடிகட்டாமல் தேனைக்காய்ச்சிச்சேர்த்து மேற்கண்டபடிசெய்துகொள்ளவேண்டும்; வடிகட்டவேண்டுமென்னும் அவசியமிருந்தால் திப்பியில்காய்ச்சின பாலைவிட்டுக்கடைந்து வடிகட்டிக்கொள்ளவேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கி இரண்டுமூன்று தடவைகள்செய்து திப்பியில்லாமல் வடிகட்டிக்கொள்ளவேண்டும்.

## இன்கர்தியா மாஊன்.

கார்போகரிசிச்சூரணம், மேற்ருேல்சீவின சுக்குச்சூரணம், இலவங்கப்பத்திரிச் சூரணம், சடாமாஞ்சில் சூரணம், கோரைக்கிழங்குச்சூரணம், மிளகுச்சூரணம், அக்கிராகாரச்சூரணம், காட்டுச்சீரகச் சூரணம், கோஷ்டச்சூரணம், சேராங்கொட்டைக் குழித்தைலம் இவைவகை-க-க்கு விராகனெடை-உ, சுத்திசெய்தகஞ்சாச்சூரணம், அரசம்பட்டைச்சாம்பல் இவைவகை-க-க்கு விராகனெடை-க, தேன்பலம்-எ.

செய்முறை:— மேற்கண்டவைகளை யெல்லாம் ஒன்ருகக் கலந்துகொள்க, தேனைக்காய்ச்சி நுரைநீக்கி மேற்படி கலவையைச் சிறுகத்தூவி நன்ருகக்கிளறிக் கிண்டிக்கீழிறக்கி ஆறினவுடன் பீங்கான்பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-கஉ முதல் உஉ-வரை.

உபயோகம்:—குளிர்ச்சி சம்பந்தமான பக்ஷவாதம், குளிர்ச்சிசம்பந்தமான முகவாதம்; குளிர்ச்சி சம்பந்தமான நரம்புத்தளர்ச்சி முதலிய குளிர்ச்சி சம்பந்தமான எல்லாரோகங்களும் தீரும்.

## நவசாதி ஷர்பத்.

மேற்ருேல் சீவினசுக்கு, ஜடாமாஞ்சில், சிற்றரத்தை, இவை வகைக்கு விராகனெடை-ரு, மிளகு, அரிசித்திப்பிலி, இவை வகைக்கு விராகனெடை-கஉ, தேன் பலம்-கஉ, தண்ணீர் படி-உ.

செய்முறை:—மேற்படி சரக்குகளையெல்லாம் நையச்சிதைத்து ஒரு சிறுபையில் போட்டுத்தளர முடி-

ந்து மேற்படி தேனையும் தண்ணீரையும் கலந்து அதிற் போட்டு அடுப்பேற்றிச் சிறுதீயாக எரித்துவரவேண் டும். மேற்படி பையை அடிக்கடி அகப்பையினால் நசுக் கிக்கொண்டும் வரவேண்டியது. ஒருபடி ஜலம் சுண்டி ன தருணத்தில் மேற்படி பையை எடுத்துப்பிழிந்துக் கொள்ளவேண்டும். அந்தப்பையில் திப்பியைத் தவிர க்கொஞ்சமும் பசையில்லாமலிருக்கவேண்டும். பிறகு அதைக்காய்ச்சி தந்துபதத்தில் இறக்கி ஆறினபின் பு புட்டியில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-ரு.

உடபோகம்:—பக்ஷவாதம், முகவாதம் ஆகியவி யாதியுள்ளவர்களின் தலை மூளையிலுள்ள அசுத்தமாசு களை நீக்கி அதைச்சுத்திசெய்ய இந்தஷர்பத்து மிகவும் சிரேஷ்டமானது.

## வசம்புச்சட்னி.

சுட்டெரித்த வசம்புச்சாம்பல், அக்கராகாரச்சூர ணம், மருதம்பட்டைச்சூரணம், சன்னராஷ்டச்சூரண ம், மிளகுச்சூரணம், அரிசித்திப்பிலிச்சூரணம், மேற் றோல் சீவின சுக்குச்சூரணம், கிச்சிலிக்கிழங்குச்சூர ணம், கண்டத்திப்பிலிச்சூரணம் இவை வகை-க-க்கு விராகனெடை-க. தேன் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி சூரணங்களையெல்லாம் ஒன்றாகக்கலந்து செல்லத்தக்க தேனைவிட்டுக் குழம்பு பதமாகக்குழைத்து வைத்துக்கொள்ளவும்; அவசிய மானபோது விராகனெடை மூன்று அல்லது ஐந்து தேகசுபாவத்துக்குத் தகுந்தபடி சாப்பாட்டுடன் உப

யோகிக்கவும். மற்ற ரோகங்களிலும் உபயோகிக்க லாம்.

உபயோகம்:—பக்ஷவாதம்; முகவாதம் முதலிய கபசம்பந்தமான ரோகங்களுக்கு உபயோகிக்கலாம்.

## வாயுசங்காரச்சூரணம்.

அஜமூதா ஓமச்சூரணம், வாய்விளங்கச்சூரணம், லாகூருப்புத்தூள், தேவதாரிச்சூரணம், கொடிவேலி வேர்ப்பட்டைச்சூரணம், கண்டத்திப்பிலிச் சூரணம், சோம்புச்சூரணம், அரிசித்திப்பிலிச்சூரணம், மிளகுச சூரணம், இவை வகை-க-க்குப்பலம் இரண்டரை, மஞ் சட்கடுக்காய்த் தோற்சூரணம் பலம்-கஉ,ற, மேற்றோல் சீவின மாச்சுக்குச்சூரணம் பலம்-ரு.

செய்முறை:— மேற்கண்ட எல்லாச்சரக்குகளை யும் ஒன்ருகக்கலந்து கல்வத்தில் அல்லது அம்மியில் வைத்து ஒன்ருகமிஸ்ரமாகும்படி நன்ருக அரைத்துப் புட்டியில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-உ-ச.

அனுபானம்:—சூரணத்தின் சமனெடை சீனிசர் க்கரையைச்சேர்த்து உட்கொள்ளவேண்டும். தேன், நெய், முதலியவைகளிலும் அனுபானித்து உட்கொள் ளலாம்.

உபயோகம்:—பக்ஷவாதம், வாயு சம்பந்தமான ரோகங்கள் முதலியரோகங்கள் தீரும்.

## அலரித்தைலம்.

உலர்ந்த வெள்ளலரிவேர்த்தோல், வெண் குன்றிம ணிப்பருப்பு, உலர்ந்தகருஊமத்தனிலை அல்லது ஊதா ஊமத்தனிலை. இவை வகை-ந-க்குப் பலம்-க, நல்லெ ண்ணெய் பலம்-சு.

செய்முறை:--மேற்கண்டவைகளை இடித்து வஸ்திரகாயஞ்செய்து அம்மியில் வைத்து ஜலம்வார்த்து வெண்ணெய்போலரைத்துக் காலணு அகலமுள்ள சிறு பில்லைகளாகச்செய்து மேற்படி எண்ணெயிற்போட்டு அடுப்பேற்றிச் சிறுதீபாயெரித்துப் பில்லையெல்லாம் கருகினபின்பு கீழிறக்கி ஆறினபின் கல்வத்திலிட்டுப் பில்லைகளை வெண்ணெய்போலரைத்து முன் எண்ணெயிற்கலக்கிப் புட்டியில் வைத்துக்கொள்ள வேண்டும். இந்த மருந்துகள் கீழ்தங்கிப்போகும். மேலாக எண்ணெய் இறுத்து வியாதியுள்ள அவயவங்களில் தேய்த்துவருவதினல் தளர்ந்துபோன அவயவங்கள், தளர்ந்துபோன நரம்புகள் ஆகியவைகள் இறுகிப்பலப்பட்டு பக்ஷவாதம், முகவாதம் ஆகியவைகளும் குணமாம். பிரதான உறுப்புகளின் நரம்புகள் தளர்ந்துண்டான தாதுநஷ்டம், ஆண்மை சக்திக்குறைவு ஆகியவைகள் தீர்ந்து போகசக்தியுண்டாகும்.

## சிறுகோஷ்டத் தைலம்.

கோஷ்டச்சூரணம், காட்டுச்சீரகச்சூரணம், அல்லது கருஞ்சீரகச்சூரணம் வகைக்குப்பலம்-க, நல்லெண்ணெய் பலம்-௬.

செய்முறை:--மேற்கண்ட இரண்டு சூரணங்களையும் அம்மியில்வைத்து ஜலம் வார்த்தரைத்து மேற்சொல்லியிருக்கிறபடி சித்தப்படுத்திக்கொள்ளவும்.

உபயோகம்:--மேற்படி தைலத்தை வியாதியுள்ள அவயவங்களின்மேல் பூசிவரபக்ஷவாதம், முகவாதம், நரம்புத்தளர்ச்சி ஆகியவைகள் தீரும்.

## பச்சிலைத்தைலம்.

ஆமணக்கிலைச்சாறு, ஊமத்தையிலைச்சாறு, எருக்கிலைச்சாறு, சகதேவியென்னும் சீதாசெங்கழுநீர்ச்சாறு, முருக்கிலைச்சாறு, அமுக்குரா இலைச்சாறு, வெண்ணொச்சியிலைச்சாறு, இவை வகை-க-க்குப் படி-௫, நல்லெண்ணெய் படி-௫௰.

செய்முறை:--இவை யெல்லாவற்றையும் எண்ணெயுடன் ஒன்றாகக்கலந்தெரித்து அரைவாசிச்சாறு சுண்டினபதத்தில் சுக்குச்சூரணம், கோஷ்டச்சூரணம் இவை வகை-க-க்குப்பலம் - க. இவ்விரண்டையும் மேற்படி எண்ணெயில் தூவி மெழுகுபதத்தில் இறக்கி வடிகட்டாமல் பீங்கான் பாத்திரத்தில் பத்திரப்படுத்தவும்.

உபயோகம்:—இதனை விபாதியுள்ள அவயவத்தில் பூசிவருவதினால் தளர்ந்திருக்கிற நரம்புகள் பலப்பட்டு முகவாதம், பக்ஷவாதம் ஆகியவைகள் தீரும்.

## மகா கோஷ்டத்தைலம்.

கோஷ்டச்சூரணம் விராகனெடை-உ, ஜடாமாஞ்சிச்சூரணம், உஷ்ணச்சூரணம், இலவங்கப்பத்திரிச்சூரணம், அக்கிராகாரச் சூரணம், மேற்றோல் சீவின சுக்குச்சூரணம் இவை வகைக்கு விராகனெடை-க, நல்லெண்ணெய் பலம்-ரு.

செய்முறை:--மேற்படி சூரணங்களையெல்லாம் ஒன்றாகக்கலந்து அம்மியில் வைத்துத்தண்ணீர் வார்த்து அரைத்துச் சிறுபில்லைகளாகச்செய்து மேற்படி எண்ணெயில்விட்டு நீர் சுண்டினபதத்தில் இறக்கி வடிகட்டிப் புட்டியில் பத்திரப்படுத்தவும்.

உபயோகம்:—இந்தத்தைலத்தை மேற்பூசிவருவதினால் இது பட்டைநரம்புகளைப்பலப்படுத்தி, நரம்புத்தளர்ச்சியை நீக்கி அதைப்பலப்படுத்தும்; வாயுகளைக் கண்டிக்கும்; பக்ஷவாதத்தைக்கண்டிக்கும்.

சாமந்தித் தைலம்.

உலர்ந்தசாமந்திப்பூ பலம்- ௩0, நல்லெண்ணெய் பலம்- உ0.

செய்முறை:—மேற்படிபூவை மூன்றுபாகமாகச் செய்து ஒருபாத்திரத்தில் மூன்றுபடிஜலத்தை விட்டுக்காய்ச்சி ஒருபடி சுண்டினவுடன் இறக்கி இளஞ்சூடாயிருக்கும்போது நன்றாகப் பிசைந்து பிழிந்து திப்பியை நீக்கிவிடவேண்டும். பிறகு அந்தக்கஷாயத்தில்மேற்படி மறுபங்குப்பூவைப்போட்டுக்காய்ச்சி ஒருபடி சுண்டினவுடன் இறக்கி இளஞ்சூட்டில் முன்போல் பிசைந்து திப்பியைநீக்கிவிடவேண்டும். அந்தக்கஷாயத்தில் மீதிப்பங்குப்பூவைப்போட்டுக்காய்ச்சி ஒருபடி தண்ணீர் சுண்டினவுடன் இறக்கி வடிகட்டித் திப்பிநீக்கின கஷாயத்துடன் எண்ணெயைக்கலந்து அடுப்பேற்றிச் சிறுதீயாகஎரித்து மெழுகுபதத்தில் இறக்கி வடிகட்டி சீஷாவில் வைத்துக்கொள்ளவும்.

உபயோகம்:—இதனை மேற்பூசிவருவதினால் குளிர்ச்சிசம்பந்தமான பக்ஷவாதம், முகவாதம், நரம்புத்தளர்ச்சி ஆகியவைகள் தீரும். இது பொதுவாய்க் குளிர்ச்சிசம்பந்தமான எல்லாவியாதிகளிலும் உபயோகப்படும்.

குறிப்பு.

உலராத பூவாயிருந்தால் மேற்கண்ட எடையில் இரண்டுபங்கு சேர்த்துக்கொள்ளவும்.

## சதாப்தைலம்.

பச்சை சதாப்பிலை பலம்-உ௭, நல்லெண்ணெப் பலம்-௬0, உலர்ந்த சதாப்பிலை பலம்-உ௯.

செய்முறை:—மேற்படி பச்சைசதாப்பிலையை மேற்படி எண்ணெயிற்போட்டுக்காய்ச்சி இலையெல்லாம் கருகினபதத்தில் இறக்கி வடிகட்டித் தனியேவைத்துக் கொள்ளவும். உலர்ந்த சதாப்பிலையை அரைப்படி ஜலத்திற்போட்டு ஒருஆழாக்காகச் சுண்டக்காய்ச்சி வடிகட்டித் திப்பிநீக்கின கஷாயத்துடன் முன் சித்தப்படுத்தின எண்ணெயைச் சேர்த்துக்காய்ச்சி மெழுகுபதத்தில் இறக்கி வடிகட்டிச் சீஷாவில் பத்திரப்படுத்தவும்.

உபயோகம்:—இதனை மேற்பூசி வருவதினாற் றளர்ந்துபோன பேஜிநரம்புகள், வெண்ணரம்புகள் ஆகியவைகள் பலப்பட்டு உறுதிபாகும்.

## சீமை சாமந்திப்பூத்தைலம்.

சீமை சாமந்திப்பூவிதழ் பலம்-அ, வெந்தயம் பலம்-ச, நல்லெண்ணெய் பலம்-உச.

செய்முறை:—மேற்படி இரண்டு சரக்கையும் நையச்சிதைத்து மேற்படி எண்ணெயிற்கலந்து ஒருபுட்டியில் விட்டுக்கல்காரக்கிட்டு நாற்பதுநாள்வரை வெயிலில் வைத்துப்பிறகு நோயுள்ள பாகங்களில் மேல்பூசிவரவேண்டும். இதனால் சீதள சம்பந்தமானரோகங்கள் மூளைசம்பந்தமான ரோகங்கள் ஆகியவை தீரும்.

## சிறு சதாப்தைலம்.

பச்சைசதாப்பிலை பலம்-ரு, நல்லெண்ணெய் பலம்-உ0,

செய்முறை:--மேற்படி சதாபிலேயை நையச்கிடித்து மேற்படி எண்ணெயுடன் கலந்து அதைப் புட்டியில்விட்டுக் கல்காரக்கிட்டு நாற்பதுநாள் வெயிலில்வைத்துப் பிறகு நோயுள்ள ஸ்தானத்தில் பூசிவர, சீதளசம்பந்தரோகங்கள், கபசம்பந்தரோகங்கள் ஆகியவை தீரும்.

## மணித்தைலம்.

சிவப்புக்குன்றிமணிப் பருப்பு விராகனெடை-ச, கோஷ்டச்சூரணம் விராகனெடை-க0, மருதம்பட்டைச்சூரணம், ஊமத்தம் விதைச்சூரணம் இவை வகைக்கு விராகனெடை-க0, நல்லெண்ணெய் பலம்-எ.

செய்முறை:--மேற்படி பருப்பை இடித்துத்தூள்செய்து அம்மியில் வைத்தரைத்து மற்றசூரணங்களையும் ஒன்றுகக்கலந்து அதனுடன் சேர்த்துத் தண்ணீரைச் சிறுகச் சிறுகவார்த்து வெண்ணெய்போலரைத்துச் சிறுபில்லைகளாகச்செய்து மேற்படி எண்ணெயிற்போட்டுப் பில்லைகள் கருகிப்போகிறவரையில் காய்ச்சிக்கீழிறக்கி ஆறினபின்பு மேற்படி பில்லைகளைக்கல்வத்திலிட்டு வெண்ணெய்போலரைத்து மேற்படி எண்ணெயிற்கலக்கிப் பீங்கான் பாத்திரத்தில் வைத்துக்கொள்ளவும். அவசியமானபோது வியாதியுள்ளவிடத்தில் இந்த எண்ணெயை மேற்பூச்சாகப் பூசிவர பக்ஷவாதம், கைகால் நடுக்கல் ஆகியவைதீரும்.

## இலவணதித்தைலம்.

கறியுப்பு, கருஞ்சீரகம், ஓமம், அக்கராகாரம், மருதோன்றிவிதை, இவை வகைக்குப்பலம்-க, நல்லெண்ணெய் பலம்-ரு.

செய்முறை:--மேற்படி சரக்குகளை நையச்சிதைத்து ஒருபடிஜலத்திற்போட்டு நான்கிலொரு பாகமாகச் சுண்டவைத்துக்காய்ச்சி வடிகட்டித் திப்பி நீக்கின கஷாயத்துடன் மேற்படி எண்ணெயைக்கலந்து காய்ச்சி மெழுகுபதத்திலிறக்கி இளஞ்சூட்டில் வடிகட்டித்திப்பி நீக்கி சீஷாவில் வைத்துக்கொள்ளவும்.

இதனை நோயுள்ளவிடத்தில் பூசிவருவதனால் வாயுசம்பந்தமான ரோகங்கள், கபசம்பந்தமான வியாதிகள் ஆகியவைகள் தீரும்.

## போகீத்தைலம்.

கார்போகரிசி பலம்–கஉ, ஓமம் பலம்–கவ, ஊமத்தனிலைச்சாறு பலம்–உ௦, நல்லெண்ணெப்பலம்–உ௦.

செய்முறை:--மேற்படி இரண்டு சரக்குகளையும் அம்மியில் வைத்துத் தண்ணீர்வார்த்து வெண்ணெய்போலரைத்துச் சிறுபில்லைகளாகச்செய்து இரும்புச் சட்டியில் மேற்படி எண்ணெயைவிட்டு மேற்படி ஊமத்தையிலைச்சாற்றை அதிற்கலந்து மேற்படிபில்லைகளை அதிற்போட்டு அடுப்பேற்றிக்காய்ச்சி பில்லைகள் நன்றாக்கருகினபதத்தில் இறக்கி வடிகட்டித்திப்பி நீக்கிப் புட்டியில் பத்திரப்படுத்தவும்.

இதனை நோயுள்ளவிடத்தில் பூசிவருவதனால் பக்ஷவாதம், நரம்புத்தளர்ச்சி ஆகியவைகள் தீரும்.

## வாலுளுவைத்தைலம்.

வாளுளுவையரிசி; மூக்குவெட்டிச் சுத்திசெய்த சேராங்கொட்டை; தோலுரித்த வெள்ளைப்பூண்டிதழ் இவை வகை–க–க்குப் பலம்–ரு.

செய்முறை:—ஒரு சிறுதோண்டியின் அடியில் சில துவாரங்கள்செய்து அத்துவாரங்களில் இரும்புக் கம்பிகளை மடக்கிவிட்டு அதனடியில் பீங்கான் கோப்பையை வடியும்தைலம் அதில் விழும்படியாகவைத்து வாய்க்குச் சீலமண்செய்து ஒரு குழிதோண்டி, அதன டுவில் வேறொரு சிறுகுழிதோண்டி, அதில் பீங்கான் கோப்பை மறையும்படியாக வைத்து, கோப்பையின் வாய்மறையும்படியாக அதைச்சுற்றிலும் மண்ணைத்தள் ளி, முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற மூன்றுசரக்கு களையும் தோண்டிக்குள் போட்டுத் தோண்டிவாய்க்குச் சில்லிட்டு ஏழுசீலமண்செய்து தோண்டியைச்சுற்றிலு ம் வறட்டியை ஓடித்தடுக்கி நெருப்பிட்டு ஆறினபின் எடுக்கப்பீங்கான் பாத்திரத்தில் தைலம் வடிந்திருக் கும். இதனையெடுத்து ஒரு புட்டியில் பதிரப்படுத்த வும்.

பிரமாணம்:-- குன்றிமணியெடை-க-முதல்-ச.

அனுபானம்:—வெற்றிலை, சீனிசர்க்கரை ஆகிய வைகளாம்.

உபயோகம்:—இதனைக் காலைமாலை இரண்டுவே ளையும் உட்கொண்டுவர சீதளசம்பந்தமான மூளையை ப்பற்றின ரோகங்கள் தீரும்.

## தளர்ச்சித் தைலம்.

தேற்றாம்பழச்சதை பலம்-உ0, மேற்றோல் சீவின சுக்கு, கழற்சிவிதைப்பருப்பு, புங்கம்விதைப்பருப்பு, சீ மைச்சாமர்திப்பூ, காட்டுக்கோஷ்டம் இவை வகைக்கு ப் பலம்-க0. கருஞ்சீரகம், ஊசித்தகரைவிதை, ஊமத் தன்விதை, அஜ்மூதா ஓமம், வாலுளுவையரிசி,மருதோ ன்றிவிதை, கண்டத்திப்பிலி, மருதம்பட்டை, குராசா ணிஓமம், அக்கராகாரம், ஓமம் இவை வகைக்குப் பலம்

-க, மரமஞ்சள்; வாய்விளங்கம் இவை வகைக்குப் பலம் -உ. நல்லெண்ணெய் பலம்-சஅ. சிற்றாமணக்கெண்ணெய் பலம்-ந. ஆளிவிதை யெண்ணெய் பலம்-ந.

செய்முறை:—மேற்படி சரக்குகளையெல்லாம் நன்றாகச்சிதைத்து ஒன்றாகக்கலந்து எட்டுப்படி ஜலத்திற்போட்டு ஒருநாள் ஊறவைத்து மறுநாள் அடுப்பேற்றிக்காய்ச்சி நான்கிலொருபாகமாகச் சுண்டவைத்து இறக்கி வடிகட்டித் திப்பிநீக்கின கஷாயத்துடன் முன் மூன்றுவகை எண்ணெய்களையும் கலந்து அடுப்பேற்றிச் சிறுதீயாக எரித்துக் கடுகுதிாள்பதத்தில் இறக்கி இளஞ்சூட்டுடன் கம்பளியில் வடிகட்டிச் சீஷாவில்பத்திரப்படுத்தவும்.

உபயோகம்:—நோயுள்ள அவயவங்களில் இதனைப் பூசிவருவதினால் நடுக்குவாதம்; வாயுசம்பந்தமான ரோகங்கள், சீதளசம்பந்தமான ரோகங்கள் ஆகியவை தீரும்.

## இருவங்க சூரணம்,

சுத்திசெய்த வெள்வங்கம், சுத்திசெய்த நாகம்; சுத்திசெய்த இரசம்; சுத்திசெய்த கருநாபிச்சூரணம் இவை வகை-க-க்கு விராகனெடை-உ. மிளகுச்சூரணம் விராகனெடை—கவ.

செய்முறை:—நாகத்தையும் வங்கத்தையும் உருக்கி இரசத்துடன் தொந்தித்துக் கல்வத்திற்போட்டரைக்கத் தூளாம். அதனுடன் மற்றச் சூரணங்களையும் ஒன்றாகக்கலந்து சிறுகச்சிறுகத் தூவி ஆறுஜாமநேரமரைக்கவேண்டும். பிறகு எல்லாம் நன்றாக மிஸ்ரமாகும்படி மூன்று சாமநேரமரைத்துச் சீஷாவில் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—அரிசியெடை-க.

அனுபானம்:—வெற்றிலை, தேன், நெய், வெண்ணெய் முதலியவைகளாம்.

உபயோகம்:—பக்ஷவாதம், முகவாதம், நரம்புத்தளர்ச்சி ஆகியரோகங்கள் குணமாகும்.

பக்ஷவாத உசிதம்.

சேராங்கொட்டைப்பருப்பு விராகனெடை-௪௦, சீனிசர்க்கரை பலம்-௪௦

செய்முறை:—மேற்படிபருப்பைக் கல்வத்திலிட்டு வெண்ணெய்போலரைத்துப்பிறகு சர்க்கரையும் சேர்த்து ஒருமணிநேரமரைத்துப் பீங்கான் பாத்திரத்திற்பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-அ-௨-௧.

அனுபானம்:—தேன்; நெய்; ஆகியவைகளாம்.

உபயோகம்:—பக்ஷவாதம்; முகவாதம்;மூர்ச்சை ரோகம் ஆகியவை தீரும்.

மேற்படி வேறு.

வசம்புச்சூரணம் விராகனெடை-௪௦, மிளகுச்சூரணம், பொதினாச்சூரணம், கருஞ்சீரகச்சூரணம், காட்டுச்சீரகச்சூரணம், இவை வகைக்குவிராகனெடை-௩, தேன் பலம்-௬.

செய்முறை:— இவையெல்லாவற்றையும் ஒன்றாக மிஸ்ரமித்துத் தேனைவிட்டுப்பிசைந்து பீங்கான் பாத்திரத்தில் வைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-௧௨, முதல் ௨௨-வரையில்.

உபயோகம்:—பக்ஷவாதம், முகவாதம், கபசம்பந்தமான சகல வியாதிகள் ஆகியவைகள் தீரும்.

மேற்படி வேறு.

இந்திரகோபப்பூச்சி-௧, இதன் தலை, கால் முதலியவைகளைநீக்கிவிட்டு ஒரு வெற்றிலையில் வைத்து மடித்துத் தாம்பூலத்துடன்சேர்த்து மென்று தின்னவேண்டும். இவ்விதம் தினம் இரண்டு அல்லது மூன்றுதடவைகள் செய்துவரின் பக்ஷவாதம், முகவாதம், நரம்பு

த்தளர்ச்சி முதலியவைகள் நீங்கும். நரம்புத்தளர்ச்சியால் நேரிட்ட தாதுநஷ்டந்தீரும்.

### பக்ஷவாத நசியம்.

காட்டுச்சீரகம், மருதோன்றி விதை இவைவகை-க-க்கு விராகனெடை-உ, இவ்விரண்டையும் கல்வத்திற்பொடித்து ஆற்றுத்தும்மட்டிக்காய் வேர்த்தோல் சாற்றையும், சிவப்பு முள்ளங்கிச்சாற்றையும் சமமாகச் சேர்த்துச் சிறுகச் சிறுகவார்த்து அரைத்து மெல்லிய வஸ்திரத்தில் வைத்து நோயாளியின் நாசித்துவாரங்களில் மும்மூன்று துளிவிடவும். இவ்விதம் தினம் இரண்டுமூன்று தடவைகள் செய்துவரின் மூளையிலுள்ள அசுத்தமாசுகளை நீக்கி முகவாதம், மூர்ச்சைரோகம் ஆகியவைகளையும் போக்கும்.

### பக்ஷவாத ஆக்கிராணம்.

மேற்றோல் சீவினசுக்குச்சூரணம், லாகூருப்புத்தூள் இவை வகை-க-க்கு விராகனெடை-உ.

இவ்விரண்டையுங் கல்வத்திலிட்டு ஒரு மணிநேரமரைத்துச் சீஷாவில் பத்திரப்படுத்தவும். அவசியமானபோது கொஞ்சமெடுத்து ஒரு நாசித்துவாரத்தை அடைத்துக்கொண்டு மறுநாசித்துவாரத்தில் ஆக்கிராணிக்கச்செய்யவேண்டியது. இவ்விதமே மறுநாசித்துவாரத்தையும் அடைத்துக்கொண்டு முன் அடைத்திருந்த நாசிதுவாரத்திலும் ஆக்கிராணிக்கச்செய்யவேண்டியது. இவ்விதம்தினம்இரண்டு அல்லது மூன்றுதடவைகள்செய்துவரின்பக்ஷவாதம், முகவாதம் ஆகியவைகள் தீரும்.

### குறிப்பு.

தானே ஆக்கிராணிக்கச்சக்தி அல்லது ஸ்மரணையில்லாவிட்டால் ரப்பர்குழாயில் அல்லது வேறு தகுந்த குழாயில் வைத்து நாசித்துவாரத்தில் ஊதவேண்டும்.

## பக்ஷவாத ஆவி.

தோலுரித்த பூண்டிதழ், மேற்ரோல் சீவினசுக்கு, இவை வகைக்குப்பலம்-௧, மலைவேப்பிலை அல்லது வேப்பிலை, வெண்ணொச்சியிலை இவை வகைக்குப்பலம்-௬.

இவை யெல்லாவற்றையும் சிதைத்து ஒன்றேகால் படி ஜலத்திற்போட்டுக்காய்ச்சி அரைப்படியாகச் சுண்டின சமயத்தில் எடுத்துக்கொள்ளவும். பின்நோயாளியைக் கட்டிலின்மேல் படுக்கவைத்து ஆவிபோகாமல் கட்டிலைச்சுற்றிலும் கம்பிளியால் அல்லது உரத்த துப்பட்டியால்மூடி முன் சித்தப்படுத்தின கஷாயத்தைக் கட்டிலின் கீழ்வைத்து நோயாளியையும் நன்ருக மூடித் தேகத்தின்மீது ஆவிபடும்படிசெய்யவேண்டியது. ஆவி குறைந்துவிட்டால் செங்கல்லை அடுப்பில் போட்டுச் சூடாக்கி அதிற்போட ஆவியுண்டாகும். அதற்காக முன்னமேயே செங்கல்லை நெருப்பில்போட்டுச் சித்தப் படுத்தி வைத்துக்கொள்ளவேண்டும். அவசியமானல் இந்தக்கஷாயத்தையே இரண்டு பாத்திரத்திற்போட்டு கட்டிலின்கீழ் இரண்டு பக்கத்தில் வைக்கலாம். இவை யெல்லாம் சிகிச்சகர்கள் சமயோசிதம்போல் செய்வார்களாக.

உபயோகம்:—பக்ஷவாதம், முகவாதம் முதலியவைகள் தீரும்.

## உன்மத்தரோகச் சிகிச்சை.

இதுபலவகைப்படும்; இதன்விபரமெல்லாம் நமது யூநானிவைத்தியபால போதினியில் சொல்லப்பட்டிருக்கின்றன; ஆயினும், இங்குப்பொதுவான சிலவிதிகளையும், முக்கியமான சில சிகிச்சைகளையும் எழுதுவாம்:

இந்த நோயாளியை எந்த விதத்திலும் சந்தோஷமாயிருக்க முயற்சிசெய்யவேண்டும்; சீதோஷ்ணம் ச

மமாயிருக்கும் ஸ்தலங்களில் வாசம் செய்யும்படி செய்யவேண்டும்; கொழுமையான ஆகாரங்களைச்சாப்பிடச் செய்யவேண்டும்; அதிகநேரம் தூங்கும்படி செய்வது மிகவும் முக்கியமான சிகிச்சையாம். அடிக்கடி பேதிக்குக்கொடுத்து துர்நீர்களை வெளிப்படுத்தவேண்டும்; இவர்கள் இருதயத்தைப் பலப்படுத்தத் தகுந்த ஆகாரங்களையும் அவுடதங்களையும் உபயோகிக்கவேண்டும்; உன்மத்த வியாதியஸ்தனுக்கு எந்தவிஷயத்தில் அதிகப் பிரியமோ அந்த விஷயத்தைச்செய்யும்படி அதிகநேரம் விட்டுவைப்பது மிக்க நன்மையைத்தரும். ஆனால், சம்போகம், தனித்திருத்தல், பயமுறுத்தல் ஆகியவை கூடா; இன்னும் இந்த நோயாளிக்கு ஸ்திரீ இச்சையிருந்தால் மிதமான ஸ்திரீ சங்கமத்துக்கு அனுமதிகொடுக்கலாம்.

### அப்திமூன் சிகாமதுபானம்.

அப்திமூன் விராகனெடை-அ, துராவிலே, காவுஜபான் இவை வகைக்கு விராகனெடை-சஉ, சீனிசர்க்கரை பலம்-ரு, திறமான சீமைக்காடி பலம்-உ.

செய்முறை:—மேற்கண்ட சரக்குகளைச்சிதைத்து இரண்டு ஆழாக்கு ஜலத்திற்போட்டுக்காய்ச்சி மூன்றிலொருபாகமாகச் சுண்டினபின் இறக்கி வடிகட்டித்திப் பிழிந்த கஷாயத்துடன் மேற்படிசர்க்கரையையும்காடியையும் சேர்த்துக்காய்ச்சிப் பாகுபதத்தில் இறக்கி ஆறினபின் சீஷாவில் பத்திரப்படுத்தவும்.

வெள்ளாட்டுப்பால் படி-உ, இதனைக்காய்ச்சிஅரைவாசிசுண்டினவுடன் ஒருபலம் மேற்படி சிகாமதுபானத்தைவிட்டுப் பிரைக்குத்திக் காலையில் மேல்தெளிவை

யிறுத்துப் பானம்செய்விக்கவேண்டும். இவ்விதம் பிரதிகாலையிலும் செய்வித்துவருவதால் உன்மத்தரோகம், பைத்தியரோகம், வாதசம்பந்தரோகம் ஆகியவை தீரும். ஆனால், நாளுக்குநாள் பாலை அளவில் அதிகப்படுத்திக்கொண்டுவரவேண்டும். இவ்வாறு அதிகப்படுத்தும்போது பிரைக்குத்தும் காடி ஷர்பத்தையும் அதிகப்படுத்தவேண்டும்.

மேற்படி (வேறு.)

கருப்புக்கடுக்காய், கறியுப்பு இவை வகைக்கு விராகனிடை-கவ, அப்திமூன் விராகனிடை-ஈய, சீமைக்காடி பலம்—10. சீனிசர்க்கரை பலம்-ரு.

செய்முறை:—மேற்படி சரக்குகளைச் சிதைத்து மேற்படி காடியில் ஓர் இரவு ஊறவைத்துக்காய்ச்சி அரைவாசி சுண்டினவுடன் இறக்கி வடிகட்டித்திப்பி நீக்கினகஷாயத்தில் மேற்படி சர்க்கரையைக்கலந்து காய்ச்சிப் பாகுபதத்தில இறக்கி ஆறினபின் புட்டியில் பத்திரப்படுத்தவும்.

இத்தாமராக்கு வெள்ளாட்டுப் பாலைக்காய்ச்சி அதில் ஒருபலம் மேற்படி காடிஷர்பத்தை பிரைக்குத்திமறுநாள் காலையில் அதில் தெளிந்திருக்கும் நீரை ரோகாளிக்கு பானம் செய்விக்கவேண்டும். நாளுக்குநாள் பாலை அதிகப்படுத்திவரவேண்டியது. பாலை அதிகப்படுத்தும்போது பிரைக்குத்தும் காடிஷர்பத்தையும் அதிகப்படுத்தி வரவேண்டுமென்பதும் தானேவிளங்கும். இவ்விதம் தொடர்ச்சியாகச் சிலநாள் செய்துவரின் உன்மத்தரோகம், பைத்தியரோகம் ஆகியவை தீரும்.

## பைத்திய நசியம்.

மனிதன் தலையுரோமத்தைச் சுட்டுக்கரியாக்கி ரோஜாப்பூ எண்ணெயில் அரைத்து மெல்லிய வஸ்திரத்தில் வைத்து இரண்டு நாசித்துவாரங்களிலும் ஐந்தைந்து துளி நசியம் செய்யவேண்டியது. தினம் ஒன்றிற்கு சமயோசிதம்போல இரண்டு அல்லது மூன்று தடவைகள் நசியம் செய்யவும். இவ்விதம் தொடர்ச்சியாகச் சில நாட்கள் செய்துவரின் பைத்தியரோகம் தீரும்.

## பைத்திய உசிதம்.

அபினை அரையரிசியெடை முதல் ஆரம்பித்து இரண்டு குன்றிமணியெடைவரையில் தினே தினே கிரமேணுவாய் அதிகப்படுத்தித் தின்னப்பழக்கவேண்டும்; இவ்விதஞ் செய்வதால் யௌவன முள்ளவர்களுக்குக் காணும் அறிவு பைத்தியம், ஞானப்பைத்தியம் ஆகியவை தீரும்.

## குறிப்பு.

இந்த அபின் சிகிச்சையானது நமது அனுபவத்தில் வரவில்லை; ஆனால், இதனை உபயோகித்துப் பலனடைந்ததாக நமது நண்பர்களுட் சிலர் எழுதியிருக்கின்றார்கள்.

## மேற்படி (வேறு)

இரும்பை நெருப்பில் நன்றாகப்பழுக்க வைத்துத் தண்ணீரில் தோய்க்கவேண்டும்; தோய்க்கும்போது (இ

ன்னார் குமாரர் இன்னாருடைய காமப்பைத்தியமான து இந்த இரும்பின் சூடுதணிந்து போவதுபோல்தணிந்து போகவேண்டும்) என்று மனவுறுதியுடனும் ஊக்கத்துடனும் ஜெபிக்கவேண்டும்; இவ்விதம் மடக்கிமடக்கி மூன்றுதடவைகள் காய்ச்சி மூன்றுதடவை தோய்க்கவேண்டும்; தோய்க்கும் ஒவ்வொருதடவையும் மேற்படி மந்திரத்தை ஜெபித்துவரவேண்டும்; பிறகு அந்த ஜலத்தைக் காமப்பைத்தியம் பிடித்தவர்களுக்கு முகத்தைக்கழுவி மார்பிலும் தெளித்துக்கொஞ்சம் பானமும் செய்விக்கவேண்டும்; இவ்விதம் மூன்றுநாள் அல்லது ஐந்துநாள் செய்யின் காமப்பைத்தியம் தீரும்.

## மேற்படி (வேறு)

ஒருவர் இறந்துபோன தேதி முதலியவைகளைச் சலவைக்கல்லில் எழுதி ஞாபகச்சின்னமாக அவர்களின் கல்லறையின் தலைமாட்டில் வைத்திருப்பது வழமை; இவ்விதம் வைத்திருக்கும் கல்லானது ஐம்பது வருஷத்துக்கு மேற்பட்டதாயிருக்கவேண்டும்; நூறு வருஷம் சென்றதாயிருந்தால் மிகவும் உத்தமம்; இவ்வித சலவைக்கல்லின் ஒருதுண்டை யெடுத்துத்தண்ணீரில் இழைத்துக்கலக்கவேண்டும்; அப்படியிழைக்கும்போது (இந்த நோயாளி மோகித்திருக்கும் நாயகியின் எண்ணம் இவன் மனதைவிட்டகலுக) என்னும் மந்திரத்தை மனவுறுதியுடனும் ஊக்கத்துடனும் உச்சரிக்கவேண்டும்; இவ்விதம் மூன்றுதடவை உச்சரித்து

அந்தத்தண்ணீரால் நோயாளியின் முகத்தைக்கழுவி மார்பிலும் தெளிக்கவேண்டும்; இவ்விதம் மூன்றுநாள் அல்லது ஐந்துநாள் செய்யின் காமப்பைத்தியம் தீரும்.

ஷை (வேறு.)

தேள்கொடுக்கு, நாய்க்கால் நகம், ஆமைபோடு, ஆகியமூன்றையும் ஒட்டைத்தோலில் வைத்து மடித்துத் தாயத்தாகப் பட்டுநூலினுல் கட்டி நோயாளியின் கழுத்தில் தொங்கவிட்டு வைப்பதினுல் பைத்தியரோகம், வீண்கவலை, கிலேசம் ஆகியவைகளை நீக்கும். இது காக்கை மூர்ச்சைரோகத்துக்கும்உபயோகமாம்.

ஷை (வேறு)

ஆந்தைத் தலைமூளை குன்றிமணியெடை-௪, இதனை ஒரு சிறுஓட்டில் வைத்து நெருப்பில் வைக்க உருகும்; அந்தச்சமயத்தில் நான்கு குன்றிமணியெடை சூடனைத்தூள்செய்து அதிற்போட்டு நன்றாக மிஸ்ரமானபின்பு நான்கு குன்றிமணியெடை காக்கையின் இரத்தத்தை அதனுடன்சேர்த்து நன்றாக மிஸ்ரமித்து வைத்துக்கொள்ளவேண்டும். அவசியமானபோது அரைக்குன்றிமணியெடை எடுத்துக்கொஞ்சம் துளசிரசசாற்றைவிட்டு நன்றாக மிஸ்ரமித்து மெல்லிய வஸ்திரத்தில்வைத்து நோயாளியின் நாசித்துவாரங்களில் மும்மூன்று அல்லது நன்னான்குதுளி சொட்டவேண்டும்;

தினம் காலையில் ஒருவேளை செய்தால் போதுமானது. இவ்விதம் சிலநாட்கள் செய்துவரின் பைத்தியரோகம், அறிவுபைத்தியம் முதலியவை தீரும்.

மேற்படி (வேறு)

தான் வீணாய் நியாய விரோதமாக மோகித்திருக்கும் பெண்ணின் தலைமயிரை ஒரு சிறு புதுமண்கலயத்தில் எரித்துக்கரியாக்கி நீக்கிவிட்டு அந்தக் கலயத்தில் ஜலத்தைவார்த்து வைத்துக் காமப்பைத்தியங்கொண்டவனுக்குக் குடிப்பாட்ட அந்தக்காமப்பைத்தியம் நீங்கிவிடும்.

துடிரோகச் சிகிச்சை.

சிலருக்கு இருந்தாப்போலிருந்து தேகத்தின்சில பாகங்களில் துடிப்பதுண்டு. இது பக்ஷவாத முதலியவைகளுக்கு அறிகுறியாயினும் அடிக்கடி காணாமலும் அதிகமாயிராமலுமிருந்தால் அதனால்தோஷமொன்றுமில்லை. ஆனால், தேகத்தில் பலவிடங்களில் அடிக்கடி துடிப்பதனால் ஏதேனும் ஒருவியாதிக்கு ஏதுவாகலாம்; ஆகையால், உடனே கவனித்துச் சிகிச்சை செய்விக்கவேண்டும்.

கறியுப்பு, கோதுமை உமி அல்லது நெல்உமி இரண்டையும் இடித்து ஓட்டில் வறுத்துத்துணியில்வைத்துமுடிந்துகொண்டு துடிக்கும் ஸ்தானங்களில் ஒற்றிடமிடவேண்டும். இவ்விதம் சிலதினங்கள் செய்துவரின் துடி துடிப்பு நீங்கிவிடும்.

பக்ஷவாத சிகிச்சையில் சொல்லப்பட்டிருக்கும்மேற்பூச்சுத்தைலங்களை இந்தவியாதியிலும் மேற்பூச்சாகப்பூசி வருவதால் குணமுண்டாகும்.

மேற்கண்ட சிகிச்சைகளினல் குணம் காணுவிட்டால் கபத்தைப்பக்குவப்படுத்தி அதனைப்பேதியால் வெளிப்படுத்தவேண்டும்.

## நடுக்கல் ரோகச்சிகிச்சை.

இந்த வியாதியானது கபமதிகரித்து உண்டாயிருந்தால் கபத்தைப்பக்குவப்படுத்தி அதனைப்பேதி மூலமாக வெளிப்படுத்தவேண்டும்.

மிதமிஞ்சின ஸ்திரீசங்கமத்தினுலுண்டானதாயிருந்தால் அந்த விஷயத்தை அறவே நீக்கவேண்டும்: அல்லது, மிதப்படுத்தவேண்டும்.

மதுபான மிகுதியினல் உண்டாயிருந்தால் அதை அறவே நீக்கவேண்டியது.

இன்னும் மேற்படி வியாதிபஸ்தர்கள், பசும்பால், அரைவேக்காடான கோழிமுட்டை ஆகியவைகளை அதிகமாக உபயோகித்துவருவதினல் அதிக குணமுண்டாகும்.

## விண்ணப்பம்.

கண்வியாதி, காதுவியாதி, மூக்குவியாதி, பல்வியாதி, வாய்வியாதி ஆகியவைகளின் சிகிச்சையெல்லாம் சில காரணங்களால் இதில் எழுதப்படவில்லை. கடவுள் கிருபையால் இவையெல்லாம் இரண்டாம்பாகத்துடன் சேர்த்தச்சிடப்படும்.

யூநாநி சூக்ஷ்ம

# சிகிச்சா போதினி.

## மூன்றாம் அதிகாரம்.



இதன் இரண்டாம் அதிகாரம் சில காரணங்களால் இரண்டாம் பாகத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது. வேண்டியவர்கள் அங்குக்கண்டு கொள்க.

# நாவின்ரோகச் சிகிச்சை.

1. நாவில் அசுத்த சத்துக்கள் சேர்வதால் அது சுடித்துப்போகும்.

சிகிச்சை:—கடுகு, அரிசித்திப்பிலி, மேற்ரேல் சீவின சுக்கு, நவச்சாரம், அக்கராகாரம் ஆகிய இவற்றுள் ஒவ்வொன்றைத் தனிமையேனும் அல்லது, இரண்டிரண்டை அல்லது, மும்மூன்றை அல்லது; எல்லாவற்றையும் சமபாகமாக எடுத்து இடித்துத் தூள் செய்து நாவில் தேய்த்துவரவேண்டும். வேளா வேளைகளில் மேற்படி சூரணத்தைக் காடியிற்குழைத்து நாக்கில் தடவியும் வரவேண்டும். இவ்விதஞ் சிலதடவைகள் செய்து வந்தால் மேற்படி நாத்தடிப்பு ரோகந் தீரும்.

இரண்டுபலம் மருதம்பட்டையைச் சிதைத்துபத்துப்பலம் ஜலத்திற் போட்டுக்காய்ச்சி ஐந்து பலமாகச் சுண்டவைத்து வடிகட்டித் திப்பிநீக்கின கஷாயத்தை வாய்க் கொப்பளித்துவர மேற்படி நாத்தடிப்பு ரோகந்தீரும்.

2. நாவிற்சூடு அதிகரித்து வீக்கங்கண்டு அதுதடித்துப் போவதுமுண்டு.

சிகிச்சை:—உலர்ந்த ரோஜாப்பூ விதழ்ச் சூரணம், மசூரிப்பருப்புமா. (இதனைச் சில தேசங்களில் ரெங்கோன் பருப்பென்று வழங்குவதுமுண்டு.) இவ்விரண்டும் வகை-க-க்குச் சமனெடை. இவ்விரண்டையுமிஸ்ரமித்து மணித்தக்காளி யிலைச்சாற்றை விட்டுக் குழைத்து நாக்கில் தடவிவர மேற்படி சூட்டினாலுண்டான நாவின் வீக்கந்தீரும்.

3. சில சமயங்களில் நாவில் எரிவந்த முண்டாவ துமுண்டு. எப்போதும் நிர்நிமித்தமாக நாவானது எரிந்துகொண்டே யிருக்கும்.

சிகிச்சை:—நாவில் புண், நாவில் இரணம் முதலிய காரணங்களினால் எரிவந்த முண்டானால் அந்தக் காரணத்தை நீக்க முயற்சி செய்யவேண்டும்.

தயிருடன் தண்ணீரைக் கலந்து கலக்கி வாய்கொப்பளித்து வரவேண்டும். சமயத்திற்குத் தகுந்தபடி பிரதிதினமும் மூன்று அல்லது, நான்கு தடவைகள் மேற்கண்டபடி. செய்துவர நாவின் எரிவந்தம் குணமாம்.

காய்ச்சுக் கட்டித்துண்டை வாயிலடக்கிக் கொண்டு அதன் இரசத்தை விழுங்கி வருகிறதினாலும் நாவின் எரிவந்தங்குணமாம்.

4. நாவில் கொப்பளங்கள் காண்பதுண்டு. இதற்குத் தமிழில் அக்ஷரமென்று சொல்கின்றார்கள். இக் கொப்பளங்கள் இரத்தாதிக்கத்தா லுண்டானால் சிவந்த வருணமுள்ளவைகளாக இருக்கும். பித்தாதிக்கத்தினாலுண்டானால் மஞ்சள் வருணச்சாயலாயிருக்கும். கபாதிக்கத்தினாலுண்டானால் வெண்மையாக அல்லது, வெண்சாயலாயிருக்கும். வாதாதிக்கத்தினா லுண்டானால் கருப்பாய் அல்லது, கருஞ்சாயலாக இருக்கும்.

கவனிப்பு.

குழந்தைகளுக்கு நாவில் கருத்த கொப்பளங்கள் கண்டால் மரணத்தின் இலட்சண மென நிதானித்துக் கொள்ளவேண்டும். ஆயினும் கூடியவரையிற் சிகிச்சை செய்யாம லிருக்கலாகாது.

சிகிச்சை:—மருதம்பட்டையை யிடித்து வஸ்திர காயஞ் செய்த சூரணம், வெள்ளைக் காய்ச்சுக்கட்டி அல்லது, கத்தைக்காம்பை யிடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணம், இவ்விரண்டும் சமனெடை. இவ்விரண்டையும் மிஸ்ரமித்து நாவில் தூவிவரக் குழந்தைகளுக் குண்டாகும் அக்ஷரரோகம், பெரியவர்களுக்கு நாவிலுண்டாகும் கொப்பளங்கள் ஆகியவைகள் தீரும்.

காயிதத்தை பெரித்த சாம்பல், ஏலக்காய்ச் சூரணம், வெள்ளைக் காய்ச்சுக்கட்டிச் சூரணம், பொரித்த படிக்காரச்சூரணம், இவை நான்கும் சமனெடை. இவற்றை யொன்றாக மிஸ்ரமித்து நாவிற் கொஞ்சங்கொஞ்சந் தூவிவர ஷை அக்ஷரரோகந்தீரும்.

மசூரிப்பருப்பு, மொச்சைக் கொட்டைப்பருப்பு, உளுந்துப்பருப்பு ஆகிய இவைகளில் ஒன்றை ஓட்டில் வறுத்துக்கரியாக்கித் தூள்செய்து வஸ்திரகாயஞ் செய்து கொள்ளவேண்டும். வெள்ளைக் காய்ச்சுக்கட்டிச்சூரணம். இவ்விரண்டையுஞ் சமபாகமாகச் சேர்த்து வைத்துக்கொண்டு நாவிற் கொஞ்சங் கொஞ்சமாகத் தெளித்துவர நாவின் கொப்பளரோகந் தீரும்.

காவுஜுபானை யெரித்துக் கரியாக்கிப் பொடித்த சூரணம், வெள்ளைக் காய்ச்சுக்கட்டிச்சூரணம் இவை யிரண்டும் சமனெடை. இவற்றை மிஸ்ரமித்துக் கொஞ்சங் கொஞ்சமாக நாவில் தூவிவர மேற்படிரோகந் தீரும்.

பேரேலக்காய், கொட்டைப்பாக்கு இவ்விரண்டையுந் தனித்தனி சுட்டுக்கரியாக்கித் தனித்தனி பொ

டித்துத் தனித்தனி வஸ்திரகாயஞ்செய்து தனித்தனி சமனெடையாக நிறுத்து இரண்டையு மிஸ்ரமித்துக் கொஞ்சங் கொஞ்சமாக நாவில் தூவிவர ஷை ரோகந் தீரும்.

வெள்ளைக் காய்ச்சுக்கட்டிச் சூரணம், வெடியுப் புத்தூள் இவ்விரண்டும் சமனெடை. இவற்றை மிஸ்ர மித்துக் கொஞ்சங் கொஞ்சமாக நாவில் தூவிவர மேற் கண்ட ரோகந்தீரும்.

கற்கண்டைச் சன்னமாய்ப் பொடித்த தூள் அ-ப ங்கு, சூடனைப்பொடித்த தூள் க-பங்கு. இவ்விரண் டையு மிஸ்ரமித்து நாவிற் கொஞ்சங் கொஞ்சமாகத் தூவிவர மேற்படிரோகந்தீரும். இது பெரும்பான் மையும் குழந்தைகளுக்குக் காணும் அக்ஷரரோகங்க ளில் உபயோகப்படுத்தப் படுகிறது.

பொரித்த படிக்காரத்தூள், மாசக்காய்ச் சூரணம் இவ்விரண்டுஞ் சமனெடை. இவ்விரண்டையு மிஸ்ரமி த்து நாவிற் கொஞ்சங் கொஞ்சமாய்த் தூவிவர மேற் படி ரோகந்தீரும்.

இராஜாளி, வல்லூறு, பருந்து ஆகியவைகளுள் ஒன்றின் மலத்தைத் தூளாக்கி வஸ்திரகாயஞ் செய் து வைத்துக்கொண்டு இரண்டு குன்றிமணி யெடை நாவில் தூவிவரக் குழந்தைகளுக்குக் காணும் கபாதி க்க அக்ஷரரோகந்தீரும். இது பெரும்பான்மையுங்குழ ந்தைகளுக் குண்டாகும் அக்ஷர ரோகங்களுக்கு உப யோகப்படுகிறது.

யவைக்கோதுமையை வறுத்துக் கரியாக்கி யிடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணம். வெள்ளைக் காய்ச்சுக்கட்டிச்சூரணம் இவை யிரண்டுஞ் சமனெடை. இவற்றை மிஸ்ரமித்து நாவில் கொஞ்சங் கொஞ்சந் தூவிவர நாவிலுண்டாகுங் கொப்பளங்கள் தீரும்.

ம்னிதத்தலை ரோமத்தைச் சுட்டுக் கரியாக்கின தூளை நாவில் தூவிவர குழந்தைகளுக் குண்டாகும் அக்ஷர ரோகந்திரும். இந்தத் தூளையே தேனிற்குழைத்து நாவில் தடவிவரக் குழந்தைகளுக்குக் கபசம்பத்திஞலுண்டான அக்ஷரரோகந்திரும்.

மஞ்சள் சத்தை அல்லது, மஞ்சள் சூரணத்தை எலுமிச்சம்பழச் சாற்றிற்குழைத்து நாவில் தடவிவர நாவிலுண்டாகுங் கொப்பள ரோகங்கள் தீரும். இதனைக் குழந்தைகளுக்கு உபயோகிக்காமற் பெரியவர்களுக்கு உபயோகிக்கவேண்டும்.

கோதுமைச் சத்தைத் தண்ணீரிற் குழைத்துக் குழந்தைகளுக் குண்டாகும் அக்ஷரரோகங்களுக்குபயோகிக்கக் குணமாகும்.

ரோஜாப்பூ இலை, பருப்புக்கீரை ஆகியவைகளிலொன்றை மென்று கொண்டிருக்கஉஷ்ண சம்பந்தமான நாக்கொப்பளங்கள் தீரும்.

சரக்கொன்றை யிலையை யரைத்து நாவில் தடவிவர நாவின் கொப்பளங்கள் தீரும்.

கம்பிளிப் பூச்சிமர இலையை மென்று வருவதிஞலும் நாவின் கொப்பளங்கள் தீரும்.

நறுவிலிமரப் பட்டையைச் சிறு துண்டுகளாகத் துண்டித்து அவைகளில் காய்ச்சுக் கட்டியைக் கரைத்துத் தடவி உலர்த்தி வைத்துக்கொண்டு ஒவ்வொன்றாக மென்று வருவதினாலும் நாவிலுண்டான கொப்பளங்கள் தீரும்.

கருவேலங் கொழுந்தை வெண்ணெய்போ லரைத்து நாவில் தடவி வருவதினாலும் அதனைக் கஷாயஞ் செய்து உள்ளுக்கு உபயோகப்படுத்தி வருவதினாலும் நாவிலுண்டாகும் எல்லா வகைக் கொப்பளங்களும் தீரும்.

மஞ்சட் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல் நெல்லிமுள்ளி, வெள்ளைக் காய்ச்சுக்கட்டி இவை நான்கும் வகை-க-க்குப் பலம்-௨. இவற்றை நன்றாய்ச்சிதைத்துப் பதினைந்து பலம் ஜலத்திற்போட்டு ஐந்து பலமாகச் சுண்டினபின் வடிகட்டித் திப்பிநீக்கினகஷாயத்தை வாய் கொப்பளித்துவரச் சூடதிகரித்ததினாலுண்டான நாவின் கொப்பளம் தீரும்.

நெல்லிவற்றல் பலம்-க. இதனை ௨-ஆழாக்கு ஜலத்திற்போட்டு க-ஆழாக்காகச் சுண்டவைத்த கஷாயத்தை வாய்கொப்பளிக்கவேண்டும். ஒருதடவை சித்தப்படுத்தின கஷாயத்தை மூன்று பாகமாகச்செய்து ஒவ்வொரு பாகத்தை வாய் கொப்பளிக்கவேண்டும். ஒவ்வொருதடவையும் அந்தக் கஷாயத்தைச் சுடவைத்துக் கொள்ளவும் வேண்டும், இவ்விதம் இரண்டு மூன்று நாட்கள் செய்துவரின், சூடதிகரித்ததினாலுண்டானநாவின் கொப்பளம் தீரும்.

மருதோன்றி யிலையை வாயில் வைத்து மென்று சுவைத்து உமிழ்ந்துவிடவேண்டும். ரு-அல்லது, ௧0. நிமிஷம் ஒவ்வொரு இலையாக மென்று சுவைக்கவேண்டும். பிரதிதினமும் மூன்று அல்லது நான்குதடவையும் செய்யவேண்டும். இவ்விதம் இரண்டு மூன்று நாட்கள் தொடர்ச்சியாகச் செய்யின் வாதசம்பந்தத்தா லுண்டான நாவின் கொப்பளங்கள் தீரும்.

மாதுளமரப்பட்டை, நறுவிலிமரப் பட்டை, வெள்ளைக் காய்ச்சுக்கட்டி, இவை வகை-௧-க்குப் பலம் அரை. இவற்றைச் சிதைத்து இரண்டு ஆழாக்கு ஜலத்திற்போட்டு ஒரு ஆழாக்காகச் சுண்டவைத்து அதையிரண்டு பங்காக்கி ஒருபங்கை வாய் கொப்பளிக்கவேண்டும். மூன்றுமணி நேரஞ்சென்று மறுபாதியைக் கொஞ்சம் சுடவைத்து முன்போல் வாய் கொப்பளிக்க வேண்டும். இவ்விதம் மூன்றுமணிக்கொரு தடவையாக மூன்று நாள் செய்துவரின் வாதசம்பந்தத்தினுலுண்டான நாவின் கொப்பளங்கள் தீரும்.

கருவேலம் பட்டை, இலந்தமரப்பட்டை. இவை வகை-௧-க்குப் பலம்-ஜ. இவ்விரண்டையுஞ் சிதைத்து ஒன்றரை ஆழாக்கு ஜலத்திற்போட்டு முக்கால் ஆழாக்காகச் சுண்டக்காய்ச்சி அதனை வாய்கொப்பளிக்க உபயோகிக்கவேண்டும். பிரதிதினமும் மூன்று அல்லது நான்கு தடவைகளாக மூன்றுநாள் வாய் கொப்பளிக்கின், வாத சம்பந்தத்தினுலுண்டான நாவின் கொப்பளம், இரசம், இரசகர்ப்பூரம், ஜாதிலிங்கம், ஆகியவைகளை உபயோகித்ததினுலுண்டான வாய்வேக்காடு, வாய்ரணம் முதலியவைகள் தீரும்.

துவரை யிலையை யிடித்துப்பிழிந்த சாறு ஆழாக்கு அரை. இதனை வாய் கொப்பளிக்க உபயோகிக்க வேண்டும். இவ்விதம் பிரதிதினமும் இரண்டு அல்லது மூன்றுதடவைகள் செய்யவேண்டும். இவ்விதம் இரண்டு அல்லது மூன்றுநாட்கள் செய்யின் இரசம், இரசகர்ப்பூரம், சவ்வீரம், இவை சம்பந்தமான அவுடதங்கள் ஆகியவைகளா லுண்டான நாப்புண், நாவின்கொப்பளம், வாயிலுள்ள கொப்பளங்கள் ஆகியவைகள் தீரும்.

துவரம்பருப்பு பலம்-க, இதனை முக்கால் ஆழாக்கு ஜலத்தில் ஆறுமணி நேரம் ஊறவைத்து வடிகட்டின ஊறற் கஷாயத்தை வாய் கொப்பளித்துவர, மேற்கண்ட ரோகங்கள் தீரும்.

துவரம்பருப்பு, மசூரிப்பருப்பு இவை வகை-க-க்கு பலம்-அரை, கர்ப்பூரம் விராகனெடை-உ, முன்னுள்ள இரண்டு பருப்பினங்களையும் ஒரு ஆழாக்கு ஜலத்திற்போட்டு அரையாழாக்காகச் சுண்டவைத்து வடிகட்டின கஷாயத்தில் மேற்படி கர்ப்பூரத்தைப் பொடித்துப்போட்டு வாய் கொப்பளிக்கவேண்டும். இவ்விதம் மூன்று நாள் பிரதிதினமும் மூன்று தடவை மேற்கண்டபடி புதிது புதிதாகச் சித்தப்படுத்தி வாய்கொப்பளித்துவர, இரசம், இரசகர்ப்பூரம், சவ்வீரம் ஆகியவைகள் இவை சம்பந்தமான அவுடதங்கள் முதலியவைகளா லுண்டான நாவின் புண், நாவின் கொப்பளம், ஈறின் புண், ஈறுவீக்கம், முதலியவைகள் நீங்கும்,

மருதோன்றியிலை பலம்-க. இதனை ஒரு ஆழாக்கு ஜலத்திற்போட்டு மூன்றுமணி நேரம் ஊறவைத்துப்

பிறகு நன்ருய்ப்பிசைந்து வடிகட்டித் திப்பிநீக்கினஜல த்தை மேற்கண்டபடி வாய்க்கொப்பளித்துவர, மேற்க ண்டரோகம் தீரும்.

மஞ்சட் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், நெல்லிமுள்ளி, காட்டுவாகை மரப்பட்டை, கசகசாத் தோல், இவை வகை-க.க்குப் பலம்-வ. இவற்றைச் சிதைத்து ஒன்றரை ஆழாக்கு ஜலத்தைவிட்டு முக்கா ல் ஆழாக்காகச் சுண்டவைத்து வடிகட்டின கஷாயத் தில் காற்பலம் சிற்றாமணக்கெண்ணெயை விட்டு வாய் கொப்பளிக்கவேண்டும். இவ்விதம் பிரதிதினமும் இர ண்டு, அல்லது, மூன்றுதடவைகள் வாய் கொப்பளி த்துவந்தால் மூன்றுநாளுக்குள்ளாக இரசகர்ப்பூரம், அது சம்பந்தமான அவுடதம் பாதரசம் அது சம்பந் தமான அவுடதம் ஆகியவைகளாலுண்டான நாவின் வேக்காடு முதலியவைகள் தீரும்.

கருவிலிப்பழத்தை வாயில் வைத்துச் சூப்பி இஸ் பகோல் கோழையால் வாய் கொப்பளிக்கவேண்டும். இவ்விதம் ஒவ்வொருநாளும் இரண்டு மூன்று தடவை களாக மூன்றி நாட்கள் செய்யின் நாவெடிப்பு, நாப்பி ளப்பு, ஆகியவைகள் தீரும்.

## வாய் நீரொழுகல்.

இது பெரும்பான்மையும் தூக்கத்தில் ஓடி வழி ந்திருப்பது வழமை. இப்படியுண்டானல் இரைப்பை யின் அசுத்தசத்து, அல்லது, கொழுமைச்சத்து வெ ளிப்படுகிறதென கிதா ... வேண்டும்.

சிகிச்சை:—இரைப்பையிலுள்ள அசுத்தமானதை நீக்கி அதைச் சுத்திசெய்யவேண்டும். சிறு திரிபலாதி லேகியத்தை உபயோகிக்கலாம்.

கடுகைத் தூள்செய்து அதற்குச்சமன் சீனிச்சர்க்கரையைச்சேர்த்து வைத்துக் கொள்ளவும். வேளையொன்றுக்கு விராகனெடை-க, கறு, வீதம் சாப்பிட வேண்டும். இவ்விதம் தினம் 'இரண்டு மூன்றுதடவை உட்கொண்டுவரின், வாய் நீரொழுக்கு, வாய்நீர்வடிதல் முதலியவைகள் தீரும்.

வெகுநேரம் வரையில் பல் விளக்கிப் பல்லைச்சுத்திசெய்யவேண்டும்; இவ்விதம் வழமையாகத் தொடர்ந்தேற்றியாய்ச் செய்துவந்தால், வாய் நீரொழுக்கு, வாய் நீர்வடிதல் ஆகியவை தீரும்.

காசினிவிதைச்சூரணம், ஒருபங்கு, கரியுப்புத்தூள் காற்பங்கு, இவ்விரண்டையு மிஸ்ரமித்து வேளையொன்றுக்கு க-கறு. விராகனெடையாக உட்கொண்டுவந்தால், வாய்நீரொழுக்கு, வாய் நீர்வடிதல் ஆகியவை தீரும்.

றூமிமஸ்தகி ஜவாரிஷ்.

றூமிமஸ்தகிச் சூரணம் விராகனெடை-கஐ. சர்க்கரை பலம்-எ.

செய்முறை:—சர்க்கரையைப்பாகு காய்ச்சிப்பாகு பதத்திற் கீழிரக்கிக் குளிர ஆறினபின் மேற்படி றூமி மஸ்தகிச் சூரணத்தை அதிற்போட்டு நன்றாய் மிஸ்ரமித்துப் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்திக்கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-உவ-உ௧. சிறுபிள்ளைகளுக்கு விராகனெடை-௧.

உபயோகம்:—வாய் நீரொழுகல், வாய்நீர்வடிதல் முதலியவைகள் தீரும்.

சரக்கொன்றைப் புளியை வாயிலடக்கிக்கொண்டு அதன் இரசத்தை விழுங்கிவர, தொண்டை வீக்கந் தீரும்.

புளிப்புக் கம்பளிப்பூச்சிப் பழச்சாறு ஒரு பங்கு, சீனிசருக்கரை ஒருபங்கு. இவ்விரண்டையுஞ் சேர்த்துக் காய்ச்சிப்பாகுபதத்தில் இறக்கிச் சீஷாவில் வைத்துக்கொள்ளவும். இதில் வேளை-க-க்கு விராகனெடை-உ, அல்லது, ௩-வீதம் பானம் செய்துவர, தொண்டை வீக்கம், உண்ணாக்கு வீக்கம், அண்ணத்தின் வீக்கம், நாவின்வீக்கம் ஆகியவைகள் தீரும்.

மணித்தக்காளியிலை, கருஞ்சீரகம், மிளகு, அப்பளாகாரம், இவை வகை-க-க்குச் சமனெடை. இவற்றிற்கொஞ்சம் சலம்வார்த்து மைபோலரைத்துத் தொண்டையின்மேற் பற்றிட, தொண்டை வீக்கம், கழுத்துவீக்கம் ஆகியவைகள் தீரும்.

விரலிமஞ்சள், ரேவல்சீனி இவை வகை-க-க்கு விராகனெடை-௫, அபின் குன்றிமணிபெடை-௩. முன்னிரண்டையுந் தூளாக்கி வஸ்திரகாயஞ்செய்து அபினையுஞ்சேர்த்துக் கொஞ்சம் வெந்நீர்விட்டு வெண்ணெய் போலரைத்துத் தொண்டைமீது பற்றிட, தொண்டை வீக்கம், தொண்டை நோவு ஆகியவைகள் தீரும்.

உலர்த்தின பாகற்காயைக் காடிஜலம் விட்டரைத்து அங்கு பற்றிடுவதினுலும் தொண்டை வீக்கம் குணமாகும்.

நவச்சாரத்தை ஜலத்திற் கரைத்துத் துணியில் நனைத்து வீக்கத்தின்மீது போடுவதினுலுங் குணமுண்டாகும்.

கோழியின் மலத்தைக் காடியிற் கரைத்துத் தொண்டையின் மீது பற்றிடுவதினுலும் தொண்டை வீக்கங் குணமாகும்.

துவரம்பருப்பு, காவிமண், சந்தனம், கருஞ்சீரகம், காட்டுவாகைமரப்பட்டை, மிளகு, நற்சீரகம், பாகற்காய்விதை, இவை வகைக்குச் சமனெடை. இவற்றைக் காடிஜலம் விட்டு மைப்போலரைத்துக் கொதிக்கவைத்துத் தொண்டையிற் பற்றிடத் தொண்டைக்கட்டி, தொண்டைவீக்கம், தொண்டைநோவு, ஆகியவைகள் தீரும்.

ரேவல்சீனி, காவிக்கல், கருஞ்சீரகம், கடுக்காய்ப்பிஞ்சு, மஞ்சள், நெல்லிவற்றல், நாமக்கட்டி, இவைவகைக்குச் சமனெடை. இவையெல்லாவற்றையுமிடித்து வஸ்திரகாயஞ் செய்து வெந்நீரிற் குழைத்துத் தொண்டையிற் பற்றிடத் தொண்டைக்கட்டி, தொண்டைவீக்கம், தொண்டைநோவு ஆகியவைகள் தீரும்.

## உண்ணுக்கு வளர்ச்சி.

சிகிச்சை:—மாசக்காயைக் காடியில் இழைத்து ஆட்காட்டிவிரல் நுனியில் தடவிக்கொண்டு தொங்கிக் கொண்டிருக்கிற உண்ணாக்கை அந்தவிரலால் தூக்கிவி

டவேண்டும். இவ்விதம் தினம் இரண்டு மூன்றுதடவைகள் செய்துவரின் உண்ணுக்கு வளர்ச்சி நின்றுபோம்.

அடுப்புமண் (இதிற் சிவந்திருப்பதையும் கருத்திருப்பதையுஞ் சமமாக எடுத்துக்கொள்ள வேண்டியது) இதில் எட்டிலொரு பாகம் மிளகு. இவை யெல்லாவற்றையும் ஒன்ருகச் சேர்த்துப்பொடித்து வஸ்திரகாயஞ் செய்து தண்ணீரிற்குழைத்து ஆட்காட்டி நுனிவிரலில் தடவிக்கொண்டு உண்ணுக்கைத் தூக்கிவிட்டால், உண்ணுக்கு வளர்ச்சி நின்றுபோம்.

குங்குமத்தைத் தண்ணீரிற் குழைத்துக்கொண்டு மேற்கண்டவிதமாகச் செய்யின் உண்ணுக்கு வளர்ச்சி நின்றுபோம்.

குழந்தைகளுக்கு உண்ணுக்கு வளர்ச்சி கண்டால் பூங்காவியை, அல்லது, நாமக்கட்டியைச் காடிவிட்டுக் குழைத்துத் தலை யுச்சியிற் பற்றிட்டால், உண்ணுக்கு வளர்ச்சி நின்றுபோம்.

## குறிப்பு.

உண்ணுக்கு வளர்ச்சியானது எந்தச் சிகிச்சைக்கும் கட்டுப்படாமல் அதிகமாக வளர்ந்திருந்தால், தெரிந்தவர்கள் மூலம் கத்திரியால் அதைக் கத்திரித்து விடுவது சுலபமார்க்கம்.

## கன்னங்களின் வீக்கம்.

இதன் இலக்ஷணம்:—ஒரு கன்னம் அல்லது, இருகன்னங்களும் வீங்கி யிருப்பதேயாம். இதிற் சிலசம

யங்களில் அதிகவேதனை யிருப்பதுமுண்டு. சிலசமயங்களில் அதிக வேதனை யில்லாமற் சொற்பவேதனையாயிருப்பதுமுண்டு. இது கண்ணுக்கு புலப்படக்கூடியவியாதியாகையால் இதைப் பற்றிவிசேஷமா வெழுதுவது அனுவசியம்.

சிகிச்சை:—முள்ளிலவமரப்பட்டையை அல்லது, இலவ மரப்பட்டையை, அல்லது, கலியாணமுருக்கின் பட்டையைச் சிறு துண்டுகளாகத் துண்டித்து உலர்த்திச் சுட்டுக்கரியாக்கி எள்ளெண்ணெயிற்குழைத்து வீக்கத்தின்மீது பற்றிட்டுவர, மேற்படி கன்னவீக்கந்தீரும்.

யவைக்கோதுமை மா, அல்லது, கோதுமை மா, அல்லது, கேழ்வரகு மா, ஒருபங்கு, வெந்தயம் ஒருபங்கு. முன்னர் வெந்தயத்தை ஜலத்தில் மூன்றுமணிநேரம் ஊறவைத்து அம்மியில் வைத்தரைத்துப் பிறகு மேற்படி மாவையுஞ்சேர்த்து இரண்டும் நன்றாய் மிஸ்ரமிக்கும்படியாக அரைத்து வீக்கத்தின் மீதுபற்றிட மேற்படி கன்னவீக்கந்தீரும்.

## குரற் கம்முதல்.

இலக்ஷணம்:—கீச்சுக் குரலாய்ப்பேசுதல், சிலசமயங்களிற் பச்சைப் புண்ணைப்போல் நோவெடுத்தல் முதலியவைகளாம். இதுவும் இலகுவாய்த் தெரிந்துகொள்ளக்கூடிய வியாதியே. இது பீனிசத்தினாலும் இப்படி நேரிடுவதுண்டு. கபம் அதிகப்படுவதினாலும் இந்த வியாதி உண்டாவதுண்டு.

சிகிச்சை:—பீனிச சம்பந்தமாயுண்டாயிருந்தால், போஸ்துக்காய் (கசகசாத்தோல்,) ஓமம் இவைவகை-க-க்குப் பலம்-உ. இவ்விரண்டையும் காற்படி ஜலத்திற் போட்டு அரைக்காற்படியாகச் சுண்டவைத்த கஷாயத்தை வடிகட்டித் திப்பிநீக்கி வாய்கொப்பளிக்கவேண்டும்; இவ்விதம் தினம் இரண்டு, அல்லது, மூன்று தடவைகள் வியாதிக்குத் தகுந்தபடி சமயோசிதம்போல செய்துகொள்ளவேண்டும். ஒவ்வொரு தடவையும் புதிதுபுதிதாகச் சித்தப்படுத்திக்கொள்ளவும்வேண்டும். இவ்விதம் செய்வதால் பீனிசசம்பந்தமான குரற்கம்மல், கீச்சுக்குரல், தொண்டைக்கட்டு ஆகியவைகள் தீரும்.

கபசம்பந்தமான குரற் கம்மலாயிருந்தால், மருதோன்றிவிதை பலம்-க, இதனைச் சிதைத்துக் காற்படி ஜலத்திற்போட்டு அரைக்காற்படியாகச் சுண்டவைத்து வடிகட்டித் திப்பிநீக்கின கஷாயத்தை வாய்கொப்பளித்துவரத்தீரும்.

உலர்ந்த மருதோன்றியிலை, உலர்ந்த மருதோன்றிப்பூ, ஆகியவைகளிலொன்றை மேற்கண்ட விதமாகச் சித்தப்படுத்தி மேற்கண்ட விதமாகச் செய்துவரின்,கபசம்பந்தமான குரற்கம்மல் ரோகந்தீரும்.

இஞ்சியின் பெருந்துண்டையெடுத்து அதனைக்குடைந்து அதற்குள் அது கொள்ளும்படியான அளவு பெருங்காயத்தையும் உப்பையுஞ் சமபாகமாகச் சேர்த்தரைத்து இஞ்சித் துவாரத்திற்குட்செலுத்தி அதன்வாயிலும், இஞ்சித்துண்டை வைத்தடைத்துச் சரிப்படுத்தி அதன்மேல் ஒருதுணியைச் சுற்றி அதன்மேற் காலங்குலகனம்அரிசிமாவை, அல்லது, கோதுமைமாவைக்

குழைத்துப்பூசிக் கரிநெருப்பில் புதைக்கவேண்டும். இஞ்சிவெந்து சுகந்தவாசனை வரும்போது எடுத்துக்கவ ச்த்தைப்பிரித்து நீக்கி உள்மருந்துடன் கல்வத்திலிட் டுச் சிறுகச் சிறுகத் தேனைவார்த்து அரைத்து நான்கு குன்றியணியெடை வீதமுட்கொண்டுவர, குரற்கம்மல், குரற்கட்டு, கோழைக்கட்டு கபக்கட்டு முதலியவைகள் தீர்ந்து நல்லகுரலுண்டாகும்.

பெருங்காயம் குன்றிமணியெடை-உ, வீதம்நான் குமணிக் கொருதடவை யுட்கொண்டு அதன்மேற் கொ ஞ்சம் வெந்நீரைப் பானஞ்செய்யவேண்டும். இவ்விதம் செய்து வருவதால், கோழைக்கட்டு குரற்கம்மல் ஆகி யவை தீர்ந்து குரலோசை சீர்ப்படும்.

முள்ளங்கிவிதை (இதனை நுண்மையாக அரைத் துக் கொள்ளவேண்டும்.) இதில் ஒரு விராகனெடை வீதம், ஒருவிராகனெடை தேனிற் குழைத்துண்டுவர, குரற்கம்மல் தீர்ந்து குரலோசை சீர்ப்படும். இதனை வெந்நீரிலுங் குழைத்துச் சாப்பிடலாம்.

கடுக்காய் விதைப்பருப்பு, இந்துப்பு, அரிசித்திப் பிலிச் சூரணம், இவைவகை-க-க்குச் சமனெடை. இவ ற்றைக் கல்வத்திலிட்டு நல்லதேனைச் சிறுகச் சிறுகவார் த்து ஒருசாமமரைத்து முக்கால் ரூபா யெடையுள்ள மாத்திரைகள் செய்து உட்கொண்டுவர, குரற்கம்மல், குரற்கட்டு, கோழைக்கட்டு முதலியவை குணப்பட்டுக் குரலோசை சீர்ப்படும். ஆனால் சில தேகிகளுக்கு ஒரு ரூபா யெடைவீதம் இரண்டு வாரங்கள் கொடுக்க நேரி டும்.

வாலுளுவையரிசி, வசம்பைப் சுட்டசாம்பல், குராசானிமோமச்சூரணம், அரிசித்திப்பிலிச்சூரணம், கருஞ்சீரகச் சூரணம் இவை வகை-க-க்குச் சமனெடை. இவற்றைக் கல்வத்திலிட்டு நல்லதேனைச் சிறுகச் சிறுக விட்டு ஒருசாமமரைத்து ஒன்றேகால் விராகனெடையுள்ள மாத்திரைகளாகச்செய்து உட்கொண்டுவர, கபக்கட்டு, கோழைக்கட்டு ஆகியவைகள் தீர்ந்து குரலோசை சீர்ப்படும்.

கரும்புத்துண்டைத்தழலிலமுத்திவைத்து அரைப்பாகம் வெந்தபின் எடுத்துச் சீவித் துண்டித்து மென்று சாற்றை விழுங்கிவர வேண்டும். இவ்விதம் நாள் ஒன்றிற்கு இரண்டு மூன்று தடவைகள் செய்துவரின் தொண்டைக்கட்டு முதலியவை நீங்கி நல்ல குரலோசையு முண்டாகும்.

வால்மிளகை மென்று வாயிலடக்கிக்கொண்டு அதன் இரசத்தை விழுங்கிவர குரற்கம்மல், குரற்கட்டு ஆகியவைதீரும்.

மேற்றோல்போக்கின இஞ்சி பலம்-வ, பனைவெல்லம் பலம்-உ. இவற்றுள் இஞ்சியைக் கல்வத்தில்வைத்தரைத்துப் பிறகு வெல்லத்தையும் சேர்த்து ஒருமணிநேரம் அரைத்து ஒன்றரை விராகனெடையுள்ள மாத்திரைகளாகச்செய்து காலையில்மாத்திரம் ஒருவேளை ஒருமாத்திரை யுட்கொண்டு வரவேண்டும். இவ்விதம் சிலநாட்கள் தொடர்ச்சியாகச் செய்துவரின், தொண்டைக்கட்டு, குரற்கம்மல் ஆகியவை தீரும்.

புழுங்கலரிசி விராகனெடை-கஉ, மிளகு குன்றிமணியெடை-ச. இவ்விரண்டையுஞ் சேர்த்து மென்று

வாயிலடக்கிக்கொண்டு இதன்சாரத்தை விழுங்கிவரத் தொண்டைக்கம்மல் தீரும்.

நெல்லிமுள்ளிச்சூரணம் விராகனெடைக, கழுவிச்சுத்திசெய்த எள்ளு விராகனெடை-உ இவ்விரண்டையுஞ் சேர்த்துக் கல்வத்திலிட்டு மூன்றுவிராகனெடை தேனைச் சிறுகச் சிறுகவார்த்து அரைத்துக்குழைத்து உட்கொள்ளவேண்டும். இவ்விதமே ஒவ்வொருதடவையும் சித்தப்படுத்திக் கொள்ளவேண்டும். இதுஒருவேளைக்கான அளவாகையால், இந்தக்கணக்கின்படி இஷ்டமான வரையில் ஒருதடவையில் சித்தப்படுத்தியும்வைத்துக்கொள்ளலாம்.

## கண்டமாலை.

இது, வாதபித்த சிலேஷ்மங்களானவை மேதோதாதுவை அனுசரிப்பதனாலும், மாமிச தாதுவிருத்தியினாலும், கழுத்தின் நரம்புகளிலும், கண்களிலும், அக்குள்களிலும், அரைகளிலும் தேக நிறத்தைப்பெற்றுக்கெட்டிப்பட்டு மினுமினுத்து நெல்லிக்காய், சிறு கத்தரிக்காய்ப் பிரமாணத்தை யொத்துச் சிறிதும் பெரிதுவான கட்டிகளுண்டாகும். அவைகள் நாட்சென்றுபழுத்து உடைந்து நடுவில் குழிவிழுந்து பல பேதங்களாயிருக்கும். இவற்றுள் சிலது அற்பநோவுடன் உடைந்துசீழைச் சொரிவதும், சிலது நமைச்சலுடன் உஷ்ணத்தைத்தருவதும், சிலது கிளைத்துக்கொண்டே யிருப்பதும், சிலது நெடுநாட்சென்றுங் கரையாது வலுப்பதுமாயிருக்கும். இந்தரோகம் கண்டத்தைச் சுற்றிலும் மாலைபோற் பிறப்பதால் கண்டமாலை யெனப்பெயர் பெற்றது.

## அசாத்திய கண்டமாலை.

எந்தக் கண்டமாலைக் கட்டியாவது அறுகின்வே ரைப்போற் கிளைக்கிறதும் அடங்குகிறதுமா யிருந்து இதனால் சுரம், இருமல், வாந்தி, பீனசம், பக்கநோவு, தேகசுட்கம், என்னு மிக்குணங்கள் உண்டாகில் அசாத்தியமாகவே முடியும். இக்குணங்கள் இல்லாவிடில் சாத்தியமாம்.

சிகிச்சை;—இது கஷ்ட சாத்தியமாகு வியாதி. இதற்கு லிங்கம், பூரம் சம்பந்தமான அவுடதங்கள் விசேஷமாக உபயோகப்படத்தக்கது. ஆயினும் நமது அபிமானிகளின் உபயோகத்திற்காகச் சில சூக்ஷ்மமான முறைகளை யிங்கெழுதுவாம்.

இந்த வியாதிக்குச் சிகிச்சைக்கு ஆரம்பிக்கு முன் கபபேதியைக் கொடுத்து தேகத்திலுள்ள அசுத்த சத்துக்களைப் பக்குவப்படுத்தி வெளிப்படுத்த வேண்டும். அம்முறையிது:—

காசினிவேர், சோம்புவேர், கரபஸ் ஓமம், சீமைவிலாமிச்சம்வேர், சோம்பு (இச்சரக்குகள் ஒவ்வொன்றையும் நறுக்கிக் கொள்ளவும்) மயிர்ச்சிக்கி- இவை வகை - க - க்கு விராகனெடை-கஞ, மேற்றோல் நீக்கின அதிமதுரம் விராகனெடை-கவ, திராக்ஷப்பழம் கூ, உலர்ந்த சீமை அத்திப்பழம்-ரு, உஸ்துகுதூஸ் விராகனெடை-கஞ. இவற்றை இரவில் ஜலத்தில் ஊறவைத்துக் காலையில் அடுப்பில் வைத்துக்காய்ச்சி வடித்து குல்கந்து துலா-ச, அதிற்கரைத்து வடித்துச் சாப்பிடவும். இவ்விதம்-எ-நாள் சென்றபின் சீமைச் சிவ

ஷைவேர், மேற்றோல், உள்நரம்பு ஆகியவைகளை நீக்கிச் சுத்திசெய்தது விராகனெடை-கவ, காரிகியூன் விரா்கனெடை-௨, சூரத்து நிலஆவாரை துலா-க. மேற்கண்டகஷாயத்திற்போட்டு சரக்கொன்றைப்புளி துலா-உ. சருக்கரை துலா-௪, இவை எல்லாவற்றையும் கஷாயத்திற்கரைத்துவடித்து சிற்றாமணக்கெண்ணெய் துலா-க சேர்த்துச் சாப்பிடவும். பேதியாகும். தண்ணீருக்குப் பதில் சுடவைத்த சோம்புத்திராவகம் சாப்பிடலாம். பேதியாகாவிட்டால் ரூமிமஸ்தகி, சோம்பு, இவைவகை-க-க்கு விராகனெடை-௩. அரைத்துச்சருக்கரை சமனில் சோம்புத்திராவகத்துடன், அல்லது, வெந்நீருடன் சாப்பிடவும்.

பேதிக்குச் சாப்பிட்ட தினம் கறிசூப்பும், மாமிசபக்ஷணியல்லாதவர்கள் துவரம்பருப்பை வேகவைத்தெடுத்த தெளிநீர் ரசமும் சாப்பிட்டு மத்தியானம் கிச்சடிச்சாதம் சாப்பிடவும்.

மறுநாள் குல்கந்து துலா-௨, சோம்புத்திராவகம் துலா-கூ-ல் கரைத்து வடித்து சப்ஜாவிதை விராகனெடை.க- அதிற்போட்டுச் சாப்பிடவும்.

மேற்கண்டவிதமாகச் சுத்திசெய்தபின் முள்ளங்கிவிதை விராகனெடை-ரு. இதனைக்கல்வத்தில் அல்லது, அம்மியில்வைத்துப் பொடித்து வெள்ளாட்டுப்பாலைச் சிறுகச் சிறுகவிட்டு வெண்ணெய்போலரைத்து அந்த இரணத்தின்மீது பூசிவர இரணம் ஆறிக்குணமுண்டாகும். பிரதிதினமும் இரண்டு மூன்று தடவைகள் பூசி வருவது உத்தமம். ஒவ்வொரு தடவையும் பு

த்து புதிதாகச் சித்தப்படுத்திக் கொள்வதும் சிரேஷ்டம்.

நறுவிலிக்கொழுந்து செல்லத்தக்கஅளவு. இதனை அனலில் வெதுப்பி இளஞ்சூட்டுடன் கண்டமாலையின் மீது வைத்து துணியிற் பட்டிகட்டவேண்டும். மூன்று மணிநேரஞ் சென்றபின்பு இதனை யவிழ்த்தெறிந்துவிட்டு மறுபடியு முன்போல் மேற்படி கொழுந்தைவதக்கி முன்போல்வைத்துக் கட்டவேண்டும். இவ்விதம் கூடுமானவரையில மூன்றுமணிக்கொரு தடவைபாக பகலிலும் இரவின்முன்னேரத்திலும் கட்டவேண்டியது. நித்திரையில் கட்டவேண்டுமென்னும் அவசியமில்லை. இவ்விதம் தொடர்ச்சியாகப் பத்துநாட்கள் செய்யின் கண்டமாலைரோகம் தீரும்.

தகரையிலை ஒருபங்கு; மிளகு காற்பங்கு; இவ்விரண்டையும் சேர்த்து வெண்ணெய்போலரைத்து மேற்படி கட்டிகளின்மீது, அல்லது, இரணத்தின் மீது பூசிவர, கட்டி உடைந்து அல்லது, இரணம் ஆறிமேற்படி ரோகம் குணமாகும்.

கடுகை ஜலம்வார்த்து வெண்ணெய்போலரைத்து இரண்டுபங்கெடை வெண்ணெயிற் குழைத்து மேற்படி கட்டிகளின்மீது பூசிவருவதினுல் கட்டி கரைந்துபோகும். அல்லது, கட்டி உடைந்துபோனுல் முன்சொல்லி யிருப்பவைகளில் ஒன்றை இரணத்தின்மீது போட்டால் இரணம் ஆறிக்குணமாகி விடும்.

கண்டமாலை.

இந்த வியாதியிலும் முன்சொல்லி யிருக்கிறபடி பேதிக்குக்கொடுத்துத் துர்நீர்களைச் சுத்திசெய்தபின்பு

பின்காணும் அவுடதத்தை அந்தவியாதிமூற்றும்சௌக்கியமடைகிறவனாயில் உபயோகித்துவர வேண்டும். அவையாவன:—

பிஞ்சுக்கடுக்காயையிடித்துவஸ்திரகாயஞ்செய்தசூரணம் விராகனெடை-க, இதனை இராக்காலங்களிற் படுக்கப்போகும்போது சாப்பிடவேண்டும். பகற்காலங்களில்சாப்பிடவேண்டியதில்லை. இராக்காலங்களில் மாத்திரம்ஒவ்வொருவேளை சாப்பிட்டாற்போதுமானது. ஆனல்வியாதிகுணப்படுகிறவரையில்இடையில்விட்டுவிடாமல் தொடர்ச்சியாகச் சாப்பிட்டுவரவேண்டும். இதனை உபயோகிக்கும்போது பின்காணும் பிளாஸ்திரியையும் கட்டிகள் இரணங்கள், ஆகியவைகளின் மீது போட்டுவரவும் வேண்டும். அந்தப்பிளாஸ்திரி யீது:—

மைசாக்ஷி விராகனெடை-க, மிளகுச் சூரணம் விராகனெடை-ஒ, இவ்விரண்டையுங் கல்வத்திலிட்டுச் சீமைக்காடியைச் சிறுகச் சிறுகவிட்டு ஒரு சாமமரைத்து வெண்ணெய்போலானபின் சிமிழில் வைத்துக்கொண்டு துணியில் தடவிமேலே போட்டுவரவேண்டும். மேற்கண்டபடி உள்ளுக்கு அந்த மருந்தைச் சாப்பிட்டு இந்தப்பிளாஸ்திரியையும் மேலுக்குஉபயோகித்துவந்தால், நாற்பது நாளைக்குள் மேற்கண்ட வியாதிகடவுளினது கிருபையால் தீர்ந்துபோகும்.

மசூரிப்பருப்பு, கொத்துமல்லி விதை இவை வகை-க-க்குச் சமனெடை. இவ்விரண்டையும் ஜலத்திற்போட்டு வேகவைத்துப் பருப்பு நன்ருய் வெந்தபதத்தில் இரண்டையும் அம்மியில் வைத்து வெண்ணெய்போலரைத்து எடுத்து அடையாகச்செய்து கண்டமா

லக்கட்டி, கண்டமாலை இரணம், ஆகியவைகளின்மீது வைத்து, அதன்மேல் வெற்றிலையை வைத்துத்துணி யாற் கட்டிவிடவேண்டும். இவ்விதம் பகலில் ஒருதட வையும் அப்போதைக்கப்போது புதிதாகச்செய்து கட் டவேண்டும். இப்படித் தொடர்ச்சியாகச்செய்து வந்தா ல், கடவுளினது கிருபையால் மேற்படி ரோகந்தீ ரும்.

மேற்றேல் சீவின சுக்குச்சூரணம் விராகனெ டை-க, கொள்ளுமாவு விராகனெடை-ரு. இவ்விரண் டையு மிஸ்ரமித்துப் பசுவின் கோமயத்தைவிட்டுக் கு ழைத்துக் கழிபோற்கிண்டி மேற்படி கண்டமாலை, கண் டமாலைக்கட்டி, கண்டமாலைரணம் ஆகியவைகளின்மீது பூசிவரக்குணமுண்டாகும்.

வாதுமைப்பிசின் தூள், ரு-பங்கு, ஓமச்சூரணம் உ-பங்கு, இவ்விரண்டையு மிஸ்ரமித்து கொத்துமல் லிக் கீரைச்சாற்றை விட்டுக்குழைத்துக் கண்டமாலைக் கட்டி, கண்டமாலை இரணம் ஆகியவைகளின் மீது பூசிவரக் குணமுண்டாகும்.

ஆட்டின் தொடையின் சப்பை யெலும்பை இரு பது விராட்டி யடுக்கி அதன்மேல் அந்த எலும்பை வைத்து மேலும் இருபது விராட்டியை யடுக்கிப் புட ம்போட்டு ஆறினபின்னெடுக்கப் பற்பமாயிருக்கும். அ ந்தப்பற்பம் விராகனெடை-உ, வீதம் காலையில் ஒரு வேளையும், மாலையில் ஒருவேளையும் தேன், நெய் முத லிய அனுபானங்களில் அனுபானித்து உட்கொள்ள வேண்டும். இந்தப்படி ஒருவாரம் செய்துவந்தால் மேற் படி ரோகந்தீரும். இந்த ஒருவாரத்திற்குள் வியாதிகு

ணப்படாவிட்டால், இடையில் ஒருவாரம்விட்டு மறு வாரம் முன்போல் ஆரம்பித்துச் சாப்பிடவும். இவ் விதம் இடையில் ஒவ்வொருவாரம் விட்டு விட்டு நாலைந்து வாரங்கள் செய்தால் மேற்கண்ட வியாதி குணமாம்.

மதன காமாக்ஷி மரப்பட்டை, கட்டை ஆகியவைகளை யிடித்து வஸ்திரகாயஞ்செய்த சூரணத்தை வெந்நீரிற் குழைத்து மேலே தடவிவர, மேற்கண்டரோகத் குணமாம்.

மாட்டுக்கொம்பு, மாட்டுக்குளம்பு ஆகியவைகளைச் சுட்டுக் கரியாக்கி அவற்றைத் தூள்செய்து பசுவின்நெய்யிற்குழைத்து மேற்படி கட்டி முதலியவைகளின்மீது பூசிவர, மேற்கண்டரோகங் குணமாம்.

உகா இலையைப்பசுவின் மூத்திரம் விட்டரைத்து, மேற்படி கட்டி, புண் ஆகியவைகளின் மீதுவைத்து அதன்மேல் வெற்றிலையைவைத்துக் கட்டவேண்டும். இவ்விதம் தொடர்ச்சியாகச் செய்துவரின், மேற்கண்ட ரோகம் தீரும்.

சிவகரந்தைப்பூ, அல்லது, கொட்டைக் கரந்தைப்பூ, விராகனெடை-௬. இதனை அரையாழாக்கு ஜலத்தில் இரவில் ஊறவைத்துக் காலையிற் பிசைந்து வடிகட்டின ஊறற் கஷாயத்தைப் பானஞ்செய்யவேண்டும். இவ்விதம் காலையில் ஒவ்வொருவேளை மாத்திரமாக, முப்பது, அல்லது, நாற்பதுநாட் பானஞ் செய்துவரின், மேற்கண்டரோகம் தீரும்.

காட்டுவாகை விதைச்சூரணம் ஒருபங்கு, தேன் இரண்டுபங்கு. இவ்விரண்டையு மிஸ்ரமித்து ஒருபானை யிற்போட்டு அதன் வாய்க்குமண் தாலம்போட்டுச் சந் தில்லாமல் உழுந்து மாவால் ஏழுசீலைமண் செய்து கடு வெயிலில் ஏழுநாள் வைக்கவேண்டும். எட்டாம்நாளெ டுத்துக் கவசத்தைப்பிரித்து அந்த அவுடதத்தை பெடு த்துப்பீங்கான் பாத்திரத்தில் வைத்துக்கொள்ளவும். காலையில் ஒருவேளை அல்லது காலைமாலை யிரண்டுவே ளையுமாக வேளை-க-க்கு மூன்று விராகனெடை வீதம் உட்கொண்டுவரவேண்டும். புளி, வாயுபதார்த்தம், கரப் பான் பதார்த்தப் ஆகியவைகளை நீக்கிவிடவேண்டும் இவ்விதம் தொடர்ச்சியாகச் சிலநாட்கள் செய்துவரின், கண்டமாலைரோகம் வேரற்று நிர்மூலமாகிவிடும்.

## குறிப்பு.

இந்த அவுடதமானது சகிக்கக்கூடாத மகாதுர்க் கந்தம் நாறும்.) ஆனல் கண்டமாலைரோகத்தை நிர்மூல மாக்குவதில் ஒப்பற்றது. இவ்வித துர்நாற்றமுள்ள அ வுடதத்தில் மகா ரோகமாகிய கண்டமாலைரோகத்தை நிர்மூலமாக்குஞ் சக்தியைக்கடவுள் உண்டாக்கியிருப்ப துகடவுளின் சக்தியும், மகிமையும் செவ்வனே புலப் படுகிறது. அதாவது உலகத்திலுள்ளள எல்லாவஸ்துக் களும் மனிதனுடைய உபபோகத்திற்காகவே சிருஷ்டி க்கப்பட்டிருக்கின்றன வென்பதே.

யவைக்கோதுமையை மாவாக்கி அதிற் காடியை ச்சேர்த்துக் களியாகக் கிண்டிக் கண்டமாலைக் கட்டி கண்டமாலைரணம் ஆகியவைகளின் மீதுவைத்துக்கட் டிவர வியாதியைமீற விடாது சாந்திசெய்யும்.

ஆட்டுக்கொம்பை முன் சொல்லியிருக்கிற மாட்டுக்கொம்புப் பற்பத்தைப்போலச்செய்து வெண்மையானதாக எடுத்து வைத்துக்கொள்ளவும். இதில் இரண்டு கிராகனெடை பற்பத்தைக் காலை போஜனத்துடன் சாப்பிடவேண்டும். பதினாலுநாட்கள் இவ்விதம் செய்யின், மேற்படி வியாதி குணமாகும். ஆனால், உப்பு, புளி முதலியவை ஒன்றுமாகாது. அரிசியுடன் பச்சைப்பயற்றம் பருப்பைச் சேர்த்துப்பாலில் பொங்கிச்சாப்பிடவேண்டும். கொஞ்சம் சருக்கரையைச் சேர்த்துக்கொள்ளலாம். அதிகத் தித்திப்பு ஆகாது.

யவைக்கோதுமை மா, ஆளிவிதை மா, புறா எச்சம் இம்மூன்றும் சமனெடையாக எடுத்துக் காடிவிட்டு வெண்ணெய்போலரைத்து மேற்படி கட்டி, இரணமுதலியவைகளிற் பூசிவரக்குணமாம்.

கொத்துமல்லி விதை, யவைக்கோதுமை மா, இவ்விரண்டையும் ஜலம்வார்த்து வெண்ணெய்போலரைத்து மேற்படி வியாதின்மீது தொடர்ச்சியாய்த் தடவிவரக் குணமுண்டாகும்.

காட்டுவாகை மரப்பட்டை, மிளகு, கருஞ்சீரகம் கொத்துமல்லிவிதை, இவை யெல்லாஞ்சமனெடை. இவையெல்லாவற்றையும் அம்மியில் வைத்துக்காடி வார்த்து மைபோலரைத்து மேற்படி கட்டி முதலியவைகளின்மீது பூசுவதினாலுங் குணமுண்டாகும்.

ஆலம்பாலைக் கண்டமாலைக் கட்டிகளின்மீது தடவிவருவதினால் அக்கட்டிகள் கரைந்துப்போம்.

## தொண்டையில் அட்டை கடித்துக் கொள்ளுதல்.

அட்டையானது தொண்டையிற் சில சமயங்களில்கடித்துக் கொண்டிருப்பதால், அதிக அருவருப்பு, தொண்டையிலேதேனும் விழுங்கக் கூடாமையாயிருத்தல் முதலிய பல தொந்தரவுகளுண்டாகும். இது அட்டை மிருந்துள்ள ஜலத்தைப்பானஞ்செய்ய நேரிடுவதாலும், வேறு வகைகளாலும் அட்டையானது வாய்க்குட்செல்லநேரிடும்போது தொண்டையிற் கடித்துக்கொள்ளும்.

சிகிச்சை:-கறியுப்பை, அல்லது, நவச்சாரத்தைக் காடியிற்கரைத்துத் தொண்டையிற் படும்படியாக அண்ணாந்து வாய்கொப்பளிக்க அட்டை வெளிப்பட்டுப் போம்.

கெந்தகத்தைச் சுங்கானில்வைத்து அதன்மீது நெருப்பைவைத்து வாயாலிழுத்துப் புகைப்பிடிக்க அட்டை வெளிப்பட்டுப்போம். ஒருவேளை வெளிப்படாமல் வயிற்றிற்குள் போய்விட்டால், அதை வாந்திசெய்து வெளிப்படுத்திவிடவேண்டும். வாந்தியிலும் வெளிப்படாவிட்டால், பேதிக்குச் சாப்பிட்டால் மலத்துடன் வெளிப்பட்டுப்போம்.

கருப்பு மண்ணைத்துணியில் முடிந்து வாயில்வைத்துக்கொண்டிருந்தால், மண் வாசனைக்காக அட்டையானது அந்தக் காடிவாயிலிருந்து வெளிப்பட்டுப்போகும்.

கடுகு இரண்டு பங்கு, காடி எட்டுப்பங்கு, கடுகை மைபோலரைத்துக் காடியிற்கரைத்து அண்ணாந்து

வாய் கொப்பளித்துத் தொண்டையிற் போம்படி செய்ய, உடனே மேற்படி அட்டை புறப்பட்டுப்போம்.

கடுகு, கருஞ்சீரகம் இவையிரண்டும் வகைக்குச் சமனெடை. இவற்றை மைப்போலப்பொடித்து வஸ்திரகாயஞ்செய்து, அல்லது, தெள்ளி மூக்கில் ஆக்கிராணஞ்செய்யக் குணமுண்டாகும்.

கண்டத்திப்பிலித் துண்டை வாயிலடக்கிக் கொண்டிருக்க, இந்த வாசனையிற் பிரியப்பட்டு அட்டை வெளிவந்துவிடும்.

## சுவாச ரோகம்.

இலக்ஷணம்;—திணரித் திணரி மூச்சுவருதல். மார்பிலும் விலாப் பக்கங்களிலுங் குத்தல், இரண்டு நெரியிலும் கோவு என்னுமிக்குணங்களைச் சுவாசரோகமானது தனக்குப்பழைய ரூபமாகப் பெற்றிருக்கின்றது. இது அற்ப சுவாசரோகம்; மந்தாரகாசம் மகாசுவாசரோகம் முதலிய பலவகைகளுண்டு.

அசாத்திய சுவாசரோக லக்ஷணம்:—சுவாசரோகிக்கு, சுரம், வாந்தி, தாகம், பேதி, வீக்கம் என்னுமிக்குணங்கள் கண்டால் அசாத்தியமென நிதானிக்கவேண்டியது.

இந்த ரோகமானது பெரும்பான்மையும் முதுமையில் கபாதிக்கத்தினு லுண்டாகிறது. நீடித்த வியாதிகளில் இதுவுமொன்று. ஆகையால் இதைப்பற்றி அஜாக்கிரதையாயிராமல் அடிக்கடி கபத்தைப் பக்குவப்படுத்தும் அவுடதங்களை உபயோகித்துக் கபபேதியையுங் கொடுத்துக்கபத்தைச் சுத்திசெய்துகொண்டேயி

க்கவேண்டியது. கபத்தைப் பக்குவப்படுத்து முறைகள், கபபேதிமுறைகள் ஆகியவைகளெல்லாம் நமது யூனானி வைத்திய தாதுவிருத்தி போதினி இரண்டாம் பாகத்தில் விபரமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. சுவாசரோகமுதலிய கபரோகங்களின் சிகிச்சைகளெல்லாம் நமது கபமருத்துமஞ்சரியில் சொல்லப்பட்டிருக்கின்றன அவசியமானவர்கள் அக்கிரந்தங்களைப் பார்த்துக்கொள்ளலாம். ஆயினும் நமது அபிமானிகளின் உபயோகத்திற்காக அந்த வியாதிக்கான சிலசூக்ஷ்ம முறைகளையும் இங்கெழுதுவாம்.

## சுவாச ரோக மாத்திரை.

புங்கங்கொட்டை விதைப்பருப்பு, அரிசித்திப்பிலிச்சூரணம், இவை யிரண்டும் வகை-௧-க்குச் சமனெடை, இஞ்சிச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி யிரண்டையுங் கல்வத்திலிட்டு இஞ்சிச்சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு ஒருசாமமரைத்து மிளகுப் பிரமாணம் மாத்திரைகளாகச்செய்து நிழலிலுலர்த்திக் கொள்ளவும்.

பிரமாணம்:—மாத்திரைகள்-௨, ௩. இதனைக்காலையில் ஒருவேளை உட்கொண்டு வந்தால் போதுமானது. வியாதி கடினமாயிருந்தால் மாலையிலும், அவசியமான நேரங்களிலு முபயோகிக்கலாம்.

உபயோகம்:—மேற்கண்ட சுவாசரோகவகைகள் தீரும்.

## மேற்படி மாத்திரை (வேறு)

விரலிமஞ்சள் தூள், கடுகு, சச்சிக்காரம், இவை வகை-௧-க்கு நான்கு பங்கு, பனைவெல்லம் பதினெட்டுப்பங்கு.

செய்முறை:—முன்னர் கடுகைக் கல்வத்திலிட்டு நன்றாய்ப் பொடித்துப் பிறகு மற்ற இரண்டையுஞ்சேர்த்து நன்றாய் மிஸ்ரமிக்கும் படியாக அரைத்து வெல்லத்தைச் சிறுகச் சிறுகச்சேர்த்து அரைத்து கால்விராகனெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—மாத்திரை-க-உ.

உபயோகம்:—மேற்படி மாத்திரையைக் காலையில் ஒன்றும் மாலையின் ஒன்றுமாக, நாற்பதுநாட்கள் உட்கொண்டுவரச் சுவாசகாச ரோகந்தீரும்.

பத்தியம்:—இந்த ரோகங்களுககு புளிப்பு, புளிப்பு வஸ்துக்கள், சீதள வஸ்துக்கள் ஆகியவைகளை நீக்கிவைப்பது உத்தமம்.

மூடு கிழிஞ்சில்களை உவர் மண்ணைக்கரைத்த ஜலத்திற்போட்டுக் காய்ச்சி நன்றாய் இரண்டுமூன்று கொதிவந்தபின் இறக்கி நன்றாய்த் தேய்த்துக்கழுவி, ஈரமில்லாம லுலாத்திக் கிழிஞ்சல்களுக்குத் தகுந்தபடி விராட்டியிற் புடமிட்டெடுத்தால், நீறிப்போயிருக்கும். இதனைக் கல்வத்திற்பொடித்து வஸ்திரகாயஞ் செய்த தூளைக்கல்வத்திலிட்டு இஞ்சிச்சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு ஒருசாமமரைத்துக் கடலைப்பிரமாணமுள்ள மாத்திரைகளாகச்செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள் வேண்டும்.

பிரமாணம்:—மாத்திரைகள்-க-உ-ங. தேனில் அல்லது, இஞ்சிச்சாற்றில், அல்லது, துளசிச்சாற்றில் அநுபானித்துக் கொள்ளவேண்டும்.

உபயோகம்:—சுவாச ரோகவகைகள் தீரும்.

மாத்திரை (வேறு)

எருக்கின்பூ மொட்டு (இது வெள்ளெருக்கின் பூ மொட்டா யிருந்தால் மிகவும் சிரேஷ்டம்) இரண்டு பங்கு, அரிசித்திப்பிலிச்சூரணம் ஒருபங்கு. இந்துப்புத் தூள் ஒருபங்கு.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் கல்வத்திலிட்டு மைபோலாகிற வகையிலரைத்துக் கால் விராகனெடை யுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்திச் சீஷாவில் வைத்துக் கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க. பலமான தேகியாயிருந்து வியாதியும் பலமானதாயிருந்தால் இரண்டுமாத்திரை வரையில் உபயோகிக்கலாம்.

அனுபானம்:—தேன், அதிமதுரக்கஷாயம், அளசிச்சாறு, சன்னராஷ்டக்கஷாயம், முதலிய கபஹரிக் கஷாயங்களாம்.

உபயோகம்:—மேற்படி சுவாசரோக வகைகள் தீரும்.

பத்தியம்:—புளிப்பு, புளிப்பு வஸ்துக்கள், சீதள வஸ்துக்கள் ஆகியவைகளை நீக்கவேண்டியது.

மாத்திரை (வேறு)

அதிகப் பருமனில்லாததும் அதிகச் சிறிய தல்லாததுமான நடுத்தர எருக்கிலை-க, (இது வெள்ளருக்கிலையாயிருந்தால் மிகவுஞ்சிரேஷ்டம்) மிளகு இருபத்தைந்து.

செய்முறை:—மிளகைக் கல்வத்திலிட்டு நுண்ணி ய பொடியாகுமட்டு மரைத்துப் பிறகு எருக்கிலையைச் சேர்த்து இரண்டும் வெண்ணெய் போலாகிற வரை யிலரைத்து, மிளகுப் பிரமாண மாத்திரைகளாகச் செய்து, நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ள வேண் டும்.

பிரமாணம்:—பெரியவர்களுக்கு மாத்திரை ரு-மு தல்-எ, சிறுவர்களுக்கு க-முதல்-உ.

அனுபானம்:—தேன், துளசிச்சாறு, அதிமதுரக் கஷாயம், கடுக்காய்க்கஷாயம் முதலியவைகளாம்.

உபயோகம்:—மேற்கண்ட சுவாசரோக வகைகள் தீரும்.

## சுவாசரோக மாத்திரை.

அரிசித்திப்பிலிச்சூரணம், மிளகுச்சூரணம், இ வை வகை-க-க்கு விராகனெடை-க, கர்க்கடக சிங் கிச் சூரணம் விராகனெடை-ந, சத்திச்சாரம் விராக னெடை-வ, அபினி குன்றிமணியெடை-ச, இஞ்சிச் சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—எல்லாவற்றையும் ஒன்றாகக் கல் வத்திற்சேர்த்து இஞ்சிச்சாற்றைச் சிறுகச் சிறுகவிட்டு ஒருசாமமரைத்து அ-குன்றிமணி யெடையுள்ள மா த்திரைகளாகச்செய்து வைத்துக் கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க. கஉ.

அனுபானம்:—இஞ்சிச்சாறு, சுக்குக் கஷாயம் ஆகியவைகளாம்.

உபயோகம்:—சுவாசரோக வகைகள்தீரும்.

## குறிப்பு.

இஞ்சிச்சாறு, அகப்படாத சமயங்களில் ரு-விராகனெடை மேற்றோல் சீவிய சுக்குச் சூரணத்தைச்சேர்த்து சுக்குக்கஷாயத்தை அல்லது தண்ணீரைவிட்டு அரைத்து மேற்கண்டபடி மாத்திரைகள் செய்து கொள்ளலாம்.

## மேற்படி மாத்திரை (வேறு)

மூசாம்பரம்; வெண்ணிறமாயுள்ள சத்திச்சாரம் அல்லது, சுத்திசெய்த பூநீறு, மிளகுச்சூரணம், மஞ்சட்சூரணம் இவை வகை-க-க்கு விராகனெடை-க, சோற்றுக் கற்றாழைச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி சரக்குகளைக் கல்வத்திற்போட்டு மேற்படி கற்றாழைச் சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு ஒரு சாமமரைத்து அ-குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச்செய்து நிழலில் உலர்த்தியெடுத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—மாத்திரை-க, கஉ. இதனையுட்கொண்டு அதன்மேல் கொஞ்சம் வெந்நீரைப் பானம் செய்யவேண்டும்.

அனுபானம்:—முலைப்பால், தேன், அதிமதுரக் கஷாயம், அதிமதுரப்பாலை ஊறவைத்துக் கரைத்த பசுவின்பால், அல்லது, முலைப்பால் முதலியவைகளாம்.

உபயோகம்:——மேற்கண்ட சுவாச ரோகம் தீரும்.

### மேற்படி மாத்திரை (வேறு)

நீலம் (இது அவுரிச்சத்து. கட்டி கட்டியாகக் கடையில் விற்கப்படுகிறது.) சுக்காங்கீரைக் கொழுந்து, இவை வகை-க-க்கு விராகனெடை-உ, வாலுழுவையரிசிச்சூரணம் விராகனெடை-வ, தண்ணீர் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—எல்லாவற்றையுங் கல்வத்திற்போட்டுச் சேர்த்தரைத்துத் தண்ணீரைச் சிறுகச் சிறுக வார்த்து ஒருசாமமரைத்து ஒன்றரைக் குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்திச் சீஷாவிற் பத்திரப்படுத்தவேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க, உ.

அநுபானம்:—தேன், சுக்குக்கஷாயம், இஞ்சிச்சாறு, ஆகியவைகளாம். இதனைக் காலை மாலை யிரண்டு வேளையும் மேற்கண்ட பிரமாணப்படி உபயோகிக்க வேண்டியது.

உபயோகம்:—மேற்கண்ட சுவாசரோகங்கள் தீரும்.

பத்தியம்:—புளி, புளிப்புச் சேர்ந்த பதார்த்தம் ஆகியவைகளை நீக்கவேண்டியது. நெய் சேர்த்துச் சமைத்த பதார்த்தங்களை அதிகமாக உபயோகித்துவர வேண்டியது.

### மேற்படி மாத்திரை (வேறு)

அக்கிராகாரச்சூரணம், மிளகுச்சூரணம், உலர்த்தின மாதுளை மரப்பட்டைச்சூரணம், அஜீமோதி ஓமச்சூரணம், மூங்கில் இலையை யெரித்த சாம்பல், கண்ட

ங்கத்திரி வேர்ச்சூரணம், கருவேலமரப்பட்டைச் சூரணம், சச்சிக்காரம், அல்லது, சுத்திசெய்த பூரீறு, இந்துப்பு, கெந்தியுப்பு, இவை வகை-க-க்கு விராகனெடை-க, அபின் விராகனெடை-உ, இஞ்சிசசாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இவை யெல்லாவற்றையுங் கல்வத்திலிட்டுப் பத்து நிமிஷம் நேரம் வரையில் ஒன்றுப் அரைத்துக்கலந்து பிறகு இஞ்சிச்சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து ஒன்றரைக் குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச்செய்து நிழலில் உலர்த்திக்கொள்ள வேணடும்.

பிரமாணம்:—மாத்திரை-க. இதனை வாயிலடக்கிக்கொண்டு இதன் சாரத்தை விழுங்கிக்கொண்டிருக்கவேண்டும்.

உபயோகம்:—சுவாசரோகம், கப சம்பந்தமான இருமல் ரோகம் ஆகியவைகள் தீரும்.

## மேற்படி மாத்திரை (வேறு)

கரியபோளம், வெள்ளைப்போளம், பொரித்தவெண்காரம்; இவற்றின் தூள் வகை-க-க்கு விராகனெடை-க. இஞ்சிச்சாறு, அல்லது, வெந்நீர் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்கண்ட சரக்குகளைக் கல்வத்திலிட்டு இஞ்சிச்சாற்றை, அல்லது வெந்நீரைச் சிறுகச் சிறுகவார்த்து ஒரு சாமமரைத்து ஒரு குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச்செய்து நிழலிலுலர்த்திப் பத்திரப்படுத்தவேண்டும்.

பிரமாணம்:--மாத்திரை-க, உ. இதனை மேற்கண்ட அளவாகக் காலை மாலை யிரண்டுவேளையும் உபயோகித்து வரவேண்டும்.

அனுபானம்:--இஞ்சிச்சாறு, தேன், சுக்குக்கஷாயம், முதலியவைகளாம்.

உபயோகம்:--சுவாசரோக வகைகள் தீரும்.

## மேற்படி மாத்திரை (வேறு)

அரிசித்திப்பிலி விராகனெடை-ரு, (இதனை ஒரு ஈரத்துணியிற் சுருட்டி உமிக்காந்தலுக்குள் வைத்து ஒருமணி நேரஞ்சென்றபின்பு எடுத்துத் தூள்செய்து கொள்ளவேண்டும்.) இந்தத் தூள் விராகனெடை-கஐ, அக்கிராகாரச்சூரணம் விராகனெடை-கஐ; பொரித்த வெண்காரத் தூள், கருஞ்சீரகச்சூரணம், மிளகுச்சூரணம் இவை வகை-க-க்கு விராகனெடை-க; சோற்றுக் கற்றாழைச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:--எல்லாச் சரக்குகளையும் கல்வத்திலிட்டு மேற்படி சாற்றைச் சிறுகச சிறுகவிட்டு இரண்டு சாமமரைத்துக் குன்றிமணிப் பிரமாணமுள்ள மாத்திரைகளாகச்செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

பிரமாணம்:--மாத்திரை-க-உ.

அனுபானம்:--தேன், அதிமதுரக்கஷாயம், கடுக்காய்க் கஷாய முதலியவைகளாம்.

உபயோகம்:-- சுவாசகாசரோகம், பெருமூச்சு, சிறுமூச்சு, கஷ்டசுவாசம் ஆகியவைகள் தீரும்.

## மேற்படி மாத்திரை (வேறு)

மூங்கிலிலையைச் சுட்டசாம்பல், வலம்புரிக்காய்ச் சூரணம், கண்டத்திப்பிலிச் சூரணம், கர்க்கடக சிங்கிச் சூரணம், மிளகுச்சூரணம், அரிசித்திப்பிலிச்சூரணம், சிறு தேக்குச்சூரணம், கண்டங்கத்திரி விதை (இதனை வறுத்துச் சூரணம் செய்துகொள்ள வேண்டும்.) இவை வகை-க-க்கு விராகனெடை-உ; இஞ்சிச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:--இவை யெல்லாவற்றையுங் கல்வத்திலிட்டு அரைத்துக்கலந்து பிறகு இஞ்சிச்சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து உ-சாமநேரம் அரைத்து எட்டுக்குன்றிமணி யெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து, நிழலில் உலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

பிரமாணம்:--மாத்திரை க-உ.

அனுபானம்:--தேன், இஞ்சிச்சாறு; சுக்குக்கஷாயம் முதலியவைகளாம்.

உபயோகம்:—சுவாசரோகம், இரைப்பு முதலியவைகள் தீரும்.

## சுவாசரோகச் சூரணம்.

வெள்ளைப்போளம், நெய் இவை வகை-க-க்குப் பலம்-க, இவ்விரண்டையும் அரைத்து ஒரு சட்டியிற் போட்டு மேற்சட்டி மூடிச்சீலைமண் செய்து சிறிய அடுப்பின்மீது வைத்து இரண்டுசாமம் எரிக்கவேண்டும். அல்லது, முன்னரைத்ததை ஓட்டிலிட்டு மேலோடு மூடி மூன்று சீலைமண்செய்து கரியை நெருப்பாக்கி அங்

தக்கரிநெருப்பில் புதைத்து மேலுங் கரிநெருப்பைப் போட்டு விசிறியால் விசிறிக் கொண்டிருக்கவேண்டும். இவ்விதம் முக்கால் ஒருமணிநேரம் செய்து கொண்டிருந்து பிறகு அப்படியே விட்டு விட்டு ஒருமணிநேரஞ் சென்று எடுத்தால்போளமானது பற்பமாகியிருக்கும். இதனையெடுத்து அவசியமானுலரைத்துச் சீஷாவில் வைத்துக்கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—குன்றிமணியெடை. க-கஉ.

அனுபானம்:—இப்பற்பத்தை வெற்றிலையில் வைத்து மென்று தின்னவேண்டும். சக்தியுள்ளவர்கள் இந்தப் பற்பத்துக்குச் சமனெடை கஸ்தூரியைச் சம்பந்தப்படுத்தி மேற்கண்ட விதமாகச் சாப்பிடவேண்டும் இன்னும் இந்தப் பற்பத்திற்குச் சமனெடை இலவங்கத் தூளைச்சேர்த்து வெற்றிலையில் வைத்தும் உட்கொள்ளலாம்.

உபயோகம்:—சுவாசரோகம், இரைப்பு, கஷ்டசுவாசம் முதலியவைகளாம்.

எருக்கம் பழுப்பு (இது மரத்திற் பழுத்துத் தானே விழுந்ததாக இருக்கவேண்டும்.) பலம்-உச. சுண்ணும்புநீறு (இதனை வஸ்திரகாயஞ்செய்து கற்கரடு முதலியவைகளை நீக்கி யெடுத்துக்கொள்ள வேண்டும்.) கறியுப்பு, இவை வகை - க - க்கு விராகனெடை-உ.

செய்முறை:--கறியுப்பையுஞ் சுண்ணும்பையும் கொஞ்சம் ஜலம் வார்த்தரைத்துப் போதுமான ஜலத்திற் குழைத்துக்கொண்டு எருக்கின் பழுப்புகளை அதி

ற்போட்டுப் புரட்டி வெயிலில் வைத்துலர்த்தி ஈரமில் லாமல் நன்றாயுலர்ந்தபின்பு ஒருமண் ஓட்டிற்போட்டு அடுப்பேற்றி எரித்து வறுத்து வந்தால் இலையெல்லாந் தீய்ந்து கருகிச் சாம்பலாகிப்போம். வன்றாய் வெளுத் துப் பற்பமாகிறவரையில் எரித்து வறுத்தெடுத்துக் கல்வத்திலிட்டுப் பொடித்து வஸ்திரகாயஞ்செய்து சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:--குன்றிமணியெடை-க-உ.

அனுபானம்:--தேன், சருக்கரை, கசகசா ஷர்பத் து, வாதுமை ஷர்பத் முதலியவைகளாம்.

உபயோகம்:--இருமல், சுவாசரோகங்கள் ஆகிய வைகள் தீரும்.

பத்தியம்:--பால், தயிர், மோர், புளி, புளிப்பு வஸ்துக்கள் ஆகியவைகளை நீக்கவேண்டும். நெய்யை ப் பதார்த்தங்களிற் சேர்த்துச் சமைத்துக்கொள்ளலா ம். துவரம்பருப்பு, பச்சைப்பயறு, கத்தரிப்பிஞ்சு, மு ருங்கைப்பிஞ்சு, அவரைப்பிஞ்சு, தூதுவளங்காய் வற் றல், சுண்டைவற்றல், நுணுக்காய் வற்றல், மணத் தக்காளி வற்றல், முதலியவைகளாம். மாமிசபக்ஷணிக ளானால் வெள்ளாட்டிறைச்சி, காடை, புறாக்குஞ்சு, கில க்காடை, உள்ளான் முதலியவைகளாம். சுதும்பு, கிழ ங்கான் முதலியவைகளும். விரால், குறவை, முதலிய பத்திய மீன்களும் ஆகும்.

வேறு உசிதமுறை.

எருக்கின்பூ மொட்டு அல்லது கொழுந்து குன் றிமணியெடை-அ. இதனை ஒரு வெற்றிலையில் வைத்து

மென்று சாப்பிட்டு விடவேண்டும். இவ்விதம் காலையில் மாத்திரம் மூன்றுநாட்கள் சாப்பிடவேண்டும். நான்காம் நாள் கஉ. குன்றிமணியெடை முன்போற் சாப்பிடவேண்டியது. பிறகு ஐந்தாம்நாள் கங-குன்றிமணியெடை சாப்பிடவேண்டும். இவ்விதம் பிரதிதினமும் அல்லது, ஒன்றைவிட்டொருநாள் நவ்வாலு குன்றிமணியெடை அதிகப்படுத்திச் சாப்பிடவேண்டும். இவ்விதம் நாற்பது நாட்கள் செய்யின் கஷ்டமான சுவாசரோகவகைகள், கஷ்டசுவாசம், மேற்சுவாசம் மந்தாரகாசம் ஆகியவைகள் தீரும்.

பத்தியம்:--புளி, புளிப்பு வஸ்துக்கள், முதலியவைகளை நீக்கவேண்டியது. இன்னும் மேற்கண்ட முறையிற்சொல்லியிருக்கிற பத்தியத்தையும் கவனித்துவரவேண்டியது. இந்தப்பிரயோகத்தைக் குளிர்காலத்தில் மாத்திரம் செய்யவேண்டும். வெயிற்காலங்களிற் செய்யலாகாது.

வேறு.

மலராத எருக்கின்பூமொட்டு தேவையான அளவு, மிளகு செல்தத்தக்க அளவு, உப்பு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—ஒவ்வொரு மொட்டிலும் ஒவ்வொரு மிளகை வைத்து ஒரு கிறுகலயத்தில் அடுக்கி அதன்மேல் உப்பைக்கொட்டி அவை தெரியாமல் மறைத்து விடவேண்டும். உப்பை அதிகமாய்ப் போடாமல் மிதமாகப்போட்டு மறைத்து விடவேண்டும். கலயத்தின் வாயை ஒருமண் தாலத்தால் மூடிச் சீலைமண் செய்து கவசத்தின் எட்டுப்பங்கெடை விராட்டியிற்

புடமிட்டு நன்றாய்க் குளிர ஆறினபின் எடுத்துக் கல்வத்திற் பொடித்துச் சீஷாவிற் பத்திரப்படுத்திக்கொள்ளவும்.

பிரமாணம்:--குன்றிமணியெடை-௪, ௫, இதனை வெற்றிலையில் வைத்து மென்று சாப்பிடவேண்டும், அல்லது தேனிற் குழைத்துச் சாப்பிடவேண்டும்.

உபயோகம்:--சுவாசகாசம், இருமல், அஜீரணம், ஆகியவைகள் தீரும்.

வேறு.

ஏலரிசி, வாலுளுவை யரிசி இவ்விரண்டையும் சேர்த்து மென்று விழுங்கிவிடவேண்டும். இவ்விதம் காலையில் ஒருவேளை, அல்லது, காலைமாலையிரண்டுவேளையும் தொடர்ச்சியாகச் செய்துவரின் கப சம்பந்தமான சுவாசரோகம், கஷ்டசுவாசம் முதலியவைகள் தீரும்.

வேறு.

இஞ்சிச்சாறு, வெங்காயச்சாறு, வெள்ளைப்பூண்டிதழ்ச்சாறு, சோற்றுக்கற்றாழைச்சாறு, தேன் இவையெல்லாம் வகையொன்றுக்குச் சமனெடை. இவைகள் எல்லாவற்றையும் ஒன்றாய்க்கலந்து சீஷாவில்விட்டுவாய்பந்தனஞ்செய்து பூமிக்குள் புதைத்துவிட வேண்டும். மூன்றுநாட்சென்று நான்காம்நாள்எடுத்து சுமார் ஒன்றரை விராகனெடை முதல் இரண்டு விராகனெடைவரையில் பிரதிதினமும் காலைமாலை யிரண்டுவேளையும் பானஞ்செய்துவரவேண்டும். இவ்விதம் தொடர்ச்சியாகச்செய்து வந்தால் சுவாசரோகங்கள் குணமாகும்.

## வேறு.

வெள்ளைச் சாட்டரணைவேர்ப்பட்டை குன்றிமணி யெடை-உ, வெற்றிலையில் வைத்து மென்று சாப்பிட வேண்டும். இவ்விதம் காலைமாலை யிரண்டுவேளையும் சாப்பிட்டுவந்தால், சுவாசரோகம்குணமாகும்.

## வேறு.

புகையிலையை வறுத்தெரித்து வெள்ளையான சாம்பலாக்கி-உ-குன்றிமணியெடை வெற்றிலையில் வைத்து மென்று சாப்பிடவேண்டும். இவ்விதம் தொடர்ச்சியாகச்செய்துவந்தால், சுவாசரோகம் குணமாகும்.

பத்தியம்:—வாயு பதார்த்தங்கள், புளிப்பு வஸ்துக்கள் ஆகியவைகளைத் தவிர்க்கவேண்டும்.

## வேறு.

புகையிலையைத் தேவையான அளவு எரித்துவெண்ணிறமான சாம்பலாக்கி எடுத்துக்கொள்ளவும். இதனை இதற்கிரண்டு பங்கு தண்ணீரிற்போட்டுமூன்றுநாள் வைக்கவேண்டும். பிரதிதினமும் இதனை மூன்று நான்கு தடவைகள் குச்சியால் நன்றாய்க்கலக்கிவிட்டும் வரவும் வேண்டும். நான்காம்நாள் தெளிவையிறுத்துக்காய்ச்சினால் உப்பாகிப்போம். இதனைச் சீஷாவில் வைத்துக்கொண்டு-உ-குன்றிமணியெடை உப்பை ஒருவெற்றிலையில்வைத்து மென்று சாப்பிடவேண்டும். இவ்விதம் காலையில் ஒருவேளை, அல்லது, காலை மாலை யிரண்டுவேளை சாப்பிட்டுவரவும். இதனால்சுவாச காசரோகம் இரைப்பு முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—புளிப்பு வஸ்துக்கள், வாயு பதார்த்தங்கள் ஆகியவைகளை நீக்கவும்.

வேறு.

இலைக்கள்ளிக்கட்டை [சுமார்-உ-அங்குலம். இதைத்துவாரமிட்டு இது கொள்ளுகிறவரையில் படிக்காரத்துண்டுகளைப்போட்டு நிறைத்து அதன்வாயை மேற்படி கள்ளிச்சக்கையால் அடைத்து அதன்மேல் மூன்றுசீலை மண்செய்து-ரு-பலமுள்ள பத்துவிராட்டியிற் புடமிட்டுஆறினபின் படிக்காரத்தையெடுத்துக் கல்வத்திலிட்டுப்பொடித்துச் சீஷாவிற் பத்திரப்படுத்திக் கொள்ளவேண்டும். இதில் இரண்டு குன்றுமணியெடையுள்ள பற்பத்தை வெற்றிலையில்வைத்து மென்று சாப்பிட்டுவரவேண்டும். இவ்விதம் செய்துவந்தால், சுவாசரோகம் முதலியவைகள் தீரும்.

வேறு.

இஸ்பகோல்விதை அவரவர்களின் உள்ளங்கை கொண்டஅளவு. இதனை வாயிற்போட்டு அதக்கிவிழுங்கிவிடவேண்டும். மென்று தின்னலாகாது. இவ்விதம் காலை மாலை யிரண்டுவேளையுமாக மூன்று, அல்லது, நான்குமாதங்கள் செய்துவரின் உஷ்ண சம்பந்தமான சுவாசகாசமாயினுஞ்சரி, சீதள சம்பந்தசுவாசகாசமாயினுஞ்சரி, வேறெவ்விதமாயினுஞ்சரி, தீர்ந்துபோகும்.

வேறு.

நூலிழையின் பூச்சியின் நூலாம்படையை அதில் வேறு வஸ்துக்களில்லாமற் சுத்திசெய்து வெல்லத்துக்குள் பொதிந்து சாப்பிடவேண்டும். இவ்விதம் காலைமாலையிரண்டுவேளையும் சாப்பிட்டுவர சுவாசரோகம் ஆகி

பவைகள்தீரும். ஆனால் இது அதிகஉஷ்ணம்செய்யும். வியாதியைக்கண்டிப்பதில் நல்லகுணமுடையதாயிருக்கிறது. அதாவது சுவாசரோகம், மந்தாரகாசம் ஆகியவைகள் தீரும்.

கோதுமையரிசி விராகனெடை-௧௫, எருக்கம்பால்விராகனெடை-௬௰, இவ்விரண்டையும் ஒருபீங்கான் பாத்திரத்திற்போட்டு நன்றாய்ப்புரட்டிக்கொடுத்து மூன்றுநாள் வைக்கவேண்டும். ஒவ்வொருநாளும் இரண்டு மூன்றுதடவைகள் நன்றாய்ப்புரட்டிக்கொடுத்து பாலின்ஈரம் சுவறினபின் மண்மோட்டிற்போட்டு மேலோடு மூடி-௫, சீலமண்செய்து கவசத்தின் ஏழுபங்கெடை விராட்டியிற் புடமிட்டு ஆறினபின்னெடுத்துக் கல்வத்திற்பொடித்து வஸ்திரகாயஞ்செய்து அந்தச்சூரணத்தின் இரண்டுபங்கெடை பனைவெல்லத்தைச்சேர்த்து அரைத்து ஒரு விராகனெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து வைத்துக் காலையில்மாத்திரம் ஒருவேளை ஒரு மாத்திரையை உட்கொண்டு வரவேண்டும்.

பத்தியம்:—புளி, புளிப்புப் பதார்த்தங்கள், வாயு பதார்த்தங்கள், ஸ்திரீ ஆகியவைகளை நீக்கவேண்டியது.

உபயோகம்:—கஷ்டசுவாச ரோகவகைகள், கஷ்டசுவாசம். மேற்சுவாசம், மந்தாரகாசம் ஆகியவைகள் தீரும்.

குறிப்பு.

மேற்கண்ட மருந்தைக் காரமானதாகவும் வேகமானதாகவும். செய்துகொள்ளவேண்டுமாயின் மேற்ப

டிபஸ்பத்திற்குச் சமனெடை பனைவெல்லத்தைச் சேர்த்தரைத்து மாத்திரைகளாகச் செய்துகொள்ளவேண்டும். தேகபலம், வியாதிபலம், தேகசுபாவம் முதலியவைகளுக்குத் தகுந்தபடி அவுடதங்களைச் சித்தப்படுத்திக்கொள்ளவேண்டியது சிகிச்சகர்களின் கடமையாகையால் சமயத்திற்குத் தகுந்தவிதமாகச் செய்துகொள்வார்களென நாம் நம்புகின்றோம்.

எருக்கு உப்பு குன்றிமணியெடை-௨, இதனை நெய், வெண்ணெய், தேன் முதலிய அனுபானங்களில்மத்தித்து உட்கொண்டுவர மார்பில் கட்டிக்கொண்டிருக்கிறசளி, கஷ்டசுவாசம், மந்தாரகாசம் ஆகியவைகள் தீரும்.

பத்தியம்:—முன்பாகத்திற் சொல்லியிருக்கப்பட்டவைகளேயாம்.

## எருக்கு உப்பு விபரம்.

தானேபழுத்துதிர்ந்த எருக்கம் பழுப்பானுல் உத்தமம். அப்படியகப்படாத காலங்களில் முற்றலான எருக்கிலையை உலர்த்தி ஈரமில்லாமற் சருகாயுலர்ந்த பின்பு கொளுத்திச் சாம்பலாக்கிக்கொள்ளவேண்டும். இவ்விதம் சித்தப்படுத்தின சாம்பல்படி-௧, சுத்தஜலம்படி-௨. சாம்பலை ஒரு பாத்திரத்திற்போட்டு அதில் இந்த நீரைவிட்டு மூன்றுமணிக்கொருதரம் நன்றாய்க்கலக்கிவிட்டுவரவும் வேண்டும். இவ்விதம் நாலைந்துதடவை கலக்கியானபின்பு-௧௨, மணிநேரம் கலக்காமல் விட்டுத்தெளியவைத்துத் தெளிவைபிறுத்து இரும்புச்சட்டியிலிட்டுக்காய்ச்சிக் குழம்புப்பதமானவுடன் பீங்கான் பாத்திர

த்தில்விட்டு வெயிலில்வைக்க உலர்ந்து உப்பாகிவிடும். இதுவே எருக்கின் உப்பாம்.

நாயுருவியுப்பு குன்றிமணியெடை-உ-ச, இதனை தேன், நெய், வெண்ணெய் முதலிய தகுந்த அனுபான ங்களில் மர்த்தித் துண்டுவர மார்ச்சளி, தொண்டைக்க ட்டு, கபக்கட்டு, கஷ்டசுவாசம், மந்தாரகாசம் ஆகிய வைகள் தீரும்.

பத்தியம்:—புளிப்பு, ஜலபதார்த்தங்கள், வாயுப தார்த்தங்கள் ஆகியவைகள் ஆகா.

## நாயுருவி உப்பு.

மேற்கண்ட எருக்கிலை யுப்பைப்போலவே சித்தப் படுத்திக்கொள்ளவேண்டும்.

திருகுகள்ளியுப்பு குன்றிமணியெடை-க, இதனை தேன், நெய், வெண்ணெப் ஆகியவைகளில் அனுபானி த்துண்ணவேண்டும். இதனை காலையில் ஒருவேளை மா த்திரம் உபயோகித்துவந்தால் போதுமானது. சூடான தேகிகளுக்கு இது அதிகம் பொருந்தாதாகையால் பரி காரமான அனுபானத்துடன்கொடுக்கலாம். அதாவது வாதுமைப்பருப்புடன் கற்கண்டைச் சேர்த்தரைத்து லேகியமாகவைத்துக்கொண்டு அதில் அனுபானித்துக் கொடுக்கலாம். அல்லது கீழ்க்காண்கிறபடி சித்தப்படுத் தின கசகசாக்ஷர்பத்தில் அனுபானித்துக்கொடுக்கலாம்.

பத்தியம்:—மேற்கண்டவைகளே யாம்.

உபயோகம்:—நாட்பட்ட கஷ்டசுவாசம், நாட்பட் ட மந்தாரகாசம், கோழைக்கட்டு, கபக்கட்டு முதலி யவைகள் தீரும்.

## திருகுகள்ளி யுப்பு.

மேற்சொல்லியிருக்கிற எருக்குப் பைப்போலவே இதனையும் சித்தப்படுத்திக் கொள்ளவேண்டும்

## கசகசா ஷர்பத்து.

கசகசா பலம்-க0, கசகசாத்தோல் பலம் - கஉ, சீனிச்சருக்கரை பலம்-ரு.

செய்முறை:—மேற்படி யிரண்டு சரக்குகளையும் உரலிற்போட்டு இடித்து நன்றாய்ச் சிதைத்து ஒருபிளா னல் துண்டில் தளரமுடிந்து ஈயம்பூசின தாம்பிரச்ச ட்டியில் வைத்து ஒருபடி ஜலத்தைவிட்டு அடுப்பேற் றிச் சிறுதீபாயெரித்து அந்த முடிப்பை ஒரு மரத்துடு ப்பால் நசுக்கிவரவும் வேண்டும். இவ்விதம் செய்துவ ருவதால் பால்போன்ற திரவமாகும். பிறகு முடிப்பை யெடுத்து நன்றாய்ப்பிழிந்து நீக்கிவிட்டு அந்தத்திரவ த்தை வேறுசட்டியில் விட்டுக் காய்ச்சிவந்தால் அந்தத் திரவத்தின்மீது பாலாடைபோல்வரும் நாமதையொ ன்றும் செய்யாமல் அப்படியேவிட்டு விட்டு மெதுவா க எரித்துவந்தால் ஏடானது முறிந்து துண்டு துண் டாகிவிடும். அதுதான் பக்குவம், அந்த நீரை பிளான ல் வஸ்திரத்தில் வடிகட்டித் திப்பியை நீக்கிவிட்டு ஜல த்தைமாத்திரம் எடுத்துக்கொள்ளவேண்டும். இந்தத் திப்பியை அழுத்திப்பிழியலாகாது. பிழிந்தால் அதிலு ள்ள எண்ணெயும் இந்த ஜலத்தில்வந்து சேர்ந்துவிடும் அப்படிச்சேருவதால் இருமல் அதிகப்பட ஹேதுவா கும். ஆகையால் இந்த விஷயத்தில் சற்று கவனமாயி ருக்கவேண்டும். முன்னெடுத்த நீரில் சர்க்கரையைக்

கலந்து பாகப்படி ஷர்பத்தாகச்செய்து கொள்ளவேண்டும்.

பிரமாணம்:--பலம்-க-கஉ.

உபயோகம்:--இருமல், கபம், கபக்கட்டு, தொண்டைவறட்சி, நித்திரையில்லாமை ஆகியவைகள் தீரும். இதனைத்தனியாகவும் உபயோகிக்கலாம். ஆனால்மேற்கண்ட அவுடதங்களுடன் அனுபானமாக உபயோகித்தால் சிறந்தகுணத்தைத்தரும்.

சுத்திசெய்து முளையிலை நீக்கின வாளப்பருப்பு தேவையான அளவு. இதனைச் சிறிய இரும்புக்கதிரில் குத்திக்கொண்டு சிற்றாமணக் கெண்ணெய் விளக்கில் பிடித்து நன்றாயெரிந்து கரிந்துபோன பதத்திலெடுத்துக் கல்வத்திற்பொடித்து வைத்துக்கொள்ளவேண்டும். தேகசுபாவத்திற்குத் தகுந்தபடி அரை அரிசியெடைமுதல் ஒரு அரிசியெடைவரையில் மேற்படி தூளை ஒரு வெற்றிலையில்வைத்து மென்று தின்னவேண்டும். இவ்விதம் காலையில் ஒவ்வொருவேளை உபயோகித்து வந்தால் இரண்டொருதடவை பேதியாகும். மலக்கட்டு கபக்கட்டு, கஷ்டசுவாசம், மந்தாரகாசம் ஆகியவைகள் நீங்கும்.

படிக்காரத்தைப் பொரித்த பொரி பலம்-க, சீனைக்கற்கண்டு பலம்-க. இரண்டையும் கல்வத்திற்சேர்த்தரைத்துத் தூளாக்கி வைத்துக்கொள்ளவேண்டும்.

பிரமாணம்:-- விராகனெடை-வ-முதல்-கஉ, வரையில் தனியாகவும் உபயோகிக்கலாம் தேன் முதலியவைகளில் அனுபானித்தும் உபயோகிக்கலாம்.

உபயோகம்:—கஷ்டசுவாசம், மந்தாரகாசம், மூச்சு முதலியவைகள் தீரும்.

கோதுமை வேண்டிய அளவு. இதனைப்புதுச்சட்டியில் வறுத்துக் கரியாக்கிக்கொள்ளவேண்டும். இதனையிடித்து வஸ்திரகாயஞ்செய்த சூரணத்துக்குச் சமனெடை விரலிமஞ்சளை யெடுத்துச் சிறுதுண்டுகளாகத்துண்டித்து ஓட்டில்வறுத்து இதனையுங் கரியாக்கிப்பொடித்து வஸ்திரகாயஞ்செய்து கொள்ளவேண்டும். பிறகு இரண்டு தூளையுங் கலந்தரைத்துச் சீஷாவில் வைத்துக்கொள்ளவேண்டும்.

இதில் ஆரம்பத்தில் சுமார் விராகனெடை - கவ. அளவுள்ள சூரணத்தையுட்கொண்டு அதன்மேல் வெந்நீரை அல்லது, கொஞ்சம் தண்ணீரைப் பானஞ்செய்ய வேண்டும். மறுநாட்காலையில் ௬-விராகனெடை அதிகப்படுத்தி முன்போல் உட்கொள்ளவேண்டும். இவ்விதம் இருபத்தொருநாள் கிரமேணுவாய் அதிகப்படுத்தி உபயோகித்துவந்தால் நாட்பட்ட கஷ்டசுவாசம் மந்தாரகாசம், கபக்கட்டு, கோழைக்கட்டு முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—சமயோசிதம்போல் ஏற்படுத்திக்கொள்ளவேண்டும்.

எருக்கம்பூமொட்டு, எருக்கம்வேர்ப்பட்டை, இவை வகை-க-க்கு பலம்-கஉ, ஓமச்சூரணம் பலம் - க, பனைவெல்லம் பலம்-ச, இவை யெல்லாவற்றையும் அம்மியில் வைத்தரைத்து முக்கால் ரூபாய் எடையுள்ள பில்லை மாத்திரைகளாகச்செய்து நிழலிலுலர்த்தி வைத்

துக்கொள்ளவேண்டும். காலையில் ஒருமாத்திரையை உட்கொண்டு அதன்மேற்கொஞ்சம் பாலைப்பானஞ்செய்யவேண்டும். இவ்விதம் செய்துவருவதால் சுவாசரோகம், கஷ்ட சுவாசரோகம் ஆகியவைகள் தீரும்.

சுத்திசெய்த நெல்லிக்காய்க் கெந்தகம்விராகனெடை-௩௫, தேன் விராகனெடை-௧0. மேற்படி கெந்தகத்தைக் கல்வத்திலிட்டுப் பொடித்துத் தேனைச் சிறுகச் சிறுகவார்த்து ஒருசாமம் வரையிலரைத்துக் குழம்புப் பதமாக ஒரு பீங்கான் பாத்திரத்தில் வழித்து வைத்துக்கொள்ளவேண்டும். ௨-விராகனெடை குழம்பை வெற்றிலையில் தடவி மடித்து மென்று தின்னவேண்டும். இவ்விதம் காலை மாலை யிரண்டுவேளையுமாக உபயோகித்துவந்தால் கஷ்டசுவாசம், சுவாசரோகம், இருமல்ரோகம் ஆகியவைகள் தீரும். இதை உபயோகிக்குப்போது பாலை அதிகமாக உபயோகித்துவரவேண்டியது.

கலைமான் கொம்பு தேவையான அளவு. இதனைச் சிறுதுண்டுகளாகப்பிளந்து கரிநெருப்பிலிட்டுச் சுட்டுக் கரியாக்கிப்பொடித்து வஸ்திரகாயஞ்செய்து சீஷாவிற் பத்திரப்படுத்தவேண்டும். ஆரம்பத்தில் முதல் நாள் ஒரு விராகனெடை மேற்படி சூரணத்தைத் தேனிற்குழைத்து உட்கொள்ளவேண்டும். மறுநாள் அரை விராகனெடை சூரணத்தைத் தேனிற் குழைத்து உட்கொள்ளவேண்டும். இவ்விதம் பிரதிதினமும் கால் கால் விராகனெடையாக மூன்று விராகனெடை வரையில் கிரமேணுவாய் அதிகப்படுத்தி வரவேண்டும். ஆ

னால் இதற்கிடையில் சூடு அதிகரித்தால் அந்தப் பிரமாணத்திலேயே நிறுத்திக்கொள்ள வேண்டியது. இவ்விதம் செய்துவந்தால் கஷ்ட சுவாசம், மந்தாரகாசம், இருமல் முதலியவை தீரும்.

அரிசித்திப்பிலிச்சூரணம் விராகனெடை-எ, உலர்த்தின எருக்கின் வேர்ப்பட்டை, உலர்த்தின முருங்கைப்பட்டை இவற்றின் தனித்தனிச் சூரணம் வகைக்கு விராகனெடை-௩, அப்ளாக்காரம் விராகனெடை-௧, அன்னபேதி விராகனெடை-௨, (இதனைச்சட்டியில் வறுத்து வெளுத்தபின்பு தூள்செய்து கொள்ள வேண்டும்.

செய்முறை:—எல்லாச் சூரணங்களையும் ஒன்றாய்ச் சேர்த்தரைத்துச் சீஷாவிற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-௧-௲.

அனுபானம்:—தேன், வாதுமை ஷர்பத் முதலியவைகளாம்.

உபயோகம்:—சுவாசகாசம், மந்தாரகாசம் கஷ்டசுவாசம் ஆகியவைகள் தீரும்.

ஆற்றுத் தும்மட்டி வேர்ப்பட்டை, அரிசித்திப்பிலி, பூநீறு இவை வகை-௧-க்குப் பலம்-௧. இவையெல்லாவற்றையும் சேர்த்திடித்து வஸ்திரகாயஞ்செய்து வைத்துக்கொண்டு காலையில் விராகனெடை-வ, மாலையில் விராகனெடை-வ, ஆகத் தேன் முதலியவைகளில் அனுபானித்து உட்கொண்டு வரவேண்டும். இவ்விதம் செய்துவருவதால் கஷ்டசுவாசம், கபக்கட்டு, இருமல், அஜீரணரோகம் ஆகியவைகள் தீரும்.

லாகூருப்பு தேவையான அளவு. இதனைமைபோல்பொடித்து வைத்துக்கொள்ளவேண்டும். இரவில் நித்திரைக்குப் போகும்போது அரை விராகனெடை மேற்படி சூரணத்தை உட்கொள்ளவேண்டும். மறுநாள் இரவில் ஒருவிராகனெடை தூளை உட்கொள்ளவேண்டும். இவ்விதம் ஒன்றரை விராகனெடை ஆகிறவரையில் பிரதிதினமும் அரை, விராகனெடையை யதிகப்படுத்தி வரவேண்டும். இந்த உப்பை உட்கொண்டபின்பு தண்ணீர் பானஞ்செய்யலாகாது. தாங்கக்கூடாததாகமாயிருந்தால் கொஞ்சம் இளவெந்நீரை உபயோகிக்கவேண்டும். இவ்விதம் செய்துவந்தால் கஷ்டசுவாசம், சுவாசகாசம், அஜீரணரோகம் ஆகியவைகள் தீரும்.

மஞ்சட்கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், நெல்லிமுள்ளி, மேற்றோல் சீவினசுக்கு, மிளகு, கற்கடகசிங்கி, ஜடாமாஞ்சில், கருப்புப்பு, லாகூருப்பு, பூநீறு இவைவகை-க-க்குப் பலம்-க, இவையெல்லாவற்றையும் ஒன்றாய்ச்சேர்த்திடித்து வஸ்திரகாயஞ்செய்து புட்டியில்வைத்துக்கொள்ளவேண்டும். காலையில் கால் விராகனெடையும் மாலையில் அரைவிராகனெடையுமாக உபயோகித்து வரவேண்டும். இதனையுபயோகிக்கும்போது நெய், பால்ஆகியவைகளை அதிகமாக உபயோகித்து வரவேண்டும்.

## புகையிலை ஷர்பத்து.

பச்சைப்புகையிலையை யிடித்துப்பிழிந்து வடிகட்டின சாறுபலம்-க0, பனைவெல்லம் பலம்-க0. மேற்படி

வெல்லத்தை மேற்படி சாற்றிற்கரைத்து அடுப்பேற்றிச் சிறுதீயாயெரித்து இரண்டுமூன்று கொதிவந்தபின் மறு படியும் வடிகட்டித் திப்பிநீக்கி மறுபடியும் அடுப்பேற்றி ப்பாகுபதமாக இறக்கிக்கொள்ளவேண்டும்.

பிரமாணம்:— விராகனெடை-க-கூ.

உபயோகம்:—கஷ்டசுவாசம், சுவாசகாசம் முதலி யவைகள்-ரு-நாளைக்குள் குணப்படும்.

## குறிப்பு.

இந்த ஷர்பத்தானது வாந்தி, பேதி ஆகியவைகளை யுண்டாகும் சுபாவமுடையதாகையால் துர்ப்பலப்பட் டதேகிகளுக்கு மிகவும் குறைந்த அளவாக உபயோகி க்கவேண்டியது. சுகுமார தேகிகளானால் அவர்களுக் கும் ஆரம்பத்தில் குறைந்த அளவாக ஏற்படுத்திக்கிரமே ணுவாய் அதிகப்படுத்தி வரவேண்டியது. நுரையீர லில் சேர்ந்திருக்கப்பட்ட கபத்தை வெளிப்படுத்துவத ற்கு மிகவும் ஏற்றமருந்து. ஆனால் இதில் மேற்கண்ட துர்க்குண மிருப்பதால் ஜாக்கிரதையாகவும் நிதானமா கவும் தேகசுபாவத்திற்குத் தகுந்தபடி யுபயோகித்தால் வெகுசீக்கிரத்தில் வியாதிநீங்கிச் சுகுணமுண்டாகும்.

ஆளிவிதை பலம்-க, மருதோன்றிவிதைபலம்-க, இவ்விரண்டையுமிடித்துச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து-உ-பலம் தேனிற்போட்டுக்குழைத்து வைத்து க்கொண்டு-ரு-விராகனெடை உட்கொண்டு வரவேண் டும். இவ்விதம் பிரதிதினமும் ஒவ்வொருநேரம் உட் கொண்டுவந்தால் கபக்கட்டு, கோழைக்கட்டு, கபசம்பந் தமான சுவாசகாசம் கஷ்டசுவாசம் ஆகியவைதீரும்.

மணம்வரும்படியாக வறுத்தஆளிவிதை பலம்-ரு, மிளகு பலம்-க, தேன் பலம்-காס, மேற்கண்ட இரண்டு சரக்குகளையும் இடித்துச்சூரணித்து வஸ்திரகாயஞ்செய்து தேனிற்குழைத்து வைத்துக்கொண்டு பிரதிதினமும் விராகனெடை-ரு-வீதமாக உட்கொண்டுவத்தால் மேற்கண்டரோகங்கள் தீரும்.

## குறிப்பு.

மேற்கண்டபாகத்தில் மிளகிற்குப்பதிலாக உலர்ந்தபொதினு இலையைச்சேர்த்தும் உபயோகிக்கலாம். மிளகை நீக்காமல் அதனுடன் கொஞ்சம்பொதினுவையும் சேர்த்துச் சித்தப்படுத்திக் கொள்ளலாம்.

ஆளிவிதைபலம்-உ௦, இதனை மணம்வரும்படியாகவறுத்து இடித்துச்சூரணித்து வஸ்திரகாயஞ்செய்து எ௦-பலம் தேனிற்குழைத்து வைத்துக்கொண்டு பிரதிதினமும் மூன்றுவிராகனெடை வீதம் உட்கொண்டு வருவதினாலும் மேற்கண்ட ரோகங்கள்தீரும்.

பொரித்தவெண்காரத்தூள் பலம்-க, தேன்பலம் ச, இவ்விரண்டையும் சேர்த்தரைத்து வைத்துக்கொண்டு விராகனெடை-க-க௦-வீதம் இராக்காலங்களில் நித்திரைக்குப்போகும்போது உட்கொண்டு வருவதால் மேற்சுவாசம், பெருமூச்சு ஆகியவைகள் தீரும்.

கார்போகரிசி, விரலிமஞ்சள், அரிசித்திப்பிலி, கஸ்தூரிமஞ்சள், மிளகு, கருப்புப்பு, கொடிவேலி வேர்ப்பட்டை, பொரித்தவெண்காரம் இவைவகை-க-க்கு விராகனெடை-உ, அப்ளாக்காரம் விராகனெடை-க.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் சேர்த்தி டித்து வஸ்திரகாயஞ்செய்து பீங்கான் பாத்திரத்திற் ப த்திரப்படுத்தவேண்டும்.

பிரமாணம்;—விராகனெடை-ந. கஉ.

அனுபானம்:—தேன், வெந்நீர்.

உபயோகம்:—கஷ்டசுவாசம், கபக்கட்டு, கோழை க்கட்டு, சுவாசகாசம், மந்தாரகாசம் ஆகியவைகள் தீ ரும்.

மஞ்சட் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், இவ்விரண்டையுந் தனித்தனி யிடித்தசூரணம் வகை-க.க்குப்பலம்-க, இவ்விரண்டையும் மிஸ்ரமித்து வைத் துக்கொண்டு வேளை-க-க்கு விராகனெடை-கஉ. அல் லது உ-ஆக உட்கொள்ளவேண்டும். இவ்விதம் காலை மாலை யிரண்டுவேளையும் உபயோகித்துவர சுவாசகா சம், கஷ்டசுவாசம், இருமல் ஆகியவைகள்தீரும்.

மேற்றோல் சீவினசுக்கு, கடுக்காய்ப்பிஞ்சு, சிறுதே க்கு, மருதம்பட்டை, அரிசித்திப்பிலி, சன்னராஷ்டம், இவைவகை-க-க்குப்பலம்-உ, இவையெல்லாவற்றையுமி டித்து வஸ்திரகாயஞ்செய்து வைத்துக்கொண்டுவேளை க-க்கு ஒரு விராகனெடை வீதம் தேனிற்குழைத்து உட்கொள்ளவேண்டும். இவ்விதம் காலைமாலை யிரண்டு வேளையும் உபயோகித்துவரக் கபக்கட்டு, கோழைக்க ட்டு, கஷ்டசுவாசம் ஆகியவைகள் தீரும்.

கற்கடசிங்கி, வெங்காயவிதை, சிறுதேக்கு, மருத ம்பட்டை, இவைவகை-க-க்குப்பலம்-உ, இவையெல்லா வற்றையும் ஒன்றாயிடித்து வஸ்திரகாயஞ்செய்து வே

னையொன்றுக்கு ஒரு விராகனெடை வீதமாகத் தேனி ற்குழைத்து உட்கொள்ளவேண்டும். இதை க்காலைமாலை யிரண்டுவேளையும் உபயோகித்துவர கஷ்டசுவாசம், கபக்கட்டு, கோழைக்கட்டு ஆகியவைகள் தீரும்.

கோஷ்டம் பலம்-உ, இதனையிடித்து வஸ்திரகாய ஞ்செய்துகொள்ளவும். அ-பலம் தேனைக்காய்ச்சி நுரை நீக்கி அதில் மேற்படி சூரணத்தைப்போட்டு மிஸ்ரமித் துவேளை-க-க்கு கஉ. விராகனெடை வீதம் காலைமாலை யிரண்டுவேளையும் உபயோகித்துவந்தால் கஷ்டசுவாச ம், இருமல் ஆகியவைகள்தீரும்.

ஆளிவிதை, வெந்தயம் வகை-க-க்கு விராகனெ டை கஅ, திராக்ஷப்பழம் விராகனெடை-கஉ. இவை களில ஐ, ஆழாக்கு ஜலத்தைவிட்டு மூன்றிலொருபா கமாகச் சுண்டவைத்து வடிகட்டின கஷாயத்தைப்பா னஞ்செய்யவேண்டும். இவ்விதம் காலைமாலை யிரண்டுவே ளையும் பானஞ்செய்துவருவதால் கஷ்டசுவாசம், இரும ல் ஆகியவைதீரும்.

பெருஅம்மான் பச்சரிசிவேர் விராகனெடை கூ, இதில், ஐ-ஆழாக்கு ஜலத்தைவார்த்து-வ-ஆழாக்காக ச்சுண்டவைத்துப் பானஞ்செய்யவேண்டும். இவ்விதம் காலைமாலை யிரண்டுவேளையும் செய்துவருவதினால் கஷ் டசுவாசம் கபரோகம் ஆகியவைதீரும்.

கரிசெங்காயம்; கொடிவேலி வேர்ப்பட்டை, மேற் றோல் சீவினசுக்கு; சிறுதேக்கு, கண்டங்கத்திரி சமூல ம், கருவேலம்பட்டை, இவைவகை-க-க்கு விராகனெ டை-கஉ, இவற்றைச் சிதைத்து முக்கால்ஆழாக்குஜல

த்தைவிட்டு கால் ஆழாக்காகச் சுண்டவைத்திறக்கி வடிகட்டிப்பானஞ்செய்யவேண்டும். இவ்விதம் காலைமாலையிரண்டுவேளைபானஞ்செய்துவர கபசம்பந்தமான இருமல் கபக்கட்டு, கோழைக்கட்டு ஆகியவைகள் தீரும்.

கண்டங்கத்திரிவேர், சீந்தில்வேர், சன்னராஷ்டம், அரிசித்திப்பிலி, சிறுதேக்கு, கற்கடசிங்கி, கிச்சிலிக்கிழங்கு இவை வகை-க-க்கு விராகனெடை-ரு. இவற்றைச் சிதைத்து-கஉ-ஆழாக்கு ஜலத்தை விட்டு நான்கிலொரு பாகமாகச்சுண்டவைத்து இறக்கி வடிகட்டிப் பானஞ்செய்யவேண்டும். இவ்விதம் செய்துவருவதால் கஷ்டசுவாசம், இருமல், கபக்கட்டு கோழைக்கட்டு ஆகியவைகள் தீரும்.

சுரைக்காய் விதைப்பருப்பு, பரங்கிக்காய் விதைப்பருப்பு, வெள்ளரி விதைப்பருப்பு, கெக்கரி விதைப்பருப்பு, கசகசா, கோதுமைச்சத்து இவை வகை-ந-குப் பலம்-க, சீனிச்சருக்கரை பலம்-டு.

செய்முறை:—மேற்படி வஸ்துக்களை யெல்லாம் அம்மியில் வைத்து மைபோலரைத்து ஜலத்திற்கரைத்துப் பாலெடுத்துக்கொள்ளவேண்டும். இந்தப் பாலில் மேற்படி சர்க்கரையைப் போட்டுக்கரைத்து அடுப்பேற்றிச் சிறுதீயாயெரித்து லேகிய பதமாகச்செய்துகொள்ளவேண்டும். வேளை ஒன்றுக்கு விராகனெடை-ந, வீதமாக உட்கொண்டுவர நுரைப்பையின் அழலை, அந்த அழலையினாலுண்டான இருமல், இரத்தங்கக்கல், ஆகியவைகள் தீரும்.

கோதுமைச்சத்து பலம்-உ௦, சீனிசர்க்கரை பலம்-எ௦, கசகசா பலம்-க, சுரைக்காய் விதைப்பருப்பு பலம்-க.

செய்முறை:--கசகசாவை அம்மியிலரைத்துப்பால் பிழிந்துகொள்ளவேண்டும். சுரைவிதைப் பருப்பை அம்மியிலரைத்துத் தனியே யெடுத்து வைத்துக்கொள்ளவேண்டும். கோதுமைச்சத்தை ஒன்றரை ஆழாக்கு ஜலத்திற்கரைத்து வடிகட்டிச் சர்க்கரையையும் சேர்த்து அடுப்பேற்றிச் சிறுதீபாயெரித்துப் பாகுபதமானவுடன் முன்சித்தப்படுத்தி வைத்திருக்கிற கசகசாப்பாலை அதிற்சேர்த்துக் காய்ச்சி அதில் முன் அரைத்து வைத்திருக்கிற சுரைக்காய்ப் பருப்பையும் சேர்த்துக்கடைந்து லேகிய பதமாயெடுத்துக்கொள்ளவேண்டும்.

பிரமாணம்:--மூன்று முதல் ஐந்து விராகனெடை.

உபயோகம்:--நுரையீரல் வியாதி, இரத்தங்கக்கல், இருமல், க்ஷயம்; காசம், சிறுகுடலின் ரணம், சுவாசாசயரணம் ஆகியவைகள் தீரும்.

குறிப்பு.

இதில் சுரைப்பருப்பு ஒருபலமென எழுதப்பட்டிருப்பினும் மூன்றுபலம் வரையிற் சேர்த்துக்கொள்ளலாம், சர்க்கரைக்குப்பதிலாக கற்கண்டு, மேனு, தரஞ்சபீன், பனப்ஷா ஷர்பத் ஆகியவைகளிலொன்றைச் சேர்த்துச் சித்தப்படுத்தினால் மிகவும் சிரேஷ்ட குணத்தைத் தருமென்பதை நாம் இங்கெடுத்துச் சொல்லவேண்டியதில்லை,

## இரத்தங்கக்கல்.

இந்த ரோகமானது சுவாசாசயத்தில் உண்டாகும் இரணசம்பந்தமாக அங்கிருந்து இரத்தம் வெளிப்படுகிறதற்கு இரத்தங்கக்கல், இரத்தரோகம், இரத்தவமனரோகம் எனப் பலநாமங்கள் வழங்கப்படுகிறது.

இலட்சணம்:--இருமல், சுரம், சமயாசமயங்களில் இரத்தம் விழுதல், நோயாளி நாளுக்குநாள் இளைத்துப்போதல் அல்லது க்ஷீணித்து வருதல் முதலியவைகளாம்.

இந்த வியாதியானது கஷ்டசாத்தியமானது. ஆயினும் இதற்குத் தகுந்த சிகிச்சை செய்தால் கடவுளினது கிருபையால் சௌக்கியமாகக்கூடும்.

### மாத்திரை.

கல்மதம், விஷகிவாரணி (زہر مہرہ) வெள்ளைக்காய்ச்சுக்கட்டி, வாதுமைப்பிசின், கருவேலம்பிசின், கோதுமைச்சத்து, கசகசா, துக்கிவிதை, பூங்காவி, இவை வகை-க-க்கு விராகனெடை-க, அபின் விராகனெடை-வ.

செய்முறை:—மேற்கண்ட சரக்குகளைத் தனித்தனியே பொடித்து சிறுத்தெடுத்துக் கல்வத்திலிட்டுக் கொஞ்சம் ஜலம்வார்த்து ஒருசாமமரைத்து அரை விராகனெடையுள்ள பில்லை மாத்திரைகளாகச் செய்து உலர்த்தி வைத்துக்கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க-கற-உ.

உபயோகம்:—இரத்தங்கக்கல், இரத்தரோகம், தேகம் இளைத்தல் முதலியவைகள் தீர்ந்து தேகபுஷ்டி யுண்டாகும்.

குறிப்பு.

சுரம் மூர்க்கமாயிருந்தால் இந்தமருந்தில் வ-வி ராகனெடை பச்சைக்கற்பூரத்தைச் சேர்த்து உப யோகித்தால் மிகவும் சிரேஷ்டமான குணத்தைத்த ரும்.

நல்ல தண்ணீர் நண்டைக் கை, கால்களை நீக்கி ஒரு கலயத்தில் நிறையப்போட்டுக் கலயத்தின் வாய்க் குச் சில்லிட்டு மூன்றுநான்கு சீலமண்செய்து கனத்த புடமிட்டு ஆறவிட்டெடுத்துக் கல்வத்திற்பொடித்து வ ஸ்திரகாயஞ்செய்து கொள்ளவேண்டும். இவ்விதம் சித் தப்படுத்தினதற்கு கற்கடக பாகச்சூரணமெனப் பெய ர். இந்தக் கற்கடக பாகச்சூரணம் விராகனெடை-க0, கோதுமைச்சத்து, வெள்ளைக்கசகசா, கருப்புக்கசகசா இவை வகை-க-க்கு விராகனெடை-க0, பருப்புக்கீ ரை விதை, மேற்புறணி நீக்கின அதிமதுரம், துத்தி விதை இவை வகை-க-க்கு விராகனெடை-ந, கருவே லம்பிசின், வாதுமைப்பிசின், இவை வகை-ந-க்கு வி ராகனெடை-க. இஸ்பகோல் விதைக்கோழை செல்ல த்தக்க அளவு.

செய்முறை:—இருவகைக் கசகசாவையும் அம்மி யில் வைத்துக்கொஞ்சம் ஜலம்வார்த்து வெண்ணெய் போல் அரைத்துக்கொள்ளவேண்டும். மற்ற சரக்குக ளுள் பொடித்துக்கொள்ள வேண்டியவைகளைப் பொ டித்தும் இடித்துச் சூரணஞ்செய்யவேண்டியவைகளை

யிடித்துச் சூரணஞ்செய்தும், கொள்ளவேண்டும். பிறகு எல்லாவற்றையும் ஒன்றாகச்சேர்த்துக் கல்வத்திலிட்டு மேற்படி யிஸ்பகோல் விதைக் கோழையைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டு சாமமரைத்து ஒவ்வொரு விராகனெடையுள்ள பில்லை மாத்திரைகளாகச்செய்து உலர்த்திக்கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-உ, ந.

அனுபானம்:— முலைப்பால்; பருப்புக்கீரை விதையை யரைத்துப் பிழிந்த இரசம், கொத்துமல்லிக்கீரைச்சாறு முதலியவைகளாம்.

உபயோகம்:—இரத்தவாந்தி, இரத்தங்கக்கல், நுரையீரல் ரணம், முதலியவைகள் நீங்கும்.

## இஸ்பகோல் விதைக் கோழை.

இஸ்பகோல் விதை பலம் - உ, இதனைப் பத்துபலம் ஜலத்திற்போட்டு மூன்றுமணிநேரம் ஊறவைத்துப் பிறகு நன்றாய்ப்பிசைந்து மெல்லிய வஸ்திரத்தில் வடிகட்டித் திப்பி நீக்கி வழவழப்பான ஜலத்தை யெடுத்துக்கொள்ளவும். இதுவே இஸ்பகோல் விதைக்கோழையாம்.

### வேறு.

(a) வெள்ளைக் கசகசா விராகனெடை-௧0, இஸ்பகோல் விதை விராகனெடை-ந, தண்ணீர் பலம்-௨0 சீனிச்சருக்கரை பலம்-எ.

(b) வெள்ளைக் கசகசா, கருவேலம்பிசின் இவை வகை-௧-க்கு விராகனெடை-௨.

செய்முறை:--(a) யிலுள்ள இரண்டு சரக்குகளையும் ஜலத்திற்போட்டு மூன்றிலொரு பாகமாகச் சுண்டவைத்திறக்கி இளஞ்சூட்டிற் பிசைந்து வடிகட்டித்திப் பிநீக்கின கஷாயத்தில் மேற்படி சர்க்கரையைக் கரைத்து அடுப்பேற்றிக் காய்ச்சிப் பாகுபதத்தில் (b) யிலுள்ள இரண்டு சரக்குகளையும் அம்மியில் வைத்து வெண்ணெய்போ லரைத்து மேற்படி பாகிற் கரைத்து நன்றாய் மிஸ்ரமிக்கும் படியாகத் துளாவியிறக்கிப் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-ரு, ௫. விபாதிக்குத் தகுந்தபடி தினம்-ரு, ௫, தடவைகள் உபயோகிக்கலாம.

உபயோகம்:--மேற்கண்ட ரோகங்கள் தீரும்.

வேறு.

சீமைப்பூங்காவி பலம்-க. இதனை ஜலத்திற் கரைத்து மேற்றெளிவை யிறுத்து நீக்கி அடியிற் படிந்திருப்பதை வெயிலிலுலர்த்தி யெடுத்துக்கொள்ளவேண்டும். இதில் ஒரு விராகனெடை சூரணத்தில் பசுவின் நெய், பசுவின் வெண்ணெய், பருப்புக்கீரை விதையை யரைத்துப் பிழிந்த இரசம், கொத்துமல்லிக்கீரைச்சாறு, வெள்ளரி விதையை யரைத்துப் பிழிந்தசாறு ஆகிய ஒன்றில் அனுபானித்துக்கொடுக்க இரத்தவாந்தி, இரத்தங்கக்கல், இரத்தகாசம், ஈரல்சூடு, ஈரல்அழலை முதலிய அநேக ரோகங்கள் தீரும்.

## அள்ளுரோகம்.

இது பாலர்களுக்கு நுரையீரலில் உண்டாகும் ஒருவகை ரோகம். இதற்கு *யார்ச்சளி, அள்ளுமாந்தம், கபரோகம் எனப் பல நாமங்களுண்டு.

இதன் லக்ஷணம்:—இது சுவாசக்குழலின் கிளைகளுக்குள் ஒட்டிக்கொண்டிருக்கிற சிலேஷ்ம ஜவ்விற்குக்காணுகிற தாபிதரோகம். இது குழந்தைகளுக்கு உண்டானல் அது விலாவைத்தூக்கி மூச்சுவிடும். அங்குள்ளபெரியகுழல்களில் தாபிதங்கண்டால் அதிலுள்ள சளி சுலபமாய் வெளிப்பட்டுவிடும். சிறிய குழல்களில் வியாதிகண்டால் அங்குள்ளசளியானது சுலபமாய் வெளிப்பட ஹேதுவில்லாமற்போவதால் சுவாசமானது உள்ளுக்குச்செல்லாமல் கஷ்டசுவாசமுண்டாகும். இவ்விதம் சிலநாள் தொடர்ச்சியாயிருந்தால் இரத்த சக்தி குறைந்து அசாத்தியமாய் முடிவதுமுண்டு. பெரியவர்களுக்கும் சிறுவர்களுக்கும் பெரும்பான்மையும் சிறுகுடல்களிற்றான் வியாதிகொள்வது வழமை; ஆகையால் சிகிச்சகர்கள் இந்தவிஷயத்தைக் கவனத்தில் வைத்துச் சிகிச்சை செய்யவேண்டியது.

இருமல். சுரம், நெஞ்சில்குறுகுறுவென்கிறசப்தம், மூச்சடைப்பு, நாடி தீவிரமாய் நடத்தல் முதலியவைகள் முக்கியமான லக்ஷணங்கள்.

இந்தவியாதியானது உஷ்ண சம்பந்தத்தினுலுண்டாயிருந்தால் இதில் அதிகபயத்திற்கு ஏதுவில்லை. ஏழுநாள்வரையில் தாபித முண்டாக்கும் வஸ்துக்களையும், காரமான வஸ்துக்களையும் உபயோகிக்கலாகாது.

சரக்கொன்றைப் புளி, சீமை யிலந்தைப்பழம், பனப்ராஷ, முதலியவைகளை யுபயோகித்து இலகு பேதியாகும்படியாகச் செய்யவேண்டியது.

கப சம்பந்தத்தினு லுண்டாவதுமுண்டு. இதில் சுரம், கஷ்டசுவாச முதலியவைகள் அதிகமாயிருக்கும். இதுமுன்சொன்னதைப் பார்க்கிலும் பயப்படத்தக்கது ஆகையால் இந்த வியாதியில் ஆலசியஞ் செய்யாமல் உடனே சிகிச்சை செய்யவேண்டியது.

கரியபோளம், சுத்திசெய்த நேர்வாளப்பருப்பு இவ்வகை-க-க்கு விராகனெடை-உ. ஈனுக்கிடாரியின் மூத்திரம் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி யிரண்டையும் ஒரு இரும்புச்சட்டியிற்போட்டு மேற்படி மூத்திரத்தைச் சிறுகச் சிறுகவார்த்து இரும்புக்கட்டப்பாறைபால் கடையவேண்டும். மூன்று அல்லது நான்குமணி நேரங்கடைந்து வெண்ணெய்போலரைபட்ட பின்பு பயறளவு மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க. உ, ந. வயதிற்குத்தகுந்தபடி மாத்திரைகளை யுபயோகிக்கவேண்டியது.

அனுபானம்:—அந்தக் குழந்தைக்கு ஊட்டுந்தாய்ப்பால், அது அகப்படாத பக்ஷத்தில் வேறுயாருடைய பாலிலேனும் அனுபானித்து உபயோகிக்கவும்.

உபயோகம்:—அள்ளுமாந்தம், மார்ச்சளி, கஷ்டசுவாசம் ஆகியவைகள் தீரும்.

பத்தியம்:—வியாதி கடினமாயிருந்தால் புளியை நீக்கிவைப்பது உத்தமம்., வியாதிக்குத் தகுந்தபடி புளி

சமயோசிதமாகவும் பத்தியம் ஏற்படுத்திக்கொள்ளவே ண்டியது.

வேறு.

கமேலா மாவு விராகனெடை-அ, நல்ல உயர்ந்த பெருங்காயம் விராகனெடை-க, இவ்விரண்டையும்சே ர்த்திடித்து வஸ்திரகாயஞ்செய்து கல்வத்திலிட்டுத்தபி ர்த்தண்ணீரைச் சிறுகச் சிறுகவார்த்து ஒருசாமமரை த்து மிளகுப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க-ௗ, பால்குடிக்கிற கு ழந்தைகளுக்கு ஒரு மாத்திரையும் மற்றவர்களுக்குவய திற்குத்தகுந்தபடி யதிகப்படுத்தியும் உபயோகிக்கவே ண்டியது.

உபயோகம்:—குழந்தைகளுக்குண்டாகும் அஜீர மாந்தம், வயிற்றிலுள்ள கிருமிகள் ஆகியவைகள்தீரும்.

சுக்கான்கீரைச்செடி வேர்ப்பட்டைச்சூரணம், க ரிமிளகுச்சூரணம், மஞ்சட்கடுக்காய்த்தோல் சூரணம், சுத்திசெய்த சிவதைவேர்ப்பட்டைச்சூரணம், இவைவ கை-க-க்கு விராகனெடை-ங.

செய்முறை:—இவற்றைக் கல்வத்திலிட்டுச் சுத்த ஜலம்வார்த்து இரண்டு ஜாமமரைத்து மிளகுப்பிரமாண மாத்திரைகள்செய்து நிழலிலுலர்த்திக்கொள்ளவும்.

பிரமாணம்:—மாத்திரை-க உ.

அநுபானம்:—முலைப்பால், தேன், சுக்குக்கஷாய ம் முதலியவைகளாம்.

உபயோகம்:—அள்ளுமாந்தம், பிள்ளைகளுக்குக்காணும் இசிவு, மேற்சுவாசம், மார்ச்சளி முதலியவைகள் தீரும்.

(வேறு)

உலர்ந்தகாக்குப்பூச்சி விராகனெடை-க, தேன் விராகனெடை-ங. இவ்விரண்டையும் கல்வத்திலிட்டொரு சாமமரைத்துக் குழம்புப்பதமா யெடுத்துக்கொள்ளவேண்டும். முலைப்பாலில் வயதிற்குத் தகுந்தபடி ஒன்றுமுதல் மூன்று துளிவரையில்விட்டுப் பானஞ்செய்விக்க மேற்கண்ட ரோகந்தீரும்.

(வேறு)

குசும்பாப்பூ விராகனெடை-க, சிறுபிள்ளை மூத்திரம் விராகனெடை-உ, இவ்விரண்டையுஞ்சேர்த்து அடுப்பில்வைத்து மூன்றிலொருபாகமாகச் சுண்டினபின் இறக்கி வடிகட்டிக் குழந்தைக்குப் பானஞ்செய்விக்கவேண்டும். இவ்விதம் செய்துவந்தால் மேற்கண்ட ரோகந்தீரும்.

(பற்று.)

கருவேலம்பிசின் விராகனெடை-ங, மூசாம்பரம் விராகனெடை-கஉ. இவ்விரண்டையும் பொடித்துச் சோற்றுக்கற்றாழைச்சாற்றை விட்டுக்குழப்பி மார்புமுதலிய ஸ்தானங்களிற்பற்றிட மேற்கண்ட ரோகங்கள் தீரும்.

கோடாசுழி மாத்திரை.

சுத்திசெய்த கெந்தகம், சுத்திசெய்த இரசம், சுத்திசெய்ததாளகம், மேற்றோல்சீவினசுக்குச்சூரணம், மிளகுச்சூரணம், அரிசித்திப்பிலிச்சூரணம், மஞ்சட்கடுக்

காய்த்தோற்சூரணம், தான்றிக்காய்த் தோற்சூரணம், நெல்லிமுள்ளிச்சூரணம், பொரித்த வெண்காரச்சூரணம், திருநூற்றுப் பச்சையிலைச்சாறு, இவைவகை-க-ச்குச்சமனெடை, கையாந்தகரைச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:— கெந்தகத்தையும் இரசத்தையும் கல்வத்திலிட்டு மெதுவாயரைத்து நன்றாய்க்கருத்தபின்பு தனியேயெடுத்து வைத்துக்கொள்ளவேண்டும். தாளகத்தைத்தனியே கல்வத்திலிட்டரைத்து வெண்ணெய்போலானபின்பு முன்னெடுத்து வைத்திருக்கிற இரசகெந்தகச்சூரணம், ஆகிய எல்லாவற்றையும் ஒன்றாய்ச் சேர்த்து ஒருமணிநேரமரைத்துப் பிறகு எடுத்து இரும்புச்சட்டியிற்போட்டுக் கையாந்தகரைச்சாற்றைச் சிறுகச்சிறுகவார்த்து-கஉ-சாமங்கடைந்து பச்சைப்பயறுபிரமாணம் மாத்திரைகளாகச்செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க.

அநுபானம்:—முலைப்பால், தேன், இஞ்சிச்சுரசம் முதலியவைகளாம்.

உபயோகம்:—இந்த மாத்திரைகள் அநேகவியாதிகளில் உபயோகப்படுகின்றன. (இதன் விபரத்தைப்பின்முறையிற் காண்க.) இது பிரதானமாய்ச் சுரமில்லாமலிருக்கிற அள்ளுக்குச் சஞ்சீவிக்கொப்பானது.

### கோடாசுழி (வேறு.)

சுத்திசெய்த இரசம் விராகனெடை-க, சுத்திசெய்த கெந்தகம், சுத்திசெய்த சிவதைவேர்ச்சூரணம், இ

வைவகை-க-க்கு விராகனெடை-உ, மிளகுச்சூரணம் விராகனெடை-ங, பொரித்தவெண்காரச்சூரணம் விராகனெடை-ச, சுத்திசெய்த சிற்றாமணக்குப்பருப்பு விராகனெடை-எ. மஞ்சட்கடுக்காய்த்தோற் சூரணம், சுத்திசெய்த நேர்வாளப்பருப்பு, இவைவகை-க-க்கு விராகனெடை-அ, ஏலரிசிச்சூரணம் விராகனெடை-ஓ, கையாந்தகரைச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இரசத்தையும் கெந்தகத்தையுங் கல்வத்திலிட்டு நன்றாய்க் கறுத்துப்போகிறவரையிலரைத்துப் பிறகு மற்றச் சரக்குகளையுஞ்சேர்த்து ஒருமணி நேரமரைத்து ஒன்றாக மிஸ்ரமமானபின்பு கையாந்தகரைச்சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டு சாமமரைத்துப் பச்சைப்பயறுப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்திச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:--மாத்திரை-க-உ.

அனுபானமும், உபயோகமும்:--மஞ்சட் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், நெல்லிமுள்ளி இவைவகை-க-க்கு விராகனெடை-கஓ, இவற்றை ஒரு ஆழாக்கு ஜலத்திற்போட்டு மூன்றிலொரு பாகமாகச் சுண்டின பின்னிறக்கி இளஞ்சூட்டுடன் பிசைந்து வடிகட்டி மேற்படி கோடாசூழியில் ஒரு மாத்திரையையுங்கரைத்துப் பானஞ் செய்விக்க சுவாசகாசம், கஷ்டசுவாசம், கோழைக்கட்டு, தொண்டைக்கட்டு ஆகியவைகள் தீரும்.

சீனிச்சருக்கரை விராகனெடை-ஓ, தேன் விராகனெடை-ஓ, இவ்விரண்டையு மிஸ்ரமித்து இதில் அடி

மாத்திரையை யனுபானித்துண்ண, பீனிசரோகம், ஜலதோஷம் ஆகியவைகள் தீரும்.

கையாந்தகரைச்சாறு விராகனெடை-க, தேன் விராகனெடை-க, இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட ஒரு மாத்திரையை யனுபானித்துண்ண, வரட்டிருமல் முதலியவை தீரும்.

சிவப்பு நாயுருவி யிலைச்சாறு விராகனெடை-ங தேன் விராகனெடை-ங, இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட மாத்திரைகளில் சமயோசிதம்போல் ஒன்றுமுதல் மூன்றுமாத்திரை வரையில் அனுபானித்துக்கொடுக்க எல்லாவகை விஷங்களுந் தீரும்

நல்ல கெட்டித்தேன் விராகனெடை - க, இதில் மேற்படி மாத்திரையைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண, வாயு சம்பந்தமான ரோகங்கள் தீரும்.

சோம்புத்திராவகம் அல்லது சோம்புக்கஷாயம், விராகனெடை-ங, இதில் மேற்படி மாத்திரையைப் பிரமாணப்படி யனுபானித் துண்ணக் குடல்முறுக்கு ரோகம், வாயுசம்பந்த குன்மம் ஆகியவைகள் தீரும்.

இந்த மாத்திரைகளை ஆட்டு மூத்திரத்திலிழைத்துத் தேகத்தின்மீதுள்ள வெண்புள்ளிகளின்மீது மேற்பூச்சிவர அவை மாறிப்போம்.

இந்த மாத்திரையை முலைப்பாலிலிழைத்து இரண்டு கடுகுப்பிரமாணம் கண்களில் தீட்டிவர கண்பூ, கண்படலம், ஆகியவைகள் தீரும்.

எலுமிச்சம் பழச்சாறு விராகனெடை-உ, இதில் மேற்படி மாத்திரையை யிழைத்துப் பானஞ்செய்விக்க (பிளேக்) மகா மாரிரோகம் தீரும்.

இஞ்சிச்சாறு விராகனெடை-உ, தேன் விராகனெடை-உ, இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட மாத்திரைகளைப் பிரமாணப்படி அனுபானித்துண்ண, எல்லாவகை வாயுசம்பந்த ரோகங்களும் தீரும்.

குறிப்பு.

மேற்கண்ட இரண்டுவகை மாத்திரைகளும் இன்னும் அநேகவகை ரோகங்களில் உபயோகப்படுகின்றன. ஆனால் சமயோசிதம்போல தகுந்த அனுபானங்களில் உபயோகிக்கவேண்டியது.

நேர்வாளச்சுத்தி:--இதனைச் சுத்திசெய்யுங் கிரமம் இதற்குமுன் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் அவசியமானவர்கள் அங்கு பார்த்து அம்முறைப்படி செய்துகொள்ளவும்.

சிற்றாமணக்குப் பருப்புச்சுத்தி:— சிற்றாமணக்குப் பருப்பை உடைத்து அதற்குள்ளிருக்கிற முளையிலையை நீக்கிவிட்டுப் புது ஓட்டில்போட்டு அடுப்பேற்றிச் சிறுதீயாயெரித்து மணம் வருகிறவரையில் வறுத்தெடுத்துக்கொள்வதே இதன் சுத்தியாம். இவ்விதம் சுத்திசெய்யாமற் சேர்த்தால் சிலதேகிகளுக்கு வாந்தியுண்டாகும். மேற்கண்டபடி சுத்திசெய்து உபயோகித்தால் எவ்வித தோஷமுமுண்டாகாது.

பக்கநோவு, பக்கசூலை.

பக்கநோவானது வாயுசம்பந்தத்தினாலாவது, சீதள சம்பந்தத்தினாலாவது உண்டானால் அந்த நோவா

ணது ஒரு இடத்திலேயே நிலைத்திராமல் அங்குமிங்கும் ஓடித்திரிந்து கொண்டிருக்கும். சுரமில்லாதிருக்கும்.

சிகிச்சை.

மேற்சொல் சீனி சுக்கு விராகனெடை உ, ஆமணக்கு வேர்ப்பட்டை விராகனெடை-உ, இவ்விரண்டையுஞ் சிதைத்து ஒரு ஆழாக்கு ஜலத்திற்போட்டு மூன்றிலொரு பாகமாகச் சுண்டவைத்து வடிகட்டிப் பானஞ்செய்ய துவரத் தீரும்.

மேற்படி வியாதிக்குப் பற்று.

எருக்கம்வேர்ப்பட்டை விராகனெடை-உ, இதனைக் கல்வத்திலிட்டுச் சிறுபிள்ளை மூத்திரத்தை வார்த்து வெண்ணெய்போலரைத்து நோவுள்ள விடத்தில் தடவி நெருப்பணலிற் காய்ச்சவும், அல்லது வெயிலிற் காட்டி உலர்த்தவும். இப்படியிரண்டு மூன்றுதடவைகள் செய்தால் அந்தநோவு தீரும்.

மேற்படி பற்று (வேறு)

கலைமான் கொம்புத்தூள் விராகனெடை-க, மிளகுச்சூரணம் விராகனெடை-வ, இவ்விரண்டையுங்கல்வத்தில் தண்ணீர் வார்த்து மைபோலரைத்துக் கொஞ்சங் கொதிக்கவைத்து நோவுள்ள விடத்திற் பற்றிட வேண்டும். இவ்விதம் சில தடவைகள் செய்ய மேற்படி நோவுதீரும்.

மார்நோவுச் சிகிச்சை.

தேவதாரம் விராகனெடை-ஐ, பனைவெல்லம் விராகனெடை-ரு, தேவதாரத்தை யிடித்துச் சூரண

ஞ்செய்து வடிகட்டிப் பிறகு வெல்லத்தைச் சேர்த்த ரைத்து ஒரு மாத்திரையாகச்செய்து உட்கொள்ளவேண்டும். இவ்விதம் அப்போதைக் கப்போதாவது அல்லது இந்தக்கணக்கின்படி முன்னதாகச் சித்தப்படுத்தி வைத்துக் கொண்டாவது உபயோகித்துவர, மார்பு நோவு தீரும்.

## மேற்படி சிகிச்சை (வேறு)

வெந்தயம் விராகனெடை-௧௰, தேன் பலம்-௧. வெந்தயத்தைச் சட்டியிலிட்டு மணம்வரும்படியாகவறுத்து அதில் தேனைவிட்டு ஆழாக்கு ஜலத்தையும்விட்டு மூன்றிலொரு பாகமாகச்சுண்டவைத்திறக்கி வடிகட்டிப் பானஞ்செய்யவேண்டும். இவ்விதம் செய்துவந்தால், நாட்பட்டமார்பு நோவு, கஷ்டசுவாசம், ஆகியவைகள் தீரும்.

## இருமல் ரோகம்.

இருமலானது பக்கநோவு, மார்புநோவு, நுரையீரல் நோவு, ஈரல்வீக்கம், இரத்தங்கக்கல் முதலியரோகங்கள் காரணமாகக்காணும். அந்தச்சமயங்களில் மூலகாரணமான ரோகத்தை நீக்கினால் இருமலுந்தானே போய்விடும். கடவுள் கிருபையால் அந்தந்த வியாதியின் தலைப்பின் அவ்வவற்றின் சிகிச்சைகளையும் எழுதுவாம். ஆகையால் இருமலைப் பொதுவாக இரண்டு வகையாப் பிரிப்போம்.

ஒன்று வறட்சியிருமல், அதாவது இருமினால் அதில் சளி முதலிய ஒன்றும் வெளிப்படாது.

இரண்டாவது கப இருமல் அதாவது:—இருமினவுடன் கபம் வெளிப்படும். மார்பில் குருகுருவென்னு

ஞ் சப்தமிருக்கும். ஆகையால் கபஇருமலாயிருந்தால் கபத்தைப் பக்குவப்படுத்தும் அவுடதங்களை உபயோகிதது கபத்தை நீக்கிச்சுத்திசெய்து பிறகு இருமலுக்காக அவுடதங்கொடுக்கவேண்டும்.

வறட்சி யிருமலாக இருந்தால் கொழுமையான பதார்த்தங்களை உபயோகித்து அவ்விதை நீங்க முயலவேண்டும்.

## இருமல் ரோகச் சிகிச்ஸை

கர்க்கடக சிங்கிச்சூரணம் விராகனெடை-டு, இதனைக் கல்வத்திலிட்டுத் தேனைச் சிறுகச் சிறுகவார்த்து ஒருமணி நேரமரைத்து கடலைப்பிரமாணம் மாத்திரைகளாகச்செய்து வைத்துக்கொண்டு வாயிலடக்கி அதன் சாரத்தை விழுங்கிவருவதால் கபசம்பந்தமான இருமல் ரோகந்தீரும்.

மேற்றோல் சீவின அதிமதுரம், வாதுமைப்பிசின் கருவேலம் பிசின், கோதுமைச்சத்து, கற்கண்டு இவை வகை-ஃ-க்குச் சமனெடை இவற்றைக் கல்வத்திலிட்டு நன்றாய்ப் பொடித்து கொஞ்சம் தேனைவிட்டரைத்து மிளகுப்பிரமாண மாத்திரைகள் செய்து ஒன்று அல்லது இரண்டு மாத்திரைகளை வாயிலடக்கிக்கொண்டு அதன் ரசத்தை விழுங்கிவரக் கபசம்பந்தமான இருமல் வரட்சி இருமல் ஆகியவைகள் தீரும்.

உலர்த்தின கண்டங்கத்திரிப்பூ, அல்லது, தூதுவளைப்பூ ஒருபங்கு மஞ்சட்கடுக்காய்த்தோற் சூரணம்ஒரு பங்கு. இஞ்சிச்சாறு செல்லத்தக்கஅளவு மேற்கண்ட இரண்டு சரக்குகளையும் கல்வத்திலிட்டுப்பொடித்து இச்சாற்றைச் சிறுகச்சிறுகவார்த்து இரண்டுமணிநேர

மரைத்து மிளகுப்பிரமாண மாத்திரைகள்செய்து இர ண்டொருமாத்திரைகளை வாயிலடக்கி அதன்சாரத்தை யுட்கொண்டுவர, வறட்சியிருமல், கபஇருமல் ஆகியவை கள்தீரும்.

மிளகு, சுத்திசெய்த பூநீறு, வறுத்தரைத்த கொ ண்டைக்கடலைமா, இவைவகை-க.க்குச்சமன், இஞ்சிச் சாறு செல்லத்தக்க அளவு. மேற்படி சரக்குகளைக் கல் வத்திலிட்டு மேற்படி யிஞ்சிச்சாற்றைச் சிறுகச்சிறுகவா ர்த்து ஒருமணிநேரமரைத்துக் கடலைப்பிரமாண மாத்தி ரைகள்செய்து வைத்துக்கொண்டு இரண்டொரு மாத் திரைகளை வாயிலடக்கி அதன் இரசத்தைவிழுங்கிவர மேற்கண்ட இருவகை யிருமல்களும்தீரும்.

மஞ்சள்சூரணம் விராகனெடை-ரு, பூநீற்றுத் தூ ள் அல்லது சோடாஉப்புத்தூள் விராகனெடை-கவ. இவ்விரண்டையுஞ் சேர்த்துக்கல்வத்திலரைத்துக்கொ ஞ்சம் ஜலம்வார்த்து ஒருசாமமரைத்து நான்கு குன்றி மணியெடையுள்ள மாத்திரைகளாகச்செய்து உலர்த்தி வைத்துக்கொள்ளவும். வேளை-க-க்கு மாத்திரை-க-உ- ஆகக்காலை மாலை யிரண்டுவேளையும் உபயோகித்துவர வேண்டும். இவ்விதம் ஒருவாரம் வரை உபயோகித்து வந்தால் எவ்வித இருமலுந்தீரும்.

ஷை (வேறு.)

மிளகு, வெண்காரம், கற்கடகசிங்கி, இலவங்கம், சிறுதேக்கு, மஞ்சட்கடுக்காய்த்தோல், அரிசித்திப்பிலி, இந்துப்பு இவற்றைத்தனிதனி யிடித்த தூள் வகையொன் றுக்குப்பலம்-வ, மேற்சொல் சீவியிடித்த சுக்குச்சூரண

ய்பலம்-உவ, எலுமிச்சம்பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:--எல்லாச்சூரணங்களையுங் கல்வத்திவிட்டு மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டு சாமமரைத்து நான்கு குன்றிமணியெடையுள்ள மாத்திரைகளாகச்செய்து நிலலிலுலர்த்தி வைத்துக் கொள்வவேண்டும்.

உபயோகம்:—படுக்கைக்குப் போகும்போது ஒன்று அல்லது, இரண்டுமாத்திரைகளை மென்று சாப்பிட்டுவிட்டுப் படுத்துக்கொள்ளவேண்டும். இவ்விதம் ஒருவாரம் செய்துவந்தால் எவ்வித இருமலுந்தீரும்.

ஷை (வேறு.)

கண்டங்கத்திரிவேர், அதிமதுரம், கர்க்கடகசிங்கி, சன்னராஷ்டம், மஞ்சட்கடுக்காய்த்தோல், இவற்றின்சூரணம் வகை-க-க்கு விராகனெடை-க, கருவேலம்பட்டைச்சூரணம் விராகனெடை-டு. இவை யெல்லாவற்றையுங் கல்வத்திலிட்டுக் குளிர்ந்த ஜலம்வார்த்து ஒரு சாமமரைத்து ஒரு குன்றிமணிப்பிரமாணமுள்ள மாத்திரைகளாகச்செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும். இதில் இரண்டொரு மாத்திரைகளை வாயிலடக்கி இதன்ரசத்தை விழுங்கிவரக்கபசம்பந்தமான இருமல், தொண்டைக்கட்டு, கோழைக்கட்டு, கபக்கட்டு ஆகியவைகள் தீரும்.

ஷை (வேறு.)

மிளகு புங்கம்விதைப்பருப்பு, கண்டங்கத்திரிவிதை, பொரித்தவெண்காரம், வெள்ளைக்காய்ச்சுக்கட்டி

இவை வகையொன்றுக்கு விராகனெடை-உ, அபினி விராகனெடை-க, இஞ்சிச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி சரக்குகளைத் தூள்செய்து எல்லாவற்றையு மொன்றாகச்சேர்த்துக் கல்வத்திலிட்டு மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுகவிட்டு ஒருசாமமரைத்து ஒரு குன்றிமணியெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவேண்டும்.

உபயோகம்:—இதில் இரண்டொரு மாத்திரைகளை வாயிலடக்கிக்கொண்டு இதன் ரசத்தை விழுங்கிவாக்கப இருமல், சீதளத்தாலுண்டான இருமல், கோழைக்கட்டு, கபக்கட்டு ஆகியவைகள் தீரும்.

ஷை (வேறு.)

மஞ்சட்கடுக்காய்த்தோல், புங்கம்விதைப்பருப்பு, கர்க்கடகசிங்கி, மிளகு, அதிமதுரம் இவற்றின் சூரணம் வகை-க-க்குச் சமனெடை. இவைகளெல்லாவற்றையும் ஒன்றாகச்சேர்த்துக் கல்வத்திலிட்டுத் தண்ணீர்வார்த்து ஒருசாமமரைத்து குன்றிமணிப்பிரமாணம் மாத்திரைகளாகச்செய்து உலர்த்தி வைத்துக்கொள்ளவேண்டும். இதில் இரண்டொரு மாத்திரைகளை வாயிலடக்கிஇதன் ரசத்தை விழுங்கிவர இருமல், கபக்கட்டு, தொண்டைக்கட்டு ஆகியவைகள் தீரும்.

ஷை (வேறு)

கசகசா பலம்-க, (இதனைச்சட்டியில் மணம்வரும்படியாக வறுத்து அம்மியில் வைத்தரைத்துத் தூள்செய்துகொள்ளவேண்டும்.) இந்துப்புத்தூள் விராகனெடை-க, மிளகுத்தூள் விராகனெடை-க, மேற்கண்ட மூ

ன்றையும் கல்வத்திற்சேர்த்து ஒருமணிநேரமரைத்துப் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்திக்கொள்ளவும். இந்தச் சூரணத்தில் வேளை ஒன்றுக்கு நான்கு குன்றிம ணியெடைபாக தினமொன்றிற்கு மூன்றுவேளை தினி பேயாவது, தேன், நெய், வெண்ணெய் முதலியவைக ளில் ஒன்றில் அனுபானித்தாவது உட்கொண்டுவரப் பீனிச சம்பந்தமான இருமல், வறட்சியாலுண்டான இ ருமல் ஆகியவைகள் தீரும்.

ஷை (வேறு.)

சீமைமுள்ளங்கிக் கிழங்கு ஒன்று, இதன்மேல் மூ ன்று சீலைமண்செய்து அடுப்பில்போட்டு வெந்தபதத்தி லெடுத்து மேற்கவசத்தை நீக்கிப்பிழிந்து இஷ்டமான அளவு கற்கண்டுத்தூள் போட்டுக்கரைத்து இளஞ்சூ ட்டான பதத்திற்பானஞ்செய்யவேண்டும். இவ்விதம் கா லைமாலை யிரண்டுவேளையும் பானஞ்செய்துவர இருமல் ரோகம், கபக்கட்டு, தொண்டைவறட்சி ஆகியவைகள் தீரும்.

ஷை (வேறு)

மேற்றோல்சீவின அதிமதுரச்சூரணம், வறுத்தெடு த்த மிளகுச்சூரணம், இவைவகை-க-க்கு விராகனெ டை-உ, கற்கண்டுத்தூள் விராகனெடை-ச. இவைகளை க்கல்வத்திலிட்டுக் கொஞ்சம் ஜலம்வார்த்தரைத்து இர ண்டு குன்றிமணி நிறையுள்ள மாத்திரைகளாகச்செய்து வைத்துக்கொள்ளவும். இராக்காலங்களில் இரண்டொ ருமாத்திரைகளை வாயிலடக்கி அதன்ரசத்தை விழுங்கி வரக் கபசம்பந்தமான இருமல் தீரும்.

### ௬ மாத்திரை.

மஞ்சட்கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், கற்கடகசிங்கி, சிறுதேக்கு, அரிசித்திப்பிலி, படிக்காரம், வெண்காரம், கொடிவேலி வேர்ப்பட்டை, இந்துப்பு, மேற்றோல் சீவினசுக்கு, இவற்றுள் இடிக்கவேண்டியவைகளை யிடித்துச்சூரணித்து வஸ்திரகாயஞ்செய்து கொள்ளவேண்டும். இவைவகை-க-க்குப்பலம்-௧. (வெண்காரத்தைப் பொரித்துக்கொள்ளவேண்டும்.) கையாந்தகரைச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—உப்புகளை முன்னர் கல்வத்திலிட்டு நன்றாய்ப் பொடித்துக்கொள்ளவேண்டும். பிறகு மற்ற சூரணங்களையுஞ்சேர்த்து மேற்படி கையாந்தகரைச்சாற்றைச் சிறுகச்சிறுகவார்த்து நான்குசாமமரைத்து எட்டுக்குன்றிமணியெடையுள்ள மாத்திரைகளாகச்செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க வீதம் காலைமாலை யிரண்டுவேளையும் உபயோகிக்கவேண்டியது.

அனுபானம்:—சூடான தேகிகளுக்கு அதிமதுரக்கஷாயம், மிளகுக்கஷாயம் ஆகியவைகளில் உபயோகிக்கவேண்டியது.

உபயோகம்:—பீனிச சம்பந்தமான இருமல், கப சம்பந்தமான இருமல், கபக்கட்டு, கோழைக்கட்டு, தொண்டைக்கட்டு முதலிய ரோகங்கள் தீரும்.

பத்தியம்:—தேக சுபாவத்திற்குத் தகுந்தபடி யேற்படுத்திக்கொள்ளவும்.

இருமல்ரோகக்காரர்களுக்கு எண்ணெயை ஆசனவாயில் தடவிவைத்தால் உடனே இருமல் சாந்தமாகும்.

அரிசித்திப்பிலியை சூடாகு குடித்ததுபோல சுங்கானில் வைத்தும் புகைக்குடித்து வந்தால் நாட்பட்ட இருமல்ரோகம் குணமாகும்.

எட்டிக்கொட்டையை நெய்யில் வறுத்துக் கரியாக்கித் தூள்செய்து வைத்துக்கொண்டு இரண்டு குன்றிமணியெடை தேனில் அல்லது, நெய்யில் மர்த்தித்துச் சாப்பிடவேண்டும். இவ்விதம் காலைமாலை யிரண்டுவேளையும் உபயோகித்துவர எல்லாவகை யிருமல்களுந் தீரும்.

இருமற் சூரணம்.

இந்துப்பு, வளையலுப்பு, கல்லுப்பு, படிக்காரம், வெண்காரம், ஓமம் இவைவகை-க-க்குப் பலம்-க, கருவேலம்பிசின் சூரணம் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—எல்லாவற்றையும் ஒன்றாகச்சேர்த்துப்பொடித்து ஒரு ஓட்டிலிட்டு மேலோடுமூடி மூன்று சீலைமண்செய்து அரைக்கெஜபுடம் இட்டு ஆறினபின் னெடுத்துக் கல்வத்திற்பொடித்து அதன் சமனெடை மேற்படி கருவேலம்பிசின் சூரணத்தைச்சேர்த்து வைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—குன்றிமணியெடை-எ-அ, காலைமாலை யிரண்டுவேளையும் உபயோகிக்கவேண்டும்.

உபயோகம்:—எல்லாவகை இருமல்களும் தீரும்.

## இருமற்பாயசம்.

கோதுமை உமி படி-ஹ. இதனை க-ஆழாக்கு ஜலத்தில் ஒரு இரவு ஊறவைத்து மறுநாட்காலையில்கன்ருப்பிசைந்து வடிகட்டிப்பாலை யெடுத்துக்கொள்ள வேண்டும். மேற்சொல் நீக்கின வாதுமைப்பருப்பு, ஜீரணத்திற்குத் தகுந்தபடி இரண்டு பருப்புமுதல் பதினென்று பருப்பு வரையிலாம். இதனை அம்மியில் வைத்து மைபோலரைத்து ஜலத்திற்கரைத்து வடிகட்டிப்பாலெடுத்துக் கொள்ளவேண்டும். இம்மூவகைப் பால்களையும் ஒன்றாகச்சேர்த்து அடுப்பேற்றிக் காய்ச்சிக்கொஞ்சம் குழம்பான பதத்தில் அவரவர்களிஷ்டப்படி சீனிச்சர்க்கரையை அல்லது, கற்கண்டைச் சேர்த்துப் பிறகு கொஞ்சம் காய்ச்சிப் பாயச பதத்திலிறக்கிவைத்து இளஞ்சூட்டுடன் ஜீரண சக்திக்குத் தகுந்ததுபோல் பானஞ்செய்யவேண்டும். இவ்விதம் பிரதிதினமும் இரண்டு, அல்லது, மூன்றுதடவை பானஞ்செய்துவரலாம். இப்படிச் செய்துவந்தால் இருமல் சாந்தப்படுவதுடன் இருமலினாலுண்டாகும் தூர்ப்பலம், ஆயாசம், களைப்பு முதலியவைகள் தீரும். இருமல் தேகிகளுக்கு இதனை ஆகாரமாகச்செய்து உபயோகித்து வரலாம்.

## சிறுபிள்ளை இருமலுக்கு.

வெண்காரம் பலம்-க, இதில் அரைப்பலத்தையெடுத்துப் பொரித்துக்கொள்ளவேண்டும். அரைப்பலத்தைப் பொரிக்காமற்சேர்த்து இரண்டையும் பொடித்து இவ்விரண்டிற்குச் சமனெடை மிளகுத்தூளைச்சேர்த்து சோற்றுக் கற்றாழைச் சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு ஒரு சாமமரைத்து ஒரு குன்றிமணியெடை மா

த்திரைகளாகச்செய்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

பிரமாணம்:--மாத்திரை-க-உ, பிள்ளையின் வயதிற்குத் தகுந்தபடி உபயோகிக்கவும்.

அநுபானம்:--மூலைப்பால், தேன் ஆகியவைகளாம்.

உபயோகம்:—குழந்தைகளுக்குக் காணும் எல்லாவகை யிருமல்களும் தீரும். சுகுமாரதேகிகளுக்குக் காணும் இருமல்களிலும் உபயோகிக்கலாம்.

காக்கையின் மலத்தை ஒரு சிறு பையிற்போட்டு முடிந்து சிறு பிள்ளைகள் கழுத்திற்கட்டி தொங்கவிட்டு வைத்தால் இருமல் ரோகஞ் சாந்தமாகுமென ரியாஜே ஆலம் கீரீ யென்னுங் கிரந்தத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது.

மஞ்சட் கடுக்காய்த்தோற்சூரணம், தான்றிக்காய்த்தோற்சூரணம், பெல்லிவற்றற்சூரணம், இந்துப்புத்தூள், மாதுளை ஓட்டுச்சூரணம். பூனைக்காலி விதைச்சூரணம், வாசனைப் புல்லைச் சுட்டெரித்த சாம்பல், கண்டங்கத்திரியை யெரித்த சாம்பல், இவை வகை-க-க்குப் பலம்-உ. அரிசித்திப்பிலிச்சூரணம், மிளகுச்சூரணம், இவை வகை-க-க்குப் பலம்-வ.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றாய்ச்சேர்த்து வைத்துக்கொள்வதே யாம்.

பிரமாணம்:--குன்றிமணி யெடை-எ-அ.

அநுபானம்:--சர்க்கரை, தேன் முதலியவைகளாம்.

உபயோகம்:--எல்லாவகை யிருமல்களும் மூன்று நாளைக்குள் குணமாகும்.

வேறு.

மாதுளைத் தோலைபிடித்தசூரணம், அரிசித்திப்பிலிச்சூரணம், கற்கடக சிங்கிச்சூரணம், இவை வகைக-க்கு விராகனெடை-கஉ, இந்துப்பு, கறுப்புப்பு, கல்லுப்பு இவற்றின் தூள் வகை-க-க்கு விராகனெடை-ரு, மஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம் விராகனெடை-சு.

செய்முறை:--இவை யெல்லாவற்றையும் ஒன்றாய் மிஸ்ரமித்துக் கல்வத்தில் அரைமணி நேரம் அரைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:--குன்றிமணி யெடை-ரு-அ.

அனுபானம்:--தேன், சன்னராஷ்டிரக் கஷாயம், மிளகுக்கஷாயம் முதலியவைகளாம்.

உபயோகம்:----எல்லாவகை இருமல்களுந் தீரும்.

(௯௪) வேறு.

கற்கடக சிங்கிச்சூரணம், மேற்றோல் சீவிபிடித்த அதிமதுரச் சூரணம், கருவேலம்பிசின் சூரணம், கசகசாத்தோற் சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம், கடல் தேங்காய்ச்சூரணம், இவை வகை-க-க்குப் பலம்-உ.

செய்முறை:--இவை யெல்லாவற்றையும் ஒன்றுக் சேர்த்தரைத்து மிஸ்ரமித்துக் கொள்வதேயாம்.

பிரமாணம்:--விராகனெடை-உ, ஙு.

அனுபானம்:---தேன், சர்க்கரை, ஆகியவைக ளாம்.

உபயோகம்:-- எல்லாவகை யிருமல்களும் தீ ரும்.

## இருமல் ஷர்பத்.

மேற்றோல் சீவின அதிமதுரம், சோம்பு, அத்தி விதை, மயிர்ச்சிக்கி, இவை வகை-க-க்கு விராகனெ டை-உ, ஜ-பா வெந்தயம் இவை வகை-ஃ-க்கு விரா கனெடை-௬, சீமை நறுவிலிப்பழம் பலம்-௩, கசகசா பலம்-௫, கசகசாத்தோல் பலம்-க௫, சீனிச்சர்க்கரை பலம்-௫.

செய்முறை:—மேற்கண்ட சரக்குகளுள் சிதைக்க வேண்டியவைகளைச் சிதைத்தும் விதைநீக்க வேண்டி யவைகளை விதை நீக்கியும் முக்காற்படி ஜலத்தில் உச மணிநேரம் ஊறவைத்து அடுப்பேற்றிச் சிறுதீயாயெரி த்து மூன்றிலொரு பாகமாகச் சுண்டினபின் இறக்கி வடிகட்டின கஷாயத்தில் சர்க்கரையைச் சேர்த்து அடுப்பேற்றிச் சிறுதீயா யெரித்துப் பாகுபதத்திலி றக்கி ஆறினபின் சீஷாவிற் பத்திரப்படுத்த வேண் டும்.

பிரமாணம்:—விராகனெடை-உ, ௩.

உபயோகம்:—-எல்லாவகை யிருமல்களும் தீ ரும்.

## வேறு.

சரக்கொன்றைப்புளி தேவையான அளவு எடுத் து ஜலத்திற்கரைத்து வடிகட்டித் திப்பிநீக்கி அடுப்பே பேற்றிச் சிறுதீயா யெரித்துக் குழம்புப்பதமாகச் சு

ண்டவைத்துப் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்த வேண்டும். இப்படிச் செய்ய ஏலாதவர்கள் இங்கிலீஷ் மருந்து ஷாப்புகளில் விற்கப்படும் சுத்திசெய்த சரக்கொன்றைப் புளியைவாங்கி உபயோகித்துக்கொள்ளலாம். மேற்கண்ட விதமாகச் சுத்திசெய்த சரக்கொன்றைப் புளி ஒருபங்கு, சீனி இரண்டு அல்லது, மூன்று பங்கு. இவ்விரண்டையு மிஸ்ரமித்துத் தேக சுபாவத்திற்குத் தகுந்தபடி விராகனெடை-க, உ. வீதம் பிரதிதினமும் இரண்டு அல்லது, மூன்று தடவை உபயோகித்து வந்தால் மலபந்தத்தை நீக்கி இருமலைப் போக்கும்.

ஷை (வேறு.)

சரக்கொன்றைப் புளிபலம்-ரு. (இதனை மூன்று ஆழாக்கு ஜலத்திற்போட்டுக் கரைத்து வடிகட்டித்திப்பியை நீக்கிவிட்டு இதில் பத்துப்பலம் சீனிச்சர்க்கரையைச் சேர்த்து அடுப்பேற்றிச் சிறு தீயாயெரித்துக்குழம்புப் பதமான பக்குவத்தில் இறக்கி ஆறினபின் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப்படுத்தவும். அவசியமானபோது வேளை யொன்றுக்கு விராகனெடை-ரு, அல்லது சு-வீதம் சோம்புத்திராவகம், அல்லது சோம்புக்கஷாயத்துடன் சாப்பிடவேண்டும். இவ்விதம் பிரதிதினம் ஒருதடவை அல்லது, இரண்டு தடவைசெய்து வர மலபந்தத்தை நீக்கி மார்பிலுள்ள கபத்தை வெளிப்படுத்தி இருமலைச் சாந்தப்படுத்தும்.

வேறு.

ஆளி விதையை வறுத்திடித்த சூரணம் ஒருபங்கு. தேன் இரண்டுபங்கு. இவ்விரண்டையு மிஸ்ரமித்து வைத்துக்கொண்டு வேளை ஒன்றுக்கு இரண்டு அ

ல்லது, மூன்று விராகனெடை வீதம் பிரதிதினமும் ஒன்று அல்லது, இரண்டுதடவை உட்கொண்டுவந்தால் இருமலைச் சாந்தப்படுத்தி அங்கு கப உற்பத்தியாகாமற் றடுக்கும். பக்கநோவு குணப்படும்.

விதை நீக்கின திராக்ஷப்பழம் விராகனெடை உ௨, மிளகுச்சூரணம், சிறுதேக்குச்சூரணம், கோரைக்கிழங்குச்சூரணம், கடுக்காய்ப் பிஞ்சுச்சூரணம், இவை வகை -க-க்கு விராகனெடை-க௨, சுத்தமான தேன் பலம்-க.

செய்முறை:—மேற்படி சூரணங்களை யெல்லாம் ஒன்றுப்கலந்து திராக்ஷப்பழத்துடன் சேர்த்து அம்மியில் அரைக்கவேண்டும். அரைக்கும்போது தேனைச் சிறுகச்சிறுகவார்த்து திரள்பதத்தில் வ-விராகனெடை ௩-விராகனெடை உள்ள மாத்திரைகளாகச் செய்து வைத்துக்கொள்ளவும்.

உபயோகம்:—இந்த மாத்திரைகளில் ஒன்றை முலைப்பாலிற் கரைத்துப் பானஞ் செய்விக்கவேண்டும். இவ்விதம் காலைமாலை இரண்டுவேளையும் செய்வித்து வந்தால், இருமல், சுவாசம், நுரையீரல்களிலுள்ளகெடுதிகள், கபக்கட்டு தொண்டைக்கட்டு, ஆகிய இவைகள் தீரும். இதனைச் சிறு பிள்ளைகளுக்கும் உபயோகிக்கலாம். ஆனால் குறைந்த அளவாக உபயோகிக்கவேண்டும்.

வேறு.

கடுக்காய்ப்பிஞ்சுச்சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம், அதிமதுரச்சூரணம், கருவேலம்பிசின் சூரணம்

